# இன்றைய தென்னக இலக்கியப் போக்கு

ஆசிரியர் :

மணவை முஸ்தபா, எம்.ஏ.

விலை : ரூ 50/-

வெளியீடு :

மீரா பப்ளிகேஷன்

AE 103, அண்ணாநகர்

சென்னை-600 040.



## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Indraya Thennaka Ilakkia Pokku (Modern Trends in Southern Literatures) |
| Author | ; | Manavai Mustafa |
| Language | : | Tamil |
| First Edition | ; | 1980 |
| Re-Edition | : | 1997 |
| Copyright holder | : | Author |
| Paper used | ; | 11.6 kg Cream wove |
| Size of the book | : | Crown Octovo |
| Printing Points used | , | 10 points |
| No. of Pages | : | 260 |
| Price | : | Rs. 50/- |
| No. of Copies printed | : | 1,000 |
| Printer | : | Meeraa Press AE 103, Anna nagar, Madras-600 040. |
| Binding | : | Paper back |
| Publishing place | : | Meeraa Publication AE 103, Annanagar, Chennai-600 040. |
| Subject | : | Literary Criticism |

# என்னுரை

குறிப்பிட்ட சில விஷயங்களையே வளைய வளைய வந்து அலுப்புச் சலிப்பின்றி எழுதிக் குவிப்பது நமக்குள்ள பெருமைகளுள் ஒன்று. நம்மைச் சுற்றியுள்ள பிற மொழிகளில் என்னதான் நடக்கிறது என்பதைப் பற்றி என்றுமே நாம் கவலைப்பட்டதில்லை. இங்கு மட்டுமா இந்நிலை, அங்கும் அதுதான் நிலைமை.

இந்நிலைமையைச் சற்று நகர்த்திப் பார்க்க, நான் ஆசிரியனாக இருந்த 'புத்தக நண்பன்' மாத இதழ் மூலம் ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கன்னட, தெலுங்கு, மலையாள மொழிகளில் கவிதை, புதினம், சிறுகதை, திறனாய்வு போன்ற துறைகளில் புகழ் பெற்ற வாழும் எழுத்தாளர்களை வகைக்கு ஒருவராகத் தேர்வு செய்து அவர்தம் படைப்புகளை விமர்சிப்பதன் மூலம் அங்குள்ள இன்றைய இலக்கியப் போக்குகளை உரிய முறையில் நம்மவர்களுக்கு உணர்த்துவதே அம்முயற்சி. 'புத்தக நண்பன்' மறைவுக்குப்பின் 'நூலகம்' மாத இதழில் அப்பணியைத் தொடர்ந்தேன். திருமதி லட்சுமி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஊட்டிய உற்சாகத்தால் அப்பணி மூன்றாண்டுகள் தொடர்ந்தது. அதன விளைவே இப்போது உங்கள் கரங்களில் தவழும் இந்நூல். படித்துப் பாராட்டியதோடு அஃது நூல் வடிவில் வெளிவரவேண்டும் என வலியுறுத்தி வந்தவர் திறனாய்வுச் செல்வர் திரு சோ. சிவபாதசுந்தரம் அவர்கள். அதற்கிணங்க கன்னட, தெலுங்கு, மலையாள

மொழி இலக்கிய வரலாற்றை மூன்று கட்டுரைகளில் ஒரு கண்ணோட்டமாக (சர்வே) கொடுத்திருக்கிறேன். இதன் மூலம் ஒரு அடிப்படை விஷய ஞானத்தோடு அம்மொழி களின் இலக்கியப் போக்குகளை வாசகர் எளிதாக அறிந் துணர முடியும் என்பது என் நம்பிக்கை.

கன்னட, தெலுங்கு, மலையாள மொழி இலக்கியப் போக்குகளைச் சுட்டிக்காட்டும்போது ஆங்காங்கே தமிழ் இலக்கியப் போக்குகளைச் சுட்டிக்காட்டி ஒப்பீட்டாய்வு செய்துள்ளேன். தமிழ் வாசகர்களுக்குத் தமிழ் இலக்கியப் போக்குகள் நன்கு தெரிந்த ஒன்றே என்பதால் அஃது தனியே விளக்கப்படாமல் தவிர்க்கப்பட்டு பிற தென்னக இலக்கியப் போக்கு விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

விடுதலைப் பொன்விழா ஆண்டில் காலடி எடுத்து வைத்துள்ள நேரத்தில் இம்மறுமதிப்பு வெளிவருகிறது. 1947 ஆகஸ்ட் திங்களுக்குப்பின் கடந்த ஐம்பது ஆண்டு களில் ஏற்பட்டுள்ள தென் மொழிகள் இலக்கிய வளர்ச்சி யையும் அதன் போக்குகளையும் ஆயும் முயற்சியாகவும் ஒரு வகையில் இந்நூல் அமைந்துள்ளதெனலாம. இந் நூலுள் அலசப்பட்ட இலக்கிய வாணர்கள் பலரும் உரு வாக்கிய இலக்கியப் படைப்புகள் விடுதலைக்குச் சற்று முன் பின்னாக வெளிவந்தவைகளாகும்.

தென்னக மொழி இலக்கிய வளர்ச்சியை மட்டுமல் லாது அவர்களிடையே உருவாகி எழுதது வடிவில் வெளிப்பட்ட சிந்தனைப் போக்குகளையும் உய்த்துணர இஃது வழியாயமைகிறது. ஒருமைப்பாட்டுணர்வு வலுப் பட மனிதர்கள் ஒருவரையொருவர் புரிந்து கொள்ள உள்ளத்தால் நெருங்கிவர வேணடும். அப்போது தான் உருவாகும் ஒருமைப்பாட்டுணர்வு வலுப்படவும் நிலைபெறவும் முடியும். அதற்கு இத்தகைய நூல்கள் கருவிகளாக அமைய முடியும் என்பது என திட நம்பிக்கை.

இன, மொழி, பிராந்திய உணர்வுகளைக் கடந்த நிலையில் இதயங்கள் ஒருங்கிணையவும் அதன் மூலம் ஒருமைப்பாட்டுணர்வு வலுப்பெறவும் எனது இம் முயற்சி பயன்படும் எனப் பெரிதும் நம்புகிறேன்.

இதற்குச் சிறந்ததோர் முன்னுரையை ஆங்கிலத்தில் வழங்கிய டாக்டர் சி.ஆர். சர்மா அவர்கட்கு என் இதயம் நிறைந்த நன்றி.

முதற்பதிப்பை ஆதரித்தது போன்றே இம்மறு மதிப்பையும் தமிழ்கூறு நல்லுலகு ஆதரிக்கும் என நம்புகிறேன்.

சென்னை-40
8-5-1997

அன்பன்
மணவை முஸ்தபா

# FOREWORD

Addressing the Mother Bharat, Subramania Bharathi the bard of resurgent Tamilnadu, observed; She speaks eighteen tongues; yet the thought is one.

Vemana, the celebrated rationalistic Telugu poet of the 17th century, said the tongues may be diverse but the inner content is the same.

These observation remind us of the fact that indian literature is one though written in different languages. Political or other ideology may divide us;but literature unites us and unity is the need of the hour. It is, therefore needless to mention that through literature we can achieve emotional integration which is the bedrock of national unity. In other words, literature is an effective binding force in a multilingual country like ours. But this will be possible only through snstaind efforts of writers and scholars belonging to various languages. And the scholar-writer Thiru Manavai Mustafa's present monograph is one such effort.

Our Knowledege about the indian writers. past or present is very meagre, though several institutions and individuals have been striving hard to properly introduce them to the lovers of literature. A careful and unbiased study of the work of different writers of different languages will considerably help the growth of comparative literature.

Thiru Mustafa's book is a collection of about forty well-written articles on modern writers belonging to Kannada, Malayalam and Telugu. Not only has he taken pains to collect valuable information about these writers of repute but has also presented it in chaste and flowing langauage. nformative, and interestiong, the monograph, I am sure

will be warmly welcomed by all discerning readers since it is the first of its kind in Tamil. Besides being biographical sketches, these articles also serve as critical appraisals of the work done by various writers, providing the Tamil reader an opportunity to get himeslf acquainted with the contemporary trends in literatures available in the other three major South Indian languages.

Besides the learned author, the sponsors of this useful publication, Meera Foundation, also immensely deserve our praise I understand that the letters in the word Meera stand for Modernity, Equality, Enlightenment, Reformation and Amelioration, The ideals are no doubt, lofty and I am confident that they could be achieved through lierature as long as it aims at the good of the world.

I once again congratulate Thiru Manavai Mustafa for bringing out a learned publication which will be a valued addition to any Tamil Library.

I wish many more such writings from his pen.

Madras
25 September, 1980

C. R. SARMA

# கன்னட இலக்கியம்

மேற்கே அரபிக் கடலையும் கிழக்கே ஆந்திர மாநிலத்தையும் வடக்கே மகாராஷ்ராவையும் தெறகே கேரளாவையும் தமிழ்நாட்டையும் எல்லைகளாகக் கொண்டுள்ள கர்நாடக மாநிலத்து மொழியான கன்னடம் தமிழுக்கு அடுததபடியான பழம் பெருமை மிக்க மொழியாகும்.

ராஷ்ட்ரகூடர்கள், சாளுக்கியர்கள், ஹொய்சாலர்கள், விஜயநகர சக்கரவர்த்திகள் எனப் பல்வேறு ஆட்சியாளர்களால கர்நாடகாவின் இலக்கியம், பண்பாடு, கவின்மிகு நுண் கலைகள் செழுமையாகக் காலந்தோறும் வளர்க்கப்பட்டு வந்தன என்றாலும் கவிதையைப் பற்றிய கவிராஜமார்கா (கி.பி. 825) தான் முதல் கன்னட நூலாகக் கிடைத்தது. உரைநடையில் கிடைத்த முதல் நூல் சிவக்கோட்டியாச்சார்யா எழுதிய 'வொட்டராதனெ (கி,பி 925) என்பதாகும். அது ஒரு சிறுகதைத் தொகுப்பு நூல் என்பது இங்குக் கவனிககததக்கதாகும்,

பிற தென்னக மொழிகளைப் போன்றே கன்னட மொழியும் சமஸ்கிருதத்தின் பலமான தாக்குதலுக்கு இலக்காகி அதன் செல்வாக்கு ஓங்கிய நிலையில் கனனட இலக்கியப் படைப்புகள் உருவாயின.

சமய அடிப்படையில் உருவான இலக்கியப் போக்கில் ஒரு புது அததியாயமாக, சமுதாயக் கண்ணோட்டத்தோடு, விஜயநகர சாம்ராச்சிய அழிவுக்குப் பிறகு ஏற்பட்ட சமூக மாற்றங்களைக் கருவாகக் கொணட கவிதைகளை சர்வக்ஞன் என்ற வசைக் கவிஞன இயற்றியதாக கனனட இலககிய வரலாறு கூறுகிறது.

கன்னட இலக்கிய வளாச்சிப் பாதையில் சமஸ்கிருதத்தின் செல்வாக்கு எப்படி வடமொழி இலக்கியங்களும் அதன் செலவாக்கோடு இணைந்த புதிய கன்னட இலக்கியங்களும் உருவாகக் காரணமாக இருந்ததோ, அதே போன்று மேனாட்டினரின வருகையின வாயிலாக மேனாட்டு இலக்கியங்களும் அவற்றின பல்வேறு வகைகளும், அவற்றின செல்வாக்கினால் எழுநத இலக்கிய வகைகளையும கனனட மொழி பெற ஏதுவாயிற்று. இத்தகைய புதிய இலககிய வகைகளின மூலமாக புதிய சிந்தனைகளும் கணணோட்டமும் படித்தவர்களிடையேயும் படைப்பாளர்களிடையேயும எழலாயிற்று.

ஒருபுறம் ஆங்கில மொழி மூலமாக அறிமுகமான மேனாட்டு இலக்கிய வகைகளின பல்வேறு அமசங்களை அப்படியே கண்மூடித்தனமாகப் பின்பற்றி கனனட இலக்கியங்கள் உருவாக்கப்பட்டன. மறறொருபுறம் ஆங்கில இலக்கிய அமைப்புகளை கனனட மொழிககேயுரிய இலக்கிய வடிவஙகளோடு இணைத்து, ஒரு சில அமசங்களில் மட்டுமே மாற்றங்களையும திருததங்களையும் ஏற்படுத்தி இலக்கியங்கள் உருவாக்கப்பட்டன. மொததததில் இவ்விரண்டு போக்குகளாலும் கன்னட இலக்கியம் தரத்தில் மட்டுமல்லாமல் அளவிலும் பெருக்கமடையலாயின.

ஆங்கிலம போன்ற மேனாட்டு மொழிகளிலிருந்து மட்டுமல்லாது மராததி, வங்காளி, இந்தி, தமிழ் போன்ற இந்திய மொழிகளிலிருந்தும் இலக்கிய இறக்குமதிகள வெகுவாக நடைபெற்றன.

பி.எம். ஸ்ரீ கண்டயயா ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்த கவிதைகளும் கோலகநாத் மராத்தி மொழியிலிருநது பெயர்த்த கதை இலக்கியங்களும் இளைஞர்களிடையே படைப்பிலக்கிய ஆர்வததை ஊட்டி வளர்க்கலாயின.

கன்னட புத்திலக்கியத் துறையின் பொற்காலததை தோற்றுவித்து முடுக்கிய பெருமை முப்பெரும இலக்கியக குழாமகளைச் சாரும பி.எம். ஸ்ரீ கண்டய்யா, மாஸ்தி வேங்கடேச ஐயங்கார், டி.வி. குண்டப்பா ஆகியோர் தலைமையில் இயங்கிய 'தாளிரு' குழு; பஞ்சே மற்றும் கோவிந்தபை தலைமையில் செயல்பட்ட 'மங்களூர் மித்ர மணடலி' பேந்தரே தலைமையில் இயங்கிய 'கெலியர கும்போ' ஆகியவைகளே அவை.

இன்னும் இவை போன்ற வேறுசில அமைப்புகளும் புதுமை இலக்கிய வளர்ச்சிக்கு வேகமும் விருவிருப்பும் ஊட்டின என்று கூட கூறலாம்

கன்னட இலக்கிய வரலாற்றில் தங்களுக்கென தனி பீடம் பிடித்துக கொண்ட கவிஞர்கள் கே.வி. புட்டப்பா, பி.டி.என். ராஜரத்தினம், வி. சீதாராமய்யா, சங்கரபட்ட கடெங்கோட்லு, மதுர சென்னா, ஆர்.எஸ். முகளி முதலானோர் இந்த குழாம்களைச் சேர்ந்தவர்களாவர்.

விடுதலைக்கு முன்னர் எழுந்த இலக்கியங்களைப் படைத்தவர்கள் மண்ணின் மணம் கமழும வண்ணம் படைக்க வேண்டும் என்ற உத்வேகததோடு எழுத முனைந்தனர் எனக் கூறலாம. பெடிகெரி, காவி போன்றோர் கவிதைகளில் தேசிய மறுமலர்ச்சிப் போக்கு அதிக அளவில் இடம் பெற்று மக்களை தேசிய நீரோட்டத்தினபால் ஈர்க்கலாயின.

குவெம்புவும் பேந்த்ரேயும் கன்னட புதுமைக் கவிதையுலகின் மைய சக்திகளாவர். இலக்கிய வரலாற்றில் தனி பீடம் பெற்ற இவர்கள் இருவருமே பாரதீய ஞானபீடப் பரிசை பெறறிருப்பது இவர்தம் பெருமைக்கும் திறமைக்கும் மற்றுமோர் சான்று ஆகும்.

இருவரும் ஒரே போக்கிலான கருவோடு கூடிய பல

வித புனைவியல் கவிதைகளை இயற்றியிருந்த போதிலும் அவைகளிடையே வடிவம், சொல்லும முறை, நுணுக்கம் இவற்றில் பெரும் வேறுபாடு உண்டு. குவெமபு இயற்கை யழகில் மயக்கம் கொண்டவராய், அதன மூலம் பெற்ற அனுபவ உணர்வுகளைப் பாட்டால் வடித்து மக்களிடை யே உலக விடடவர் பிற்காலத்தில் மக்களின வாழ்வியல் பிரச்சினைகளை அடியொற்றி படைப்பிலக்கியங்களை உருவாக்க விழைநது, தன் எழுதுகோலை புனைகதை களின்பால் திருப்பியவர் அவர் புதின இலக்கியங்களை உருவாக்கியபோது கூட அவர் ஒரு இயற்கை ஆர்வலர் என்ற உணர்வு படிப்போரிடையே எழும் வகையிலேயே அவரது படைப்பிலக்கியங்கள் அமைந்துள்ளதெனலாம்.

பேந்த்ரேயினுடைய கவிதைகளில் தலையாய அம்ச மாக அமைத்திருப்பது எளிமையும் வாய்மையுமாகும்.

பேந்த்ரேயின் மற்றொரு சிறப்பம்சம் வாழ்வியல் தத்துவங்களை சாதாரண பாமர வாசகனும் நனகு உணர்ந்து தெளியும் வணணம் எளிமைப்படுததிச் சொல் லுவதாகும். ஆனால், குவெம்புவின் படைப்புகளை ஒப்பு நோக்கும்போது மற்றவாகள் தன கருததுககளை, தத்து வார்த்த உண்மைகளை எளிதாகப் புரிநது கொள்ள வேணடும் என்பதைவிட, தான் சொல்ல வந்ததை இலக் கிய வடிவில் திறப்பட சொல்லிவிட வேண்டும் எனபதிலே யே கருததாக உள்ளதை நம்மால் உணரமுடிகிறது. மேலும் குவெம்புவின் படைப்புகளில் மிக அதிகமான சமஸ்கிருதச் சொற்கள் இடம் பெற்றுள்ளன தனக்குள்ள சமஸ்கிருதப் புலமையைப் புலப்படுத்த வேணடும் என்ற வேட்கை அவரிடம் மிகுந்திருப்பதை உணர முடிகிறது. அதேசமயத்தில் பேந்த்ரேயின் படைப்புகளில் இதற்கு நேர்மாறான நிலை இருப்பதைக் காணமுடிகிறது. மொழி யடிப்படையில் பார்த்தால கன்னட மொழி வாசகர் களோடு இரண்டறக் கலக்கும் தனித்தனமை பேந்த்ரே

யின கவிதைகளுக்கு மிகுதியும் உண்டு எனபது தெளிவான உணமை.

குவெம்பு படைதத 'ராமாயண தரிசனம்' என்னும் காவியம் 25,000 வரிகளைக் கொண்டது. இக்கால வாழ்க் கைப் போக்கில் இக்காவியத்தை கூறிச் செல்லும பாங்கு இவரது படைப்பாற்றலுக்கு எனறென்றும் பெருமை சேர்ப்பதாக உள்ளது.

டி.வி.ஜி. என சுருக்கமாக கன்னட இலக்கிய ஆர்வலர் களால் அழைககப்படும டி.வி. குண்டப்பா புத்திலக்கிய வளர்ச்சிக்குப் பெரும பணியாற்றிய கவிச் செல்வராவார். இவரது கவிதைகளில் இயற்கை எழிலோடு மனித வாழ் வின் இயல்புகளும மனிததத்துவ மேனமையும் அழகுறச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இவரது படைப்புகளுள் மிகச் சிறந்த ஒன்றாகத் திறனாய்வாளர்களால் கருதப்படுவது 'மங்கு திம்மன கக்க' எனும் காவியமாகும். இப்படைப்பில் அனறாட மனித வாழ்வில் இழையோடி நிறகும் வாழ் வியல் தத்துவக் கண்ணோட்டத்தைக் காணலாம். காவி யப் போக்கில மனிதர்களைச் சூழ்ந்துள்ள பிரச்சினை களை நேரடியாகவும மறைமுகமாகவும் திறம்பட வெளிப் படுத்துகிறார். சுமார் ஆயிரம் பாடல்களைக் கொண்ட இக்காவியம் கனனட மொழிக்கு அவரளித்த அற்புதக் காணிககை என்பதில் ஐயமில்லை.

'மங்கு திம்ம' எனத் தன்னை அழைத்துக்கொள்ளும் கிராமியச் சூழலில் வாழும் குரு ஒருவர் எழுதிய நூலாக 'மங்கு திம்மனகக்க'வை அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர். இதில் பாததிரப் படைப்புகள் அதிகமிலலை, கலையம்ச மும் குறைவே. ஆனால் கீழை நாடுகளின், மேலை நாடு களின் அறிவுச் செல்வங்கள் அனைததையும் திரட்டித் தரும் ஞானக் களஞ்சியம் போன்று இஃது விளங்குகிறது. காவியச சாயலும கட்டுக்கோப்பும் கொண்டு விளங்கும்

இப்படைப்பு இன்றைய வாழ்வியல் போக்கை வசன காவியம போல் விண்டுரைக்கிறது

''பூமியைத் தனியே விட்டுப் பிரிய இயலாத ஆவி அலைவது போன்று இவ்வுலகம் அலைகிறது. பழைய நெறி மடிந்து விட்டது.புதிய அறநெறியோ இன்னும் பிறக்கவே இல்லை, கலைலையின் முடிவு எப்போது:''

எனக் கூறும் இவர் இன்றைய வாழ்வின போக்கை அப் பட்டமாக பினவருமாறு கூறுகிறார்:

> ''வாழ்க்கை என்பது என்ன? அடி தவறி விழுதல், தள்ளாடி எழுதல், தீனி தின்பது கசப்பு மருந்து குடிப்பது அவசரத்தில் அறிவை இழந்து, தவறைச் சரியென்று சாதிப்பது. இவ்வளவுதானே!''

என இடித்துக் கூறுகிறார்.

இவரைப் போனறே ராஜரத்தினமும் புதுமை இலக்கிய வளர்சசிக்குப் பெருந்துணை புரிநதவர். வாழ்க்கையின் தாழ்ந்த தட்டில் தடுமாறிக் கொண்டிருக்கும் மக்களின் வாழ்வை அவர்தம் போக்கில் திறம்படச் சித்தரிப்பதில் வல்லவராக விளங்குகிறார்.

இவரது படைப்பில் கருத்து, நடை, ஆழம் அனைத்திலும் புதுப்போக்கைக் கையாணடுள்ளார். இவரது கவிதைகளில் ஒனறில் குடிகாரனின் கண்ணுக்குச் சநதிரன குடிததுவிட்டு ஆடுவதுபோல் தெரிகிறதாம. தெரு விளக்குகளும் குடிமயக்கத்தால் தலைகீழாக எரிகின றனவாம். இத்தனை குடிகாரர்களுக்கு மத்தியில் தான இருப்பது அவமானம் எனக் கருதி மீண்டும் கள்ளுக் கடைக்கே சென்று விடுகிறானாம். குடிகாரனின் இயல்பை எடுத்துக் கூறுவதுபோல் மனித விகார குணங்களை வெளிப்படுத்த முயலகிறார்.

'விநாயக' என்ற புனை பெயரில் கன்னட இலக்கிய உலகில் எல்லோராலும் மதிக்கப்பெறும் வி.கே. கோகக் புதுமை இலக்கியப் படைப்பாளர்களில் குறிப்பிட ததக்க ஒருவர், பத்துக்கு மேறபட்ட கவிதைத் தொகுதிகளை வெளியிட்ட இவரது பாடல்களில் அரவிந்தர் போன்ற இந்தியச் சிந்தனையாளர்களின் செலவாக்கு நீக்கமற நிறைந்துள்ளது.

இவரது படைப்புகளுள் முத்தாரமாய் விளங்கும் 'சமுத்ர கீதகலு' என்ற நூல், அவர் மேனாட்டிற்குக் கப்பல் பயணம் மேற்கொண்டபோது. எங்கும் வெறிச் சோடிக் கிடக்கும் கடல, வானம் அதில காணும பல்வேறு வகையான இயற்கைக் காட்சிகள் இவரது உள்ளத்தில ஏற்படுத்திய இன்ப உணர்ச்சிகளின் பிரதிபலிப்பாக எழுந்ததே இந்நூல். பொருளுக்குத் தக்கபடி சந்தமும அமைந்துள்ள இநநூல் கன்னட இலக்கியத்தில் தனித் துவம் பெற்றதாக விளங்குகிறது எனலாம.

மரபுப்ஃபோக்குக்கும் புதுமைப் போக்குக்கும் இடைப் பட்ட நிலையில்-ஏன இரணடையும் இணைக்கும் வகை யில் கவிதைப் படைப்புகளை உருவாக்குவதில் ஓரளவு வெற்றி பெற்றவர் கே எஸ். நரசிம்மசுவாமி ஆவார்.

இவரது படைப்புகளுள மக்களின பேராதரவைப் பெற்றது. ''மைசூரு மலலிகை'' எனும் படைப்பாகும். திருமணத்திற்குப் பின் கணவன் மனைவியிடையே பொங்கி எழும காதல் உணர்வுகளை அழகுறப் படம் பிடித்துக் காட்டுவதில் தனி முத்திரைகளைப் பதித்துள் ளார் எனலாம். இக்காதல் அனுபவங்களை குற்றங்குறை இல்லாது நுணுக்கமாக வெளிப்படுத்துவதில் தன் திறன் அனைத்தையும் காட்டியுள்ளார். காதலுக்குத் தனி அழ கூட்டுவதுடன் தனி வழியும் காட்டுகிறார்கள்.

'கிருஹ லட்சுமி' என்ற தனது மற்றொரு படைப்பில்

வருணனையாக 'கண் அழகு' ஒழுகி வரும் ஆற்றின் குமிழி களைவிட ஆழமானது; அவள் ஒருமுறை பின்னலை விரித்து கரிய கூந்தலை முதுகின் மேல் பரவ விட்டால் தொலைவிற்காணும் மலையின்பால் மாலை இருள் கவிந் தாற்போன்று காணும்' எனறும், மற்றொரு இடத்தில் ''தென்னை ஓலைகளின்மீது முழு நிலா நட்சத்திரமாகிய பசுவின் பாலைப் பொழியும்போது, முற்றத்தின் நடுவி லுள்ள துளசி மாடத்தின அருகிருந்து அழகைக் கண்டு நாம் பாடுவோம். நட்சத்திரங்களை மீட்டுவோம். நிலவைத் தாணடுவோம் அனபுப் பிணைப்பால் நாம் ஒருவர். பிணியும இறப்பும் நமக்கில்லை'' என்றெல்லாம் பாடுவது இவரது தனித்துவப் போக்கை எடுத்துக்காட்டு வனவாக உள்ளன.

புதுமைக் கவிஞர்களில் குறிப்பிடத்தக்க இருவர் சென்ன வீர கணவியும ஜி.எஸ். ருத்ரப்பாவும் ஆவர். இவ் விருவரும் புதுமைப் போக்கில் தங்கள் உணர்வுகளைக் கவிதைகளாக வடிததுத தந்துள்ளனர்.

புதுமைக் கவிதையுலகில் இரண்டாம் தலைமுறைக் கும் இக்கால மூன்றாம் தலைமுறைக்குமிடையே ஒரு இணைப்புச் சங்கிலியாகத் திகழ்பவர் கோபால கிருஷ்ண அடிகா ஆவார். பழைய மரபுகளை முற்றி லும் நிராகரிக்காது புதுமை அம்சங்களை இணைத் துப் புதுமைக் கவிதை புனைவதில் தனித்திறன் பெற்றவ ராக உள்ளார் சமூக எழிப்புணர்வை படிப்போரிடையே எழச் செய்யும் முரசுகளாக இவர்தம் பாடல்களில் பல அமைந்துள்ளன. புதிய சமூகத்தை உருவாக்கத் தூண்டும முறையில.

''நாமெல்லாம் ஒரே சாதி,
நாமெல்லாம் ஒரே மதம், ஒரே குலம்
நாம் மனிதர்

நாம் நடுவில் காணும் தடைச் சுவர்களை
தூளாக்கி வீழ்த்துவோம்''

என சங்கநாதம் எழுப்புகிறார்.

பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை அதன் விளை வாக சமூகத்தில் ஏற்பட்டுள்ள மேடுபள்ளங்களைக் கண்டு கொதித்தெழும் அவரது புரட்சி உணர்வுகள்.

''வயிறு பசிக்குது சோறு கொடு
குளிரால் உடல நடுங்குகிறது துணி கொடு
இது என் முதல் தேவை பிறபின்
அதுவரை பேச்சு வேண்டாம்.''

என வெடிகளாக வெளிக் கிளம்புகின்றன.

இவரது புதுமைக் கவிதைகளில் 'பூமி தாயி' 'விபல' போன்றவை குறிப்பிடத்தக்க சிறப்புக்குரியனவாக விளக்குகின்றன. 'சண்டே மத்தள' எனும் புதுமைக் கவிதைத் தொகுப்பு கரு, உரு, நடை எல்லாவற்றிலும் புதுமை பொழியும் படைப்பாகும். இவரது பாடலகளில ஆங்காங்கே எளிமைக் குறைவும் செயற்கைத தன்மையும் இவரது சிறப்பைக் குறைத்து மதிப்பிடத் தூண்டுகின்றன.

புதுமைக் கவிஞர்களில் அடிகாவின் செல்வாக்கில் வளர்ந்து மணம் பரப்பும் கவிஞர்களில் குறிப்பிடத்தக்க மற்றொரு புதுமைக் கவிஞர் ராமச்சந்திர சர்மா ஆவார். 'தாயி மகு' எனும புதுக் கவிதைத் தொகுப்பு வாசகர் களின் கவனத்தைக் கவர்ந்த தொகுப்பாகும். ஏழைகளின் ஆசைகளை விளக்குகிறது இந்நூல்.

பிறமொழிப் பகுதிகளைப் போலவே கன்னட மொழி யிலும் அண்மைக் காலத்தில் புதுமைக் கவிதைத் தொகுப்பு கள் பெருமளவில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

கோபாலகிருஷ்ண அடிகாலைப் பின்பற்றி புதுமைக் கவிதைகள் படைப்பதில் வல்லவர்களாக நிஸார், ஆனந்த மூர்த்தி, சந்திர சேகர கம்பர் முதலியோரைக் குறிப்பிட லாம். இவர்கள் தொடக்க காலத்தில் அடிகாவின் செல் வாக்குககு உட்பட்டு கவிதைகள் புனைந்தாலும் நாளடை வில தங்களுக்கென தனி வழி கண்டு, கம்பீர நடை போடு பவர்களாக உள்ளனர். நேரடியாக உணர்வுகளை வெளிப் படுத்துவது, எளிய சொற்களைக் கையாண்டு படிப்பவர் களைத் தனபால் ஈர்ப்பது போன்றவைகளால் நிஸார் அஹமத் சிறந்து விளங்குகிறார். பேச்சு வழக்குச் சொற்களைத திறமபடக் கையாணடு சமூகச் சீர்கேட்டிற் கெதிராக குரலெழுப்புவதில் லங்கேஷ் புகழ் பெற் றுள்ளார்.

புதுமைக் கவிதைத் துறையில் ஆண்களின் தொகை யளவுக்குப் பெணபாலார் இல்லையென்றாலும் கணிச மான அளவுக்கு பெண் கவிகளும் தங்கள் பங்கைச் செலுத்தியுளளனர். அவர்களுள் குறிப்பிடததக்கவர்கள் பார்வதி தேவி ஹெக்கடே, ஜானகி பைக்காடி, ஜயதேவி, ஜனகம்ம முதலியோராவர் புதுமைக் கவிதை என்ற மணி மகுடம் சூட்டடப்பட்ட போதிலும் பல கவிதைகள் உப்புச் சபபின்றி, வெறும் எழுத்தடுக்குகளாக காட்சியளிகின றன

புதுமைக் கவிதை இலக்கியத் துறையில் புதியதொரு அடுக்கு அண்மைக் காலத்தில் இளம கவிஞர்களால் தொடங்கப்பட்டு வளர்த்து வரப்படுகிறது அதுவே கனனட புதுக் கவிதைத் துறையாகும். மரபைப் பற்றியோ இலக்கண விதி முறைகளைப் பற்றியோ சிறிதும கவலைப் படாதவர்கள் இப்புதுக் கவிதைக கவிஞர்கள் பழைய கவிஞர்களின வழித்தடத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட முறையில் நடைபோடும் இவர்கள் கவிதைக்கான கருவைப் பற்றி அதிகம் அலட்டிக் கொள்ள விரும்புவ தில்லை சில சமயம் கண்டதே காட்சி கொண்டதே

கோலம் என்ற முறையில் தங்கள் எழுதுகோலை ஓடவிடு கிறார்கள் தாங்கள் எணணும எண்ணத்திறகு கவிதை வடிவில் இலக்கிய உருவம கொடுக்க முயல்கிறார்கள், அவ்வளவுதான.

கிளர்ந்தெழும் இளம் தலைமுறையைச் சார்ந்த இவர் கள் ஏதோ பெரிய அளவில் கன்னட கவிதை இலக்கியத் துறைக்கு தொண்டாற்றி விட்டார்கள் எனறு கூற முடி யாது. அதே சமயம் இப்புதுக் கவிதை படைப்பாளர்களில திறமைசாலிகள் இல்லை என்றும் கூறிவிட முடியாது. ஒரு சில புதுக் கவிஞர்களின் படைப்புகள் உயர்ந்த அளவுக்கு இலக்கிய அந்தஸ்தைப் பெறவும் தவறவில்லை.

இப்புதுக் கவிதை படைப்பாளர்கள் தங்கள் கவிதைக் குக் கருப்பொருளாகப் பெரும்பாலும் பாலுணர்வையும மனச் சலிப்பையுமே தேர்ந்தெடுக்கிறார்கள். இவர்களின் புதுக் கவிதைகள் பருவ இதழ்களில் அவ்வப்போது வெளி வருவதுடன் புதுக் கவிதைத் தொகுப்புகளாகவும் வெளி வந்துள்ளன.

சில புதுக் கவிதைகள் வடிவத்திற்காகவும் கருத்து களுக்காகவும அதனை வெளிப்படுத்தும் முறைக்காகவும் இலக்கிய உலகின் பாராட்டைப் பெறுகின்றன இம் மாதிரியான கவிதைகள் வாசகர்களின ஆதரவையும் தலை முறையினரின் ஆதரவையும் பெற்று வருகின்றன இப் புதுக் கவிதைகளின உவமைகளும் புதுமையான முறையில் அமைக்கப்படுகின்றன,

புதுமை எனும் போர்வையின் கீழ் சில சமயம் புதுக் கவிதைப் படைப்பாளர்கள் வரம்பற்ற முறையில் ஆபாசக் கவிதைகளாக எழுதித் தள்ளி இலக்கியப் புலமையாளர் வெறுப்புக்கு ஆளாகிவிடுகின்றார்கள்.

பெரும் எண்ணிக்கையில இததகைய புதுக்கவிதைப் படைப்பாளர்கள் இன்று கன்னட கவிதை இலக்கிய உலகில் கண்சிமிட்டித திரிந்தாலும் சில இளம் கவிஞர்கள் மக்களின ஆதரவையும் புலமையாளர்களின் ஆமோதிப் பையும பெறத் தவறவில்லை, அத்தகையோரில் குறிப் பிடத்தக்கவர்கள திருமலேஷ், லட்சுமண ராவ, அலன ஹள்ளி கிருஷ்ணா போனறோராவா. இவர்கள் மறற புதுக் கவிதையாளர்களிலிருநது சறறு வேறுபட்டவர்கள மட்டுமனறு; எல்லா தரப்பினரின பாராட்டுக் குறியவர் களாகவும் விளங்குகிறாரகள் காரணம பாலுணர்வு போன்ற மனித பலவீனங்களையே செக்குமாடுகள போல திரும்பத திரும்ப எடுததுச் சொல்வதில் பெருமை காணாது, உண்மையான சமூக சீர்திருத்தத்திற்கு, முற் போக்கான முன்னேற்றததிற்கு உநது சகதியாகத் தங்கள் புதுக்கவிதைப் படைப்புக்கள் அமைய வேண்டும் என்ற ஆதங்கத்தோடு முனைநது உழைதது வருகிறார்கள்.

இச் சமயத்தில கன்னட இலக்கிய உலகில், குறிப்பாகக் கவிஞர்களிடையே ஜாதி, மத அடிப்படையில் பல்வேறு குழுக்கள முளைவிட்டு வளர்ந்து வருவதாகும், தங்கள் கவித்துவ சக்தியால மக்களின முன்னேற்றததிற்கு மாபெரும் முட்டுக்கட்டையாக விளங்கும ஜாதீய உணர்வு களை மாய்ப்பதற்கு மாறாக, அந்தத் தீய உணர்வுகளின அடிப்படையில் பல்வேறு குழுக்களாகப் பிரிந்து, ஒருவருக் கொருவர் வேறுபாட்டையும் மாறுபாட்டையும் கற்பித் துப் போராடி வருவதாகும. சமுதாய அநீதிகளை எதிர்த் துப் போராட வேண்டிய கவிஞர்கள் தாங்களே ஒருவருக் கொருவா கவிதைமூலம் எதிர்பபுச் குரல் எழுப்பிக் கொள் வது அண்மைக் காலத்தில் கன்னட இலக்கிய உலகில் கீற லாக ஏற்பட்டுள்ள இலக்கிய விபததாகும். இந்த விபத்தின பால் இளைஞாகளும தங்கள் கவனத்தைத் திருப்புவது வேதனைக்குரியதாகும்.

அளவிலும் தரததிலும் கதை இலக்கியத் துறை நீண்ட

வளமான வளர்ச்சிப் பாதையை உடையதாக விளங்கி வருகிறது.

கன்னட இலக்கியத் துறையில் சிறுகதை வளர்ச்சிக்குப் பெரும் சக்தியாக தொடக்க முதலே விளங்கி வருபவர் மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் அவர்களாவர். 'மாஸ்தி கன்னட இலக்கியததின ஆஸ்தி' என்று கன்னட மக்கள் பெருமையாகப் பேசும் அளவுக்கு அளவற்ற தொண்டை ஆற்றியிருப்பவர் மாஸ்தியாவார்.

கவிஞர், புதினப் படைப்பாளர் திறனாய்வாளர் சிறு கதையாசிரியர் எனப் பலவேறு இலக்கியப் பணிகளை மாஸ்தி ஆற்றியிருந்த போதிலும் சிறந்த சிறுகதைப் படைப்பாளர் எனற அளவிலேயே அவர் இன்று போற் றப்படுகிறார். சாதாரண குடும்பப் பிரச்கினைகளை அடித்தளமாகக் கொணடு எளிய நடையில் கதையைச் சொல்லிச் செலவதில தனனிகரற்ற திறமையாளராகத் திகழ்கிறார்.

இவரது சிறுகதைகளில் வரும் கதாநாயகர்கள் சாதாரண வாழ்வில் அன்றாடம் சந்திக்கக் கூடியவர் களாக இருந்த போதிலும் அவர்களை லட்சிய உணர்வு படைத்தவர்களாக இவரது சிறுகதைகளில் இவர் நட மாடவிடுகிறார்

இவரது கதை சொல்லும் பாணி படிப்போர் உள்ளத் தைக் கதையோடு ஒன்றச் செய்யும் பாங்குடையதாகும் கற்பனை வளமிக்க இவரது கதைகள் வாழ்வியல் நெறி களையும், கன்னடப் பண்பாட்டையும் அழகுறச் சித்தரிக் கும் போக்கில் அமைந்துள்ளன

இவர் எழுதிய 'சுப்பண்ணா' என்ற சிறுகதை அளவில் சற்று பெரிதாக அமைந்திருந்த போதிலும் இசைவாணர்

ஒருவரின் வாழ்வை அழகுறச் சித்தரிப்பதில் கன்னடச் சிறு கதைகளில் சிறந்தது என்ற உயர்நிலையைத் தேடித் தந்துள்ளது

'வசுமதி' போன்ற நாட்டுப்பற்றை ஊட்ட வல்ல கதைகளையும் 'நிஜகல் ராணி' முதலான வரலாற்றுக் கதைகளையும உருவாக்கிய மாஸ்தி 'மங்கம்மா' என்ற படைப்பில் நாட்டுப்புற மக்களின் வாழ்க்கையை அழகுறச் சித்திரிககத் தவறவிலலை இவ்வகையில் பேட்டி கேரி, ஆனந்தா, கோரூா, கோபாலகிருஷ்ணராவ் முதலானோர் சிறந்து விளங்குகின்றனர்

இவரது கதை சொல்லும் போக்கிலிருந்து சற்று மாறு பட்ட நிலையில் சிறுகதைகளைப் படைத்து மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவரும் இக்காலச் சிறுகதைப் படைப் பாளர்களுள் யஷ்வந்த் சித்தாலா, யூ ஆர் ஆனந்த மூர்த்தி, எஸ் கே தேசாப், லங்கேஷ். கே சதாசிவம் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

புகழ்பெற்ற கன்னட புதினப் படைப்பாளர்களான குவெம்பு, பேந்தரே, நரசிம்மாச்சார் போனறோரும் சிறு கதைத் துறைக்குப் போதிய அளவு காணிக்கை செலுத்தி யுள்ளனர்

ஆண் எழுத்தாளர்களைப் போலவே கன்னட சிறு கதைத் துறைக்குப் பெண் எழுத்தாளர்களும் பெருந் தொண்டாற்றியுள்ளனர் அவர்களுள் திருமதி கௌரம்மா ஹெச் வி சாவித்ரம்மா, ஸாமலாதேவி, ஜெயலட்சுமி, தேவாங்கனா போனறோரைக் குறிப்பிடலாம் இவர் களுள் திருமதி கௌரம்மா தன சிறுகதைப் படைப்புகளில் அழகும் நுட்பமும் மிளிர பெண்களின் உளப்போக்கைச் சித்தரிப்பதில் மிகச் சிறந்து விளங்குகிறார்

**கன்னட இலக்கியத்தில் புதினத் துறையின் வளர்ச்சி**

கவிதை, சிறுகதை வளர்ச்சிக்குச் சற்றும் பின்தங்கிய தில்லை அதிலும கடந்த இருபது ஆணடுகளில் புதினத் துறையின் வளர்ச்சி வியப்பூட்டுவதாக அமைந்துள்ளது

கன்னட புதினப் படைப்பாளர்களுள் சிவராம காரந்த் அவர்கட்கே முதலிடம் வழங்கப் பெற வேண்டும் சிறிதும் பெரிதுமாக சுமார் 20-க்கு மேறபட்ட புதினங் களைப் படைததளித்த பெருமை அவருககுணடு இவரது படைப்புகள் அனைததும் சமுதாயச் சூழலை மையமாகக் கொண்ட சமூக நாவல்களாகும்

சிவராம காரந்த் சில கட்டு திட்டமான கொள்கை களை மையமாக வைத்துத் தன் இலக்கியப் பணியை ஆற்றி வருகிறார் என்பதை இங்கு நினைவு கூற வேண டும மற்ற படைப்பாளர்களைப் போன்று வானத்தை அண்ணாந்து பார்த்து கற்பனை உருவங்களுக்கு எழுத் துரு கொடுப்பவரல்ல காரந்த் தான் கணடவைகளையும உணர்ந்தவைகளையுமே இணைதது கற்பனை மெருகூட்டி கதை புனைகிறார் 'கணடுணர்ந்தவற்றையே எழுத வேண்டும், சொந்த அனுபவத்தின எதிரொலிகளாகவே தன் எழுத்து அமைய வேண்டும்' என்பதில் அழுததமான கொள்கையுள்ள காரந்த் தன் கொள்கை வழிப்படியே படைப்பிலக்கியங்கள் மூலமாக இமாலய வெற்றி பெற் றுள்ளார் எனக் கூறினால் அஃது மிகையன்று மண்ணின் மணம் பூரணமாக வீசும் வண்ணம் இவர் 'மரளி மண ணிகெ', 'பெட்டத ஜீவ', 'குடியர கூசு போன்ற புதினங் களைப் படைத்தளிததுள்ளார் 'மரளி மண்ணிகெ புதி னம் மூன்று தலைமுறையைப் பற்றிய கதையாகும.

கடந்த நூறு ஆண்டுகளில் இந்திய மக்களின் வாழ் வில் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்களை கர்நாடக மண ணுக்கேயுரிய தன்மையில் விவரிக்கிறது இப்புதினம் விடு தலைப் போராட்ட காலத்தில் சுயநல வாதிகளால்

நாட்டுப்பற்று மிக்க தொண்டர்கள் எப்படியெல்லாம் துன்புற நேர்ந்தது என்பதை 'அவுதாரியத உருளல்லி' (தூக்கு மரம்) என்ற புதினததில் சிறப்பாகச் சித்தரித்துள்ளார், மனிதனின் உள்மன வேறுபாடுகளை நுண்மாண் நுழைபுலங்கொண்டு எழுத்துருவில் வடித்துத் தருவதில் கன்னட படைப்பிலக்கியத் துறையின் முடிசூடா மன்னராகக் காரந்த் விளங்குகிறார் எனினும் பொருத்தும்

கன்னட மொழியில் ஐம்பதுக்கு மேற்பட்ட புதினங்களைப் படைத்தளித்துச் சென்ற பெருமை அ.ந.கிருஷ்ண அவர்களைச் சாரும் இவரது புதினங்கள் பலவற்றில் வரும் பாத்திரங்கள் கலையுலகைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் இப்புதினப் படைப்புகளும் கலையமசம் மிக்கவைகளாகவேயுள்ளன எனலாம் சமூகப் பிரச்சினைகளையும் மையமாகக் கொண்டு இவரது படைப்புகள் நடைபோடுகின்றன.

த.ரா.சு அவர்கள் பெண்ணுலகப் பிரச்சினைகளை, குறிப்பாக விலைமாதர் வாழ்க்கை, குடும்பப் பிரச்சினைகள், பெண்ணுரிமை இவற்றை மையமாகக் கொண்டு தனது படைப்புகளை உருவாக்கியுள்ளார் அனாதைக் குழநதைகளின் சோக வாழவைச் சித்தரிக்கும 'புருஷாவதாரா' புதினம் கன்னட இலக்கிய உலகில் புதுமையாக எழுந்த படைப்பாகும

சமூகத்தில் தாழ்த்தப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்களைச் சுற்றி தனது சிந்தனையைச் செலுததிப் படைப்புகளை உருவாக்கும் கட்டிமனியின் எழுதுகோல், ஏழைகளைப் புழுவென நெளிய வைக்கும் வறுமை, அவர்தம் முன்னேற்றத்துக்குத் தடைக்கல்லாக இருந்துவரும் சாதித்துவம், காமம், வரட்டு கர்வம், பொருளாதாரப் போராட்டம் போன்றவற்றை பிரததியட்சப் போக்கில் உணர்த்தும் வகையில் படைப்புகளை உருவாக்கியுள்ளது

நிரஞ்சனர் மற்றுமொரு எழுத்தாற்றல் மிக்க கன்னட புதினப் படைப்பாளராவார். இவர் 'கல்யாண சுவாமி' போனற சரித்திர நாவல்கள் உட்பட பல நாவல்களை எழுதியவர். இவரது படைப்புகளில் சமூக விழிப்புணர் வைத் தூண்டும் வகையில் பாத்திரப் படைப்பும் கதைக் கருவும அமைநதிருப்பது குறிப்பிடத் தக்கது. ரங்கம்ன வடாரம்' என்ற மற்றொரு புதினமும் குறிப்பிடத்தக்க படைப்பாகும் மற்றும் எம்.வி. சீத்தாராமையா, திரிவேணி போன்றவர்களும் மிகச் சிறந்த புதினப் படைப்புகளை உருவாக்கி கன்னட மொழியைச் செழுமைப்படுத்தியுள்ள னர். குவெம்பு எழுதிய இரு நாவல்களும் கவிதை வயப் பட்ட படைப்புகளைப்போல உள்ளன. ராவ்பகதூரின் 'கிராமயானா' புதினமும் எஸ்.எல். பைரப்பா எழுதிய 'வம்ச வ்ருக்ஷா' புதினமும் கன்னட இலக்கியத்தில் அண்மைக் காலத்தில எழுந்த அருமையான படைப்பு களாகும்.

அண்மைக் காலத்தில் கவிதைத் துறையில் 'புதுக் கவிதை' என்ற இலக்கியப் புதுமைப் போக்கு எழுந்தது போல் புதினத துறையிலும் ஒரு புதிய போக்கு கா லூன்றி யுள்ளது. அப்புதிய போக்கிலும் அருமையான படைப்பு கள் வெளிவந்து கொணடிருக்கின்றன. அவற்றுள் எஸ்.கே தேசாய் எழுதிய 'முக்தி' ஆனந்த மூர்தததியின 'சமஸ்காரா', ஏ.கே. ராமானுஜததின 'ஹாலடி மினு,, கிரியின் 'கதி ஸ்திதி', லங்கேஷின 'பிர்க்கு', டாக்டர் மொக்காஸியின் 'கங்கம்மா கங்காமயி', யஷ்வந்த் சித்தா லின் 'மூரு தாரி'யும் குறிப்பிடத்தக்க புதினப் படைப்பு களாகும். இவற்றில் புதிய உத்திகளையும் கதை சொல் லும் போக்கில புதிய பாணியையும் கையாண்டு புதினத் துறையின் வளமான வளர்ச்சிக்கு வழி திறந்திருக்கிறார் கள்.

நாடகத் துறையைப் பொறுத்த வரையில் ஆரம்ப கால நாடகங்கள் சமஸ்கிருத மொழியிலிருந்து கன்னட மொழியில் அப்படியே மொழி பெயர்க்கப்பட்டன. அதன் பிறகு ஆங்கில மொழியின செல்வாக்குப் பரவவே ஆங்கில நாடகங்கள் கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பட்டன.

கன்னட மொழியில் மூல நாடகமாக முதன்முதலில் எழுதப்பட்ட நாடகங்களின கரு பெரும்பாலும் புராண அடிப்படையில் அமைந்தனவாகும். பின்னரே சமூக நாடகங்கள் எழுந்தன. புராண நாடகங்களில் உயர்ந்த இலக்கிய நடையையும் சமூக நாடகங்களில் தூய பேச்சு நடையும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கன்னட நாடகத்துறை பல்வேறு சோதனைகளையும் மாற்றங்களையும் பெற்று இன்றுள்ள நிலையை அடைந்துள்ளது. கன்னட நாடகங்கள் நடிப்பதற்கென ஒருவகையும் படிப்பதற்கென இன்னொரு வகையுமாக இருவகைகளில் அமைந்துள்ளன. சில நாடகங்கள் நடிப்பதற்கும் படிப்பதற்கும் ஏற்றவைகளாக அமைந்துள்ளன. இவற்றுள் கவிதை, இசை நாடகங்களும் அடங்கும்.

இக்காலப் போக்குக்கேற்ப எழுதிய நாடகாசிரியர் களில முதன்மையாக வைத்து எண்ணப்பட வேண்டியவர் மறைந்த டி.பி. கைலாசம் அவர்களாவார். இவர் தனக் கென தனிப் பாணி ஒன்றைத் தோற்றுவித்து நாடகங் களை இயற்றினார். சமூக நாடகங்களை நகைச்சுவை உணர்ச்சி பொங்க எழுதி மக்களின் ஆர்வத்தையும் ஆதர வையும் பெருமளவில் திரட்டினார். இவரது புரட்சிகர மான சமூக நாடகங்கள் அச்சில் வந்து மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றன.

அவரது முதல் நாடகமான 'டொள்ளுகட்டி' ரசிகர் களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றதாகும், கன

வனைத் தன் வலைக்குள் சிக்க வைத்து சிறப்படைய விரும்பிய படித்த பெண ஒருத்தியை மையமாகக் கொண்ட 'அம்மாவர கனட' என்ற நாடகமும் விலைமகளின பிரச்சினையை விளக்கும் 'ஸுளெ' என்ற நாடகமும் சிறந்து விளங்குவனவாகும்.

இவருக்கு அடுததபடியாக கனனட நாடக உலகில் சிறப்புற்று விளங்குபவர் ஆத்ய ரங்காச்சாரியா ஆவார். பழைமைப் போக்கைக் கடுமையாக விமர்சிககும் வகையில் இவர் தமது சமூக நாடகங்களை உருவாக்கியுள்ளார்.

குடும்பததிலும் வெளி உலகிலும் பேரும் பெருமையும் பெற, உள்ளொன்றும் புறமொன்றுமாக மாறுபடட போககில் வாழும் தொட்டராயன், பழமைப் பிடியி லிருந்து சிறிதும் மாறுபடாத வேணக்ச என்ற இரு பாத திரங்களைக் கொண்டு சமூகச் சீர்கேடடை விமர்சிக்க எழுந்த 'ஹரிஜனவார' என்ற நாடகம், காட்சியமைப்பு, நுணுககமாகப் படைக்கப்பட்டிருக்கும் பாத்திரப் படைப்பு ஆகியவற்றோடு அமைந்த உயர்ந்த கலைப் படைப்பாகும. 'சோகச் சக்கர', 'ஜீவன ஜோகாலி' போன்ற நாடகங்களில், விடுதலையைத தவறான போக் கில் பயன்படுத்தி சுயநல வேட்டையாடுவோரையும அதி காரத்தைத் தவறான வழியில் பயனபடுத்தி நேர்மையைக் கால்டியில போட்டு மிதிப்போரிடையே வருநதி நிற்கும் தேசத தொண்டாகளின மனநிலையையும் அற்புதமாகச் சிததரிக்கிறார்.

புதினத துறையைப் போன்றே கன்னட நாடகத் துறைக்கும் பெருந் தொண்டாற்றுபவர் சிவராம காரந்த் அவர்கள், இறைவன் பெயராலும சமயத்தின் பெயராலும் நடைபெறும் பலவித அநீதிகளைத் தோலுரித்துக்காட்டும் 'கர்ப்பகுடி' நாடகம் இவரது பெரிய நாடகங்களுள் சிறந்ததாகும். ஓரங்க நாடகத் துறையும் இவரது கை வண்ணததால் பொலிவு பெற்றுள்ளது.

சரிததிர நாடகங்களைப் படைப்பதில் வல்லவர் ஸம் ஸர் ஆவார். சுமார் 25 வரலாற்று நாடகங்களை எழுதிக் குவித்துள்ள இவர் கற்பனை மெருகோடு வரலாற்றுச் செய்திகளைக் கொடுப்பதில் பெருநதிறன் மிக்கவராக விளஙகுகிறார்.

அண்மைக் காலத்தில் முழுநீள நாடகங்களைக் காட்டி லும ஓரங்க நாடகங்களே மக்களின கவலத்தைக் கவர்ந் துள்ளன. காலக்குறைவு, நகைச்சுவை, தெளிவான சமபவங்கள், நாடகததை நடத்திச் செல்வதில் புதிய பாணி இவையெலலாம ஓரஙக நாடகததிற்கு மிகுந்த செலவாக்கைத தேடிக் கொடுத்துள்ளன.

இன்றைய வெற்றிகரமான நாடகாசிரியர்களில இளைய தலைமுறையில் குறிப்பிடத் தக்கவர்கள் கிரிஷ் கர்னாட், லங்கேஷ், சந்திரகாந்த், குஸனூர் ஆவர்.

இலக்கியத் திறனாய்வைப் பொறுததவரை பிற தெனனக மொழிகளைப் போன்றே கன்னடத்திலும் நனகு வளர்ந்துள்ள ஒரு துறையாகும். தொடக்கத்தில் இத் துறைககு ராஜபாட்டை அமைத்த பெருமை ஸ்ரீ, மாஸ்தி, டி.வி.ஜி. போன்றோரைச் சாரும்.துரிதமான வளர்ச்சிக்கு வழிவகுத்த பெருமை பேந்த்ரே, குவெம்பு.எஸ்.வி ரங கணணா, கோகக், ஆர்.எஸ் முகளி போனறோரைச் சாரும்

இலக்கியக் கொள்கைகளைப் பற்றியும் திறனாய்வுக் கலையின் பல்வேறு கூறுகளைப் பற்றியும் மாஸ்தி எழுதிய 'சாஹித்ய' மிகச் சிறந்த திறனாய்வுக் கலை நூலாக மதிக்கப்படுகின்றது. டி வி ஜி யின 'சாஹித்ய சக்தி' பேந்த்ரேயின் சாகித்யமத்து விமரிசெ' கோகக்கின் 'இந்தின கன்னட காவ்யத கொத்து குரிகளு' என்ற நூலும் இன்றைய கன்னட திறனாய்வுக்கலையின்

வளர்ச்சிக்கு கட்டியங் கூறும் சிறந்த விமர்சன நூல்களாக விளங்குகின்றன.

கவிதை இலக்கியத் திறனாய்வோடு கன்னட கவிதைகளின் பெருஞ்சிறப்புக் கூறுகளுள் ஒன்றான சந்த வரலாற்றை சிறப்புற விமர்சிக்கும் நூலாக டி எஸ் கார்க்கி எழுதிய 'கன்னட சந்தோவிஹாஸவு' விளங்குகிறது

கர்நாடக மாநிலத்தின் பாரம்பரிய நாட்டிய நாடகமான 'யக்ஷகான'த்திற்கு மீண்டும் புத்துயிரூட்டி வளர்த்த பெருமை முழுக்க முழுக்க சிவராம காரந்த அவர்களையே சாரும். அதன் பல்வேறு சிறம்பம்சங்களை வியக்கத்தக்க வகையில் விமர்சிக்கும் நூலாக 'யக்ஷகான பயலாட்ட' என்ற நூலை எழுதியளித்துள்ளார் காரந்த் அவர்கள்.

எனினும் பிற தென்னக மொழிகளில் பெருமளவில் வெளி வந்துள்ள-வெளி வந்து கொண்டிருக்கும் திறனாய்வுக்கலை நூல்களின் பெருக்கத்தோடு இணைத்துப் பார்க்கும்போது கன்னட திறனாய்வுக்கலைத்துறை சற்றுப் பின் தங்கியுள்ளதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

அதே போன்று பயண இலக்கிய நூல்களில், தமிழ், மலையாளம் போன்ற பிற தென்னக மொழிகளில் உள்ளதைவிட குறைவான அளவிலேயே கன்னடத்தில் பயண நூல்கள் வெளியாகியுள்ளன.

சிறுவர் இலக்கியங்களும். அறிவியல் படைப்புகளும் குறிப்பிடத்தக்க அளவில் கன்னட மொழியில் எழுதப்பட்டுள்ளன.

கன்னட மொழி, இலக்கியம் நீண்டகால வரலாற்றுச் சிறப்பைப் பெற்றுள்ளது போன்றே புதிய புதிய சிந்தனைகளுக்கும் போக்குகளுக்குமேற்ப, காலத்திற்கேற்றவாறு விரைத்து வளர்ந்து வருவதைக் காண முடிகிறது

# தெலுங்கு இலக்கியம்

ஓரிஸ்ஸாவையும் மத்தியப் பிரதேசத்தையும் வட எல்லைகளாகவும் வங்காள விரிகுடாவைக் கிழக்கு எல்லையாகவும் தமிழ்நாட்டையும் மேற்கே கர்நாடகததையும் தெற்கு எல்லைகளாகவும் கொண்ட ஆந்திரப் பிரதேச மக்களின் மொழியாக விளங்குவது தெலுங்கு மொழியாகும் தென மொழிகளில் தமிழ், கன்னட மொழிகளுககு அடுததபடியாகப் பழமைச் சிறப்புடன் விளங்குவது தெலுங்கு மொழியே யாகும்

இந்திய மொழிகளில் இந்திக்கு அடுத்தபடியாக தெலுங்கு பேசுவோர்தான் எண்ணிக்கையில் இரணடாம் இடத்தைப் பெறுகின்றனர்.

இசைக்கேற்ற இனிய மொழியாக விளங்கும் தெலுங்கை 'சுந்தரத் தெலுங்கு, 'களி தெலுங்கு' என்றெலலாம் தமிழ்ப் பாவாணர்கள் போற்றிப் புகழ்ந்துள்ளனர்.

தெலுங்கு மொழியின் பிறப்புப்பற்றி பல்வேறு கருத்துககள் கூறப்பட்டாலும் சமஸ்கிருத மொழியின பேராதிக்கத்திற்கு உட்பட்ட திராவிட மொழிகளில் முதன்மையான இடத்தைப் பெறுவது தெலுங்கு மொழியே என்பதில் இரு கருத்துக்கு இடமில்லை

வழிவழியாக எழுதா இலக்கியங்களாக நாட்டுப் பாடல்களும் கதைகளும் தெலுங்கு மொழியில் உருவாகிப் பழக்கத்தில் இருந்து வந்தபோதிலும் எழுத்துருவில் உருவாக்கப்பட்ட இலக்கியமாக தெலுங்கு மொழியில் உருவானது தன்னய்யா சமஸ்கிருதத்திலிருந்து தெலுங்கில்

பெயர்தத மகா பாரதமே'யாகும் பதினொராம் நூற்றாண்டைச் சேர்ந்த இவ்விலக்கியமே தெலுங்கில் எழுந்த முதல் இலககியமாகக கருதப்படுகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டுவரை சமஸ்கிருதப் பேரிலககியஙகளின மொழிபெயாப்பாகவே தெலுங்கு இலக்கியங்கள் முகிழ்த்தன இத்துறையில நன்னையா, திக்கணணா, எாரப் பிராக ஆகிய மூவரும் அருமபணியாற்றி தெலுங்கு இலக்கிய வளர்ச்சிக்கு வழிகோலினர் இம்மூவரும் கவித்திரயம' என்ற சொல்லால் அழைக்கப் படுகின்றனர்.

ஆங்கிலேயர் வருகைக்குப் பின்தான் இந்நிலை தளரத் தொடங்கியது மேனாட்டு இலக்கியப் போக்கு படிப்படியாக தெலுங்கு இலக்கிய உலகில தலைகாட்டவே தெலுங்கு புததிலக்கிய வளர்ச்சி பொலிவு பெறத் தொடங்கியது விடுதலைப் போராட்ட காலம், மக்களுக்குத் தங்கள் மொழி, இலக்கியத்தின் மீது பேரார்வத்தைத் தூணடியது மக்களிடையே விடுதலை வேட்கையைத தூண்டி, அவர்தம் உணர்ச்சிகளை ஒரு முகப்படுத்த மொழியும் இலக்கியத் துறைகளும் இணையற்ற கருவிகளாக மாறின இதன் விளைவாக பண்டிதர் ஆதிக்கத்தில இருந்த மொழியும் இலககியமும் மக்களிடையே நெருக்கமுடையவைகளாக மாறின விடுதலைக்குப் பிறகு அரசின் அரவணைப் போடு மொழியும் இலக்கியமும் தனக்கென புதிய போக்குகளை பல்வேறு இலக்கியத் துறைகளிலும் உருவாக்கிக் கொண்டு வளரலாயிற்று.

இக்கால கட்டத்தில் புராணங்கள், இதிகாசங்கள் இவற்றையே சுற்றிச்சுற்றி வந்த தெலுங்கு இலக்கிய உலகத்தில் சமஸ்கிருததின் பிடிப்பு பெருமளவில தளர அந்த இடத்தை ஆங்கில இலக்கியம் வலுவாகப் பற்றிக் கொண்டது புதிய கவிதை நடை, புதனம், சிறுகதை,

திறனாய்வு என புதிய இலக்கிய வடிவங்களில் தெலுங்குப் படைப்பிலக்கியங்கள் உருவாயின இதுவரை புராண நாயகர்களும் அரச குலததவர்களுமே இடம் பெற்றுவந்த இலக்கியங்களில் அரசியல தலைவர்களும் மக்களும் உலவத் தொடங்கினர் மக்களின் உணர்வுகளை மெல்லிய நூலிழைகளாக வெளிப்படுக்தும் கருவிகளாக இலக்கியங்கள் மலர்ந்தன இதற்கு ஆங்கில மொழியோடு வங்கமொழிச் செல்வாக்கும் பெருங்காரணமாயமைந்தது எனலாம்.

பழைய மரபுகளை உதறிததள்ளி இயற்கையான போக்கில் கவிதை வடிக்க கவிஞர் குழாம் தோன்றியது பாவ கவுலு' எனத் தங்களை அழைத்துக் கொண்ட அவர்கள் தங்கள் கவிதை இலக்கியப் போக்கை 'பாவ கவித்வமு' எனப் பெருமையோடு அழைத்துக கொணடார்கள் இப்போக்கு தேசியப்பற்று மககளின உள்ளத்தில் அழுத்தமாகக் காலூன்ற பெருந்துணை புரிநதன எனலாம்.

சமுதாய மேடுபள்ளங்களை-ஏற்றத் தாழ்வுகளை பிரத்தியட்ச உணர்வோடு மக்களுக்கு உணர்தத புதிய முற்போக்குக் கவிஞர் குழாம் உருவெடுத்தது ஸ்ரீஸ்ரீ (ஸ்ரீரங்கம் ஸ்ரீனிவாச ராவ்) வித்வான் விஸ்வம், ஆருத்ரா, தாசரதி போனறவர்கள் புதுக்கவிதை வளர்ச்சிக்கு வலுவான அடித்தளமிட்டு வளர்தது வருபவர்கள் ஆயினும, மரபுப் போக்கு அடியோடு அழிந்து போகாவண்ணம் காக்கும் பணியில், பாரதீய ஞானபீட பரிசு பெற்ற மகாகவி விஸ்வநாத சத்திய நாராயண போனறவர்கள் தொடர்ந்து பாடுபட்டு வநததை இனறும் அவரொத்த பலரும் முயன்று வருவதை மறுப்பதற்கில்லை மரபுக் கவிதைப் போக்கைவிட புதுக் கவிதைப் போககு இன்றைய தெலுங்குக் கவிதையுலகில் அதிக வலுவோடிருக்கிறதெனலாம.

இலக்கியச் சடங்குகள் ஏதுமில்லாத நிலையில் நேரடி யாக மக்களின் உணர்வுகளை வருடும் புதுக்கவிஞர் போக்கு மக்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்கு வதில் ஆச்சரியமில்லை.

தெலுங்குப் புதுக்கவிஞர்களில் பலர் பாடும் புதுக் கவிதைகளின் மரபு அமசங்கள் அப்படி அப்படியே இடம் பெற்றிருக்கின்றன பழைய யாப்பில் புதிய கருத்துக் களை அமைத்துப்பாடும் கவிஞர்களும் தெலுங்குக் கவிதை யுலகில் இருக்கவே செய்கின்றனர்.

''உள்ளத்து உள்ளது கவிதை
உண்மை உருவெடுப்பது கவிதை''

என்ற கவிமணியின் வாக்குக்கொப்ப உண்மை கவித்துவம் உணர்ச்சியோடு வெளிப்படும்போது, அதற்குரிய வடிவத் திலேயே அது வெளிப்படும் என்பது அனுபவ உண்மை யாகும்.

பழைய சந்தமோ வடிவமோ பிடிக்காத புதுக் கவிஞர் களில் பெரும்பாலோர் பேச்சு மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்து கவிதை எழுதி வருகிறார்கள். அதனால் இலக் கண விதிகளுக்கு மாறுபட்ட சொற்களும் மரபுக்கு மாறுபட்ட உவமைகளும் இவர்களது பாடலகளில் இடம் பெற்றிருப்பதில் வியப்பில்லை. புதுப் புதுக் கருத்துக் களுக்கு புதிய எளிய சொற்களே போதும் எனபது இவர் களின் கருத்தாகும்.

புதுக்கவிதைக்குப் புலமையாளர்களிடையே போதிய ஆதரவில்லாவிட்டாலும் வளர்ந்துவரும் இளந் தலை முறையினரிடையே நல்லாதரவைப் பெற்று வருகின்றது. வார, மாத, நாளேடுகளும் நல்லாதரவும் தந்து வருகின் றன. புதுக்கவிஞர்க்கு புதுப் பெயரிடுவதிலேயே இப் புதுமைக்கவிஞர்கள் 'இன்னும் ஒன்றுபட்டதாகத் தெரிய

வில்லை சிலர் தாங்கள் எழுதும புதுமைக் கவிதைகளை 'வசன கேயம'(வசனப் பாடல்கள்) என்றழைததுக்கொள் கின்றனர். இனனும் சிலர் 'அனிபத்த கவிதா' (சந்தமில் லாக கவிதை) எனகினறனர். இன்னும் சிலர் புதிய கவிதை களையும மரபுக் கவிதைகளையும திறமபட எழுதி வரு கினறனர்.

இயற்கை எழில், கிராமச் சூழல் என எழுதிக்குவித்த புதுமைக கவிஞர்கள் நகரத்து நாகரிகம் பறறி பலப்பல கவிதைகளை நையாண்டி செய்யும் போக்கில் சுவைபட எழுதி வருகினறனர். இவர்களில் குந்துர்த்தி எனும் புது மைக் கவிஞர் 'நகரம்லோ வான (நகரத்தில் மழை) என் னும ஒரு கவிதையை எழுதியுள்ளாா. இருநூறு வரிகளைக கொணட இக்கவிதையின கடைசிப் பகுதி.

''மரத்தடியில் இருளில் விழுந்து ஒன்றும் அறியாமல் தவித்
தது ஒரு துளி,
கொட்டாவி விடும் ஒரு நாகரிக வாலிபன உதட்டில்
விழுந்து
மதுவின் வாசனைக்கு மெய்ம்மறந்து ஆடியது ஒரு துளி.
ஜன்னலில் இருந்த மருந்து புட்டியில் விழுந்த துளி
உடலெல்லாம் கசப்பாகி நாட்டுப் புறத்தில் ஏரியில்
விழாமல்
நகரத்திற்கு ஏன் வந்தோம் எனப் புலம்பியது;
கலைமகளின தித்திக்கும் பால் போன்ற மற்றொரு துளி
பல்கலைக் கழகப் பகுதிக்குள் ஒளிர்நத ஒளியில் கலநது
போயிற்று;
சார்மினார் கோபுரததின மேல் விழுந்த துளி
பெரும் அரியாசனத்தில உட்கார்ந்த பெருமதிப்பில்
போலும்
கால்மேல் கால் போட்டுக் கொண்டு,
மீசையை முறுக்கிக் கொணடு,
நகரத்தை நாறபுறமும் பெருமையுடன் பார்த்தது;

அடிக்கடி கோர்ட்டுக்குப் போன அலுப்புடன் போலும்,
ஹைகோர்ட் கட்டிடத்தின் மேல் விழுந்த துளி,
பக்கத்தில் இருந்த மூஸி ஏரியில் விழுந்து மறைந்தது.
சட்டசபை உச்சியில் விழுந்த துளி
ஆகாயத்தைப் பார்த்தது,
இனி போதும் மழை-என்று கட்டளை இட்டது.
அத்துடன் மழை நின்றது.
அதுதான் பட்டணத்தில் பெய்த மழை
அதாவது
ஐதராபாத்தில் பெய்த மழை''

மழைத்துளியை ஆதாரமாக வைத்துக் கொண்டு நகர வாழ்வின் பல்வேறு அமசங்களை அப்பட்டமாகத் தோலுரித்துக் காட்டும் முறையில் இக்கவிஞரின் எழுதுகோல் ஓடியுள்ளது.

இதே போன்று பாலகங்காதர திலக் எனும் மற்றொரு கவிஞர் இன்றைய வாழ்க்கையைத் தம் போக்கில் 'நியூ சிலபஸ்' என்ற தலைப்பில்,

''அமெரிக்காவில் டாலர் விளையும்
இந்தியாவில் மக்கட்பேறு விளையும்
பூமி தன்னைத்தானே சுற்றிக் கொண்டே
செல்வந்தனையும் சுற்றிக் கொண்டுள்ளது.
விருப்பம் வட துருவம்; விதி தென் துருவம்,
மனிதன் இதன் நடுவில் பந்து போல
துள்ளிக் குதிக்கும் வினோதம்
நாட்டுப் புறத்து நடிகைக்கு திரைப்பட
நட்சத்திரம் பகல் கனவு;
பட்டிணத்து மைனருக்கு ஹாலிவுட் சொர்க்கம்
மனத்தில் தூய்மை இல்லாவிடினும்
மல்லிகைப் பூப்போல சிரிப்பதுதான்
இந்நாள் விவேகம்.''

இனறையப போககை எடுத்தியப்புவது மட்டுமே புதுமைக கவிஞாகளின் போக்கு எனக் கூறவியலாது; நாட்டு வளர்சசக்கு உருவாக வேணடிய ஒருமைப் பாட்டுககு அவாகள்ன் கவிதை புதிய வேகததையும் வலு வையும ஊட்டடத் தவறவிலலை.

"உன இதயம் வெவ்வேறு பணபாடுகளின் கூடம்
இந்த அரங்கத்தின மேல் கம்பரும் கபீரும், கலந்து
கவிதை பாடுவார் ;

ஒவ்வொரு இதயத்திலும் ஒவ்வொரு நாளும்
அனைதிநதியக் கவியரஙகம் நடக்க வேண்டும்;
மனிதனை மனிதன் வீழ்ததும் மதத்தை விட்டு விடுங்
கள்,
மனிதனை மனிதனோடு சேர்க்கும் கவிதை இல்லத்
திற்கு வாருங்கள் ;

இந்தக் கவிதை இல்லம் புஷ்பக விமானம் போன்றது.
இதில் எத்தனைப் பேர் பயணம் செய்தாலும் இன
னும இடமிருக்கும.

எல்லா மொழியினரும் வாருங்கள்,
நல்ல இதயமே அதில் ஏறுவதற்கு டிக்கெட்
ஒருமைப்பாடு வீழ்ந்து விட்டால அதுவும் வீழ்ந்து
போகும்
ஆகையினால் ஒன்றாக இருப்போம்
ஒனறாகக கேட்போம் கவிதையை
மணணுலகத்தை சுவர்க்கமாக்கி உலவுவோம்."

இத்தகைய நாட்டின் வலுவான ஒற்றுமைக்கும் முன் னேற்றத்திற்கும் கட்டியங்கூறும் உணர்ச்சிக் கவிதைகளை வசன கவிதைகளாக பலர் கொடுத்துக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் பழைய மரபுக்கு மாறுபடாமல்

ராமாயணம், பாரதம் முதலிய இதிகாச இலக்கியக் கூறு களையே மீண்டும் மீண்டும் சளைககாமல் பாடும் மரபுக் கவிஞர்களும் பெருமளவில் இருக்கவே செய்கிறார்கள்.

புதுமை வேட்கையுடன் சமூகத்தில் வேரூன்றியிருக்கும் சாதி மத பேதங்களையும் பொருளாதார ஏற்றத் தாழ்வு களையும் அரசியல்வாதிகளின் சுயநலப் போக்குகளையும் மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி அவர்களைச் சுரண்டி வாழும் எத்தர்களின் தீய நடவடிக்கைகளையும் சாடத் துடிக்கும் இப்புதுமைக் கவிஞர்கள் சில சமயம் எல்லை கடந்து தங்கள் எழுதுகோலை ஓடவிடுவது நல் லோர்களின் உள்ளத்தைப் பெருமளவில் புண்படுத்துவ தாகவும் அமைந்து விடுகிறது. வரம்பு மீறி பெரியார் களை-முன்னோர்களை கேலியும் கிண்டலும செய்யும் இவர்தம் மனப்போக்கை நம்மால் ஜீரணித்துக் கொள்ள முடியாமற் போய்விடுகிறது. சான்றாக ஒரு கவிதையில,

''புத்தனே நீயும் உன் பொறுமையும் எனக்கு வேண்டாம்;
நீ யொருவனே போதியின் கீழ் செத்துப்போ''

எனக் கூறுகிறார்.

இத்தகைய கவிதைகளைப் பார்க்கும்போது நமக்கு வெறுப்பும் கசப்பும் ஏற்பட்டாலும், மக்களிடையே குறிப் பாக இளைய தலைமுறையினரிடையே இக்கவிதைகளுக்கு இன்னும் பெரும் செல்வாக்கு இருக்கவே செய்கிறது.

பொதுவுடமைச் சிந்தனையின் அடிப்படையில் சமூக மாற்றம் காண விழையும் புதுமைக் கவிஞர்கள் 'அப்புடய கவுலு' என்ற பெயரிலும், தான் தோன்றித்தனமாக சமூகக் கோணல் நிலைகளை நேரடியாகவும் கொச்சை யாகவும் சாடத் துடிக்கும் இக் கவிஞர்களை 'திகம்பர கவுலு' என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறார்கள். மூக்

கணாங்கயிறில்லா காளை மொட்டை மைதானத்தில் ஓடு வது போனறு இலக்கண விதிகளோ வழிவழி வநத மரபு களோ எதையும் பின்பற்றாத நிலையில் சமுதாய வீதி களில் சொற் சிலம்பம் ஆடமுனையும் சூரர்கள் இவர்கள்.

இவ்விருதரப்பினர் கவிதைகளிலும் கருப்பொருளாக அமைவது பெரும்பாலும் மத்தியதர வர்க்க மக்களையும் அடக்கப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள் சமுதாயத் தால் காலங்காலமாகத் தாழ்த்தப்பட்டவர்களின அவல வாழ்வையும் கொசகையாகப் படம் பிடிதது்க்காட்ட முயல்பவைகளாகும்

'அப்புடய கவுலு' பிரிவுக் கவிஞர்கள் இந்திய நாட் டின் வலிமை, உருவாக வேண்டிய ஒற்றுமை-ஒருமைப் பாட்டின் அவசியததை வலியுறுத்தும போக்கில் தங்கள் சிந்தனையைச் செலுதத்தி வருகினறனர் அதே சமயத்தி 'திகம்பர கவுலு' பிரிவினர் தனிப்பட்டவர்களைத் திருத் தினால் சமுதாயம் திருந்தி விடும என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொணடு தங்கள் கவிதைப் பணிகளை ஆற்றி வருகின்றனர்.

இவ்வாறு தாங்கள் சமூகத்திற்கு கூற விழையும் கருத்துகளை தாங்கள் விரும்பிய வடிவத்தில் தர முயலும் இப்புதுமைக் கவிஞர்களை மக்கள் பலவேறு மகுடமிட்டு அழைககிறார்கள்.

உரை நடை இலக்கிய வளர்ச்சியில் 1872ஆம் ஆண்டில வெளியிடப்பட்ட நரஹரி கோபாலகிருஷ்ணம்ம செட்டி எழுதிய ஸ்ரீ ரங்கராஜ சரித்திரம் எனற சோனாபாய் பரிணயம்' என்ற முதல் புதினம் குறிப்பிடத்தக்கதாகும். அளவில் சிறியதாக இருந்த இப்புதினம முதல் நாவல் எனற சிறப்பினைப் பெற்ற போதிலும் புதினத்துக்குரிய அம்சங்களோடு வெளிவத்த கந்துகூரி வீரசேலிங்கத்தின்

'ராஜசேகர சரித்திரம்' (1878) புதின வளர்ச்சியில் ஒரு மைல கல்லாக உருவாகியதெனலாம். இஃது முழுக்க முழுக்க மூல நூலன்று; ஆலிவர் கோல்ட்ஸ்மித் எழுதிய "தி விகார் ஆஃப் வேக்ஃபீல்ட்" என்ற ஆங்கில நாவலின் தழுவலேயாகும்.

தெலுங்கு இலக்கிய உலகில் புத்திலக்கியத் துறை வலுவாகக் காலூன்ற வழிவகுத்த கந்துகூரி வீரேசலிங்கம் "விவேக வர்த்தனி" என்ற மாத இதழையும் நடத்தி இலக்கிய வளர்ச்சிக்கு வேகமும் விறுவிறுப்பும் ஊட்டியவர்.

தொடக்கத்தில் புதின இலக்கியத் துறையை 'வசன பிரபந்தம்' என்ற என்ற பெயரிலேயே அழைத்து வந்தனர் இருபத்தைந்து ஆண்டுகள கழிந்த பின்னரே ஆங்கிலப் பெயரான 'நாவல்' என்பதனை அடியொற்றி 'நவல' என்ற சொல்லைப் பயனபடுததலாயினர்.

ஆந்திர மக்களின் அகவாழ்விலும் புற வாழ்விலும் பல்வேறு சீர்திருத்தங்களை ஏற்படுத்த விழைந்த வீரேசலிங்கம் புதினம முதலான உரைநடை இலக்கியத் துறையை வலுவோடு பயன்படுத்த விழைந்த செம்மலாவார்.

தெலுங்குப் புதின இலக்கிய வளர்ச்சிக்கு ஆற்றல் மிக்க உந்து சக்தியாக விளங்கியது 1873ஆம் ஆண்டில் 'சிந்தாமணி' என்ற மாத இதழின் தோற்றமாகும். ஆண்டு தோறும் இவ்விதழ் நடததி வந்த புதினப் போட்டியில் பலரும் பங்கேற்றனர். சிறந்த புதினத்தை ஒவ்வோராண்டும் தேர்ந்தெடுத்துப் பரிசளித்ததின் மூலம் சிறந்த புதினம் ஆண்டுதோறும் வெளிவர ஏதுவாயிற்று. இப்போட்டியில் தொடர்ந்து கலந்து கொணடு பரிசுகளைப் பெற்றவா களில் சிலகமர்த்தி லட்சுமி நரசிம்ம கவி எனபவர் குறிப பிடத்தக்கவராவார்,இவ்வாறு தெலுங்குப் புதினஇலக்கிய

வளர்ச்சியில் வீரேசலிங்கமும் சிலகமர்த்தியும் நல்ல அடிப் படையை அமைத்தவர்கள் என்ற சிறப்புக்குரியோரா கிறார்கள்.

மேலும், புதின இலக்கிய வெளியீட்டிற்கென தொடங்கப் பட்ட 'விஞ்ஞான சந்திரிகா கிரநத மணடல' என ற இலக்கிய வெளியீட்டகமும் இத்துறை வளர்ச்சிக்குக் குறிப்பிடத்தக்க பங்கை ஆற்றியுள ளதெனலாம்.

இநதிய அரசியல் நிகழ்ச்சிகள் இந்திய விடுதலைப் போராட்ட உணர்வுகளும் பதின இலககிய வளர்ச்சியில் புதிய திருப்பங்களை ஏற்படுத்தத தவறவிலலை. விடுதலை வேட்கையைக் கருவாக கொணடு பல புதினங்கள் எழுந் தன. இவற்றில், கருவில் மட்டுமல்ல உருவிலும் புதுமை பூத்துக் குலுங்கின. இத்தகைய புதினங்களில பெரும் சிறபபுக்குரியதாகக் கருதப்படுவது உன்னவ லட்சுமி நாராயண பநதுலு எழுதிய 'மாலபல்லி' (பறைச்சேரி) என்ற நாவலாகும. அனைத்திந்திய அளவில் எதிரொலித்த இந்தப் புதினததின மற்றொரு சிறப்புத் தன்மை முதன் முதலாக பேச்சு வழக்கு முறையிலேயே உரைநடை அமைந்திருந்ததாகும்.

இதற்குப்பின் புதிய இலக்கியத் துறையில் அழியா முத்திரை பதித்தவர்களில் விஸ்வநாத சததியநாராயணா, அடபி பாபி ராஜு, குடிபாடி வேங்கடாசலம் போன் றோர் குறிப்பிடததக்கோராவர் இக் காலகட்டத்தில் எழுந்த வரலாற்றுப் புதின இலக்கிய ஆசிரியர்களில் குறிப் பிடததக்கவா நோரி நரசிம்ம சாஸ்திரி ஆவார்.

நாட்டு விடுதலைக்குச் சற்று முன்னும் பின்னுமாக சிறந்து விளங்கிய நாவலாசிரியர்களில் குறிப்பிடததக்கவர் கள் ராச கொணட விஸ்வநாத சாஸ்திரி, கோபிசந்த், புச்சிபாபு முதலியோராவர். இவர்கள் படைப்புகளின்

உள்ளடக்கத்தாலும் கருத்துச் செறிவாலும் புகழ் பெற்ற வர்கள். இவர்கள சமூக வாழ்வியலைப் பல்வேறு கோணங் களில் படம் பிடித்துக் காட்டுவதில் ஆற்றல் மிக்கோராக விளங்கியவர்களாவர்.

விடுதலைக்குப் பின்னர் நாவல்கள் ஒரு புதிய பாட்டை யில் நடைபோட்டு செழிப்போடு வளராயின. இக்கால கட்டததில் சமுதாயத்திலும் மனித உள்ளஙகளிலும் வேக மாக நிகழ்ந்த மாற்றங்களை நிலைக்களனாக அமைத்து நிறைய புதினங்கள் வெளிவரலாயின. இப்படைப்பாசிரி யர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் கொடவண்டி குடும்ப ராவ், மஹீதர ராம மோகன் ராவ்,உப்பல லட்சுமண ராவ் சத்திய நாராயண மூர்த்தி போன்றோர் ஆவார்.

கிராமிய சூழ்நிலையை களமாகக் கொண்டு, அங்கு வாழும் மக்களின் வாழ்வியல் போக்கை விண்டுரைக்கும் திறமை மிக்கோராக விளங்குபவர் மதுராந்தகம் ராஜா ராம் ஆவார்.

சமூகப் பிரச்சினைகளை பல்வேறு கோணங்களில் சிந்திப்பதில் ஆந்திர மக்களிடையே செல்வாக்குப் பெற்ற வர்கள் சுதர்சனம், ரந்தி சோமராஜு, சிங்கராஜு லிங்க மூர்த்தி, தும்மலபல்லி ராமலிங்கேஸ்வர ராவ் முதலியோர் களாவர்.

தெலுங்குப் புதின இலக்கியத் துறையைப் பொறுத்த மட்டில் விடுதலைக்கு முன் ஓரிரண்டு பெண் எழுத்தாளர் கள் அங்குமிங்குமாக தலை தூக்கினாலும் நாட்டு விடு தலைக்குப் பின் அவர்கள் எண்ணிக்கை விரைந்து வளர்ந்தது எனலாம். 1050-க்குப் பின்னர் தெலுங்கு நாவல் துறையில் பெண்களின் ஆதிக்கம் ஏற்படத் தொடங்கிவிட்டதென்று கூட கூறலாம்.

சமுதாய விழிப்புணர்வை மையக் களமாக் கொண்டு உள்ளுணர்வுகளை திறம்படச் சித்திரிப்பதில் இவர்கள் தனியாற்றல் மிக்கவர்களாக விளங்குகிறார்கள் என்று கூடக் கூறலாம். பெண்களின் பிரச்சினைகளை மனப் போராட்டங்களை உளவியல் அடிப்படையில் முப்பாள ரங்கநாயகியம்ம போன்றவர்கள் அற்புதமாகச் சித்திரிப்பதில் தன்னிரகற்று விளங்குகிறார்கள். பெண் படைப்பாளிகள் வரிசையில் லதா, வாசி ரெட்டி, சீதாதேவி, யத்தனபூடி சுலோசனா ராணி, ஸ்ரீதேவி, பீனா தேவி, பரிமளா சோமேஸ்வர் துரகா ஜானகி ராணி, சாரதா எனப் பட்டியல் விரிந்து கொண்டே செல்லுமளவுக்குப் பெண் படைப்பாளிகள் தெலுங்கு இலக்கிய உலகில் மிகுந்துள்ளனர்.

தெலுங்குச் சிறுகதைத் துறை குரஜாடா அப்பா ராவ் காலத்திற்குப் பின்னரே வளர்ச்சிப் பாதையில் துரித நடைபோடத் தொடங்கியதெனலாம். அவருக்கும் முன்னதாக சிறுகதை என்ற வடிவம் இருந்தாலும் கூட இன்று நாம் சிறுகதையாக ஒப்புக் கொள்ளும் சரியான வடிவமைப்பில், அதற்கேற்ற உததிகளைக் கையாண்டு சிறுகதைகளை வடித்து மக்களிடையே உலவ விட்ட பெருமை குரஜாடா அப்பா ராவ் அவர்களையே சாரும். எனவே, தெலுங்கு இலக்கிய உலகம் அவரை 'சிறுகதைத தந்தை' என்ற அடைமொழியால் அழைத்துப் பெருமைப்படுகின்றனர்.

நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த மக்களின் வாழ்வை நகைச் சுவையுடன் விவரிப்பதில் முனி மாணிக்கிய ராவ், சிந்தா தீச்சுலுவும் சிறந்து விளங்குகிறார்கள். பெண்களின் பிரச்சினையை கருவாக அமைத்து நல்ல சிறுகதைகளை உருவாக்குவதில் வலலவர் குடிபாடி வெங்கடாசலம் பாலகும்மிபத்மராஜுவும் சிறுகதை இலக்கியவுலகில் தனக்

கென ஒரு சீரிய இடத்தைப் பெற்றுக் கொண்டவர் கலை யுலக வாழ்வை அடித்தளமாகக் கொண்டு சிறுகதை புனை வதில் வலலவர் அடிவி பாபிராஜு ஆவார்.

புதினத் துறையைப் போன்றே சிறுகதையுலகிலும் பெண்களின எண்ணிக்கை பாராட்டத்தககு அளவில உள்ளது பெண் சிறுகதை எழுததாளிகளில் குறிப்பிடத் தக்கவர்கள் கண்பர்தது வரலட்சுமியம்ம மாலதி சநதூர், இல்லிந்தலா சரஸ்வதி முதலானோர் குறிப்பிடததக்கவர் களாவர்.

நாடகத்துறையும் மற்ற இலக்கியத்துறைகளைப் போல வளர்ச்சி பெறறுள்ள ஒனறாகும. தெலுங்கு நாடக உலகில் தொடக்க காலததில் புராண இதிகாச கதையம் சங்களே நாடக வடிவில எழுதி நடிக்கப்பட்டு வந்தன என்றாலும் பிறகாலத்தில் சமூக நாடகங்கள் பெருமளவில் எழுதப்பட்டன.

தெலுங்கு நாடகத்துறை வளர்ச்சிக்கு நாடக சபாக் கள் பேருதவி புரிந்துள்ளன. இவற்றுள் ஆரம்ப காலத்தில் 'சரச விநோதினி சபா' என்ற அமைப்பை உருவாக்கி தர் மாவரம் ராமகிருஷ்ண மாச்சார்யலு 'ஆந்திர நாடகத் தந்தை' என்ற சிறப்புக்குரியவராக விளங்குகிறார். நல்ல நடிகராகவும். நாடக எழுத்தாளராகவும் விளங்கி தர்மா வரம் 28 முழு தெலுங்கு நாடகங்களை எழுதி நாடகத் துறையை வளமாககியவர். வேதம் வேங்கடராம சாஸ்திரி பனுகண்டி நரசிம்மராவ், டி. கிருஷ்ணமாச்சார்யலு, குரஜாட அப்பா ராவ் போன்றவர் முழுநீள நாடகங்களை எழுதி வெற்றிகரமாக மேடையேற்றிப் பொது மக்களி டையே புகழ்பெற்றவர்கள்.

விஸ்வநாத சத்திய நாராயணாவின் 'நர்த்தன சாலா' நாடகமும் வேலூரி சநதிசேகரம் எழுதிய காஞ்சன

மாலா' நாடகமும் வேலூரி நடிப்பதற்கேற்றவாறு செம்மையாக அமையாவிடினும் படிப்பதற்கேற்ற மிகச் சிறந்த நாடகப் படைப்புகளாக விமர்சகர்களால மதிக்கப்படுவனவாகும்.

மறற இலக்கியத் துறைகளைப் போன்று சமூகப் பிரச்சினைகளை மையமாகக் கொணடு •எழுதப்பட்ட சமூக நாடகங்களும தெலுங்கில் ஏராளம உண்டு

நாளடைவில் முழு நீள நாடகங்களைவிட ஓரங்க நாடகங்கள் மக்கள் மததியில் புகழ் பெறலாயின ஓரங்க நாடகாசியர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் தலைமை நீதிபதி ராஜமனனார், நாரலா வேங்கடேஸ்வர ரால், மத்து கிருஷ்ணா, ஆச்சார்ய ஆத்ரேயா. ஸ்ரீபாத கோபால கிருஷ்ணமூர்ததி ஆகியோராவர்.

திரைப்படத்தின் ஆதிக்கம் முழு நீள நாடக வளர்ச்சியைப் பாதித்த போதிலும் விழாக்களிலும் முக்கிய நிகழ்ச்சிகளின் இறுதியிலும் குறுகிய காலததில் நடிதது முடிக்கக் கூடிய ஓரங்க நாடகங்கள் ஓரளவு மக்களிடையே செலவாக்கும் பெற்று வளரவே செய்தது. ஆனால் ஏனோ தெரியவிலலை. நீணட நாட்களாக ஓரங்க நாடகத்தின் கரு ஏழை விவசாயி, வருமானம் போதாத குமாஸ்தா, விபச்சாரத்தில் ஈடுபட நேர்ந்த பெண்களின் அவலநிலை, ரிக்ஷாக்காரன் என இத்தகையோரைச் சுற்றிச் சுற்றியே கதை வளைய வந்து கொணடிருக்கிறது.

அமெச்சூர் நாடக சபாக்கள் நாடகக் கலை வளர்ச்சிக்கு இன றும் வலுவாக முட்டுக் கொடுத்துக் கொண்டிருப்பது வரவேற்கத்தக்க அம்சமாகும். நாடகத் துறை வளர்ச்சிக்கு வானொலியின் பங்கும் பணியும் போற்றத் தக்க வகையில் அமைந்து வருவதை பாராட்ட வேண்டும்.

இலக்கிய திறனாய்வுத் துறையும் தெலுங்கு இலக்கிய உலகில வலுவாக வேரூன்றி வளர்ந்து வரும் துறையாகும். இலக்கிய வளாச்சியில் இலககிய இதழ்களின பங்கைக் குறைத்து மதிப்பிட்டு விட இயலாது.

சிறுகதை, புதினம், கவிதை என இலக்கியத்தில் எத் துணை வகைகள் உண்டோ அதே போன்று எல்லா வகை களிலும் சிறுவர் இலக்கியங்களும் வளர்ச்சி பெற்றுள்ளன.

ஒரு கால கட்டத்தில் புராண இதிகாச சம்பவங் களைக கதைகளாக சிறுவர்க்கு ஏற்றபடி எழுதப்பட்டி ருந்த போதிலும் காலப போக்குக்கேற்ப அவற்றின் கருவும் உருவும் சமுதாயச் சூழ்நிலைகளின தனமைக் கேற்பப் படைக்கப்பட்டன.

வீரேசலிங்கத்தை முன்னோடியாகக் கொண்டு எழுந்த சிறுவர் புத்திலக்கிய வளர்ச்சிககு ஜி. வி. சீத்தா பதியை ஆசிரியராகக் கொண்ட 'பாரதி' மாத இதழ் சிறு வர்களுக்கென முதன்முறையாகச் சில பக்கங்களை ஒதுக் கியது. 'பாலானந்தம்' என்ற தலைப்பில் சிறுவர்க்கான கதை, கவிதைகள வெளியிட்டு சிறுவர் இலக்கிய வளர்ச் சிக்கு உதவியது. அதன் பிறகு என் ராகவராவ் ஆசிரிய ராயிருந்த 'பாலர், மாத இதழ் முழுக்க முழுக்க சிறுவர் களுக்காகவே வெளி வந்தது. அதைத் தொடர்ந்து 'பால மித்ரா' போன்ற பல இதழ்கள் சிறுவர் இலக்கிய வளர்ச் சிக்கு உழைக்கலாயின. சிந்தா தீட்சிதுலு முதன முதலாக 'லீலா சுந்தரி' என்ற சிறுவர் புதினததை எழுதி வெளி யிட்ட பெருமைக்குரியவராவார்.

சிறுவர் இலக்கியத் துறையில் அறிவியல் நூல்களை எழுதி வெளியிட்டவர்களில் விசா அப்பா ரா்வ், ஏ. வி. எஸ். ராமாராவ், வி வெங்கடப்பையா, ஜே ராம கிருஷ்ணா போன்றோரைக் குறிப்பிடலாம்.

தெலுங்கு இலக்கிய வளர்ச்சிப் பாதையில் உரைநடையில் இலக்கிய நடையின் இடத்தை இடைக்காலத்தில் பேச்சு வழக்குச் சொற்கள் பெருமளவில் ஆக்கிரமித்துக் கொண்டன. எப்படியோ இப்பேச்சு வழக்கு நடையை இலக்கிய வார, மாத இதழ்களும் நாளேடுகளும் வானொலியும மனதார ஒத்துக் கொண்டு ஆதரவளித்து வந்தபோதிலும் பலகலைக்கழகங்கள், பாட நூல்களில் இப்பேச்சு வழக்கு நடை இடம் பெறுவதை ஆதரிக்க வில்லை என்பது இங்குக் கவனிக்கத்தக்கதாகும். இன்று பேச்சு வழக்கு இடததை மீணடும் இலக்கிய நடைக்கே திருப்ப வேண்டும் என்ற உணர்வு இலக்கியப் படைப்பாளர்கள் மத்தியில் மட்டுமல்லாது வாசகர்களின் உள்ளத்திலும் அழுத்தமாக எழுந்துள்ளது. இஃது தெலுங்கு இலக்கியத்தில் மற்றுமோர் மாற்றத்துக்கு வழிவகுக்கும் எனலாம்.

தெலுங்கு இலங்கிய வளர்ச்சியில் மொழி பெயர்ப்புத் துறைக்கும் பங்கு உண்டு. மேனாட்டார் வருகைக்கு முன் சம்ஸ்கிருத மொழி இலக்கியங்களை மொழி பெயர்த்தும் தழுவியும் உருவாக்கிய இலக்கியங்களே தெலுங்கு மொழியில் மிகுதி. மேனாட்டார் வருகைக்குப் பின ஆங்கிலும் முதலான மேனாட்டு மொழி இலக்கியங்களின் பல்வேறு வகைகளையும் தெலுங்கில் பெயர்த்துத் தெலுங்கைச் செழுமைப்படுத்தினா. கவிதை, புதினம், சிறுகதை, திறனாய்வு என பல்வேறு துறைகளையும் ஆங்கில மொழி இலககியப் போக்கையும் அடியொற்றி மூலநூலாகவே எழுத வேண்டும் என்ற வேடகை புலமையார்களின உள்ளத்தில் முளைவிட்டு எழவும் இதுவே காரணமாக அமைந்தது

அதே போன்று இந்தி, மராட்டி, தமிழ், வங்காளி போன்ற இந்திய நாட்டு மொழி இலங்கியங்களை இறக்குமதி செய்தும் ஏற்றுமதி செய்தும் தெலுங்குக்கு வளமூட்டி

னர். இன்றும் முனைப்பாக இயங்கி வளமூட்டி வருகின்ற னர். இதன் மூலம் ஒருவரையொருவர் புரிந்து கொள்வது மட்டுமல்லாது இலக்கிய சிறப்புப் கூறுகள் எங்கெங்கு உள்ளதோ அவைகளையெல்லாம் தெலுங்கில் கொண்டு வந்து மொழியையும் இலக்கியத்தையும் செழுமைப் படுத்த முடிகிறது. இப்பணியை இன்னும் எளிதாக்கும் வண்ணம் தென்மொழிகள் புத்தக நிறுவனம், தேசிய புத்தக டிரஸ்ட், சாகித்திய அக்காதெமி போன்ற பல் வேறு அமைப்புகள் கடந்த பல ஆண்டுகளாக முனைந்து உழைத்து வருகின்றன.

# மலையாள இலக்கியம்

மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும் இடைப்பட்ட அழகான நிலப்பகுதியான கேரளாவில் சுமார் ஒன்றரைக் கோடி மக்கள் பேசும் மலையாள மொழி இலக்கியத்தின் வரலாறே பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்துதான் தொடங்குகிறது. அதறகு முன் உருவான மலையாள இலக்கியங்கள் எனக் கூறக் கூடியது எதுவுமே இருந்ததாகத் தெரியவில்லை.இன்னும் சொல்லப் போனால் பதினாறாம நூற்றாண்டில் தோன்றிய எழுத்தச்சன் காலத்திற்குப் பின்னர்தான் மலையாள இலக்கியம் சரியான திக்கில் நிலையான உருவோடு வளரத் தொடங்கியது எனலாம்.

மிக உயர்ந்த இலக்கியச் சிறப்பும் தத்துவச் சிந்தனையும் பொதிந்துள்ள 'அத்யாத்ம ராமாயணம்', 'மகாபாரதம்' போன்ற பேரிலககியங்களை மலையாள மொழியில் எழுதி வளமூட்டிய எழுத்தச்சனைப் போன்றே பதினேழாம் நூற்றாண்டில் கொட்டாரக்கர தமபுரான், கோட்டயம் கேரள வர்மா, உண்ணாயி வாரியார் போன்றவர்கள் 'கதகளி' இலககிய வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தார்கள.

பக்தியுணர்வை ஊட்டுவதற்கும் தத்துவக் கருததுக்களைப் பரப்புவதற்கும் பழமபெரும் இதிகாசக கதையுருவில் புலமையாளர்களிடையே மட்டும் இருந்து வந்த மலையாள இலக்கியததை, மக்களின் எண்ணங்களையும் பிரச்னைகளையும் சமுதாயத்தின் குறை நிறைகளையும் பணடிதர் நடையில் அல்லாது பாமரர் மொழியிலேயே பிரதிபலிக்கும் புதுவகைப் போக்கில் வளர்க்க முனைந்தவர் குஞ்சன் நம்பியார் ஆவார். பதினெட்டாம் நூற்

றாண்டில் தோன்றிய அவர் 'துள்ளல் பாட்டு' என்ற புது வகை இலக்கியத் துறையைத் தோற்றுவித்தார். சமுதாயத்திற்காணும் குறைபாடுகளை நையாண்டி செய்யும் போக்கில் முழுமையாக வெளிப்பட்ட முதல் மக்கள் கவிஞர் இவரே எனக் கூறலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இநநாடு வந்த மேனாட்டினர் வருகையின் விளைவாலும் புதிய கல்வி முறையின் எதிரொலிப்பாலும் அச்சுத் தொழில் பெருக்கத்தாலும் உரைநடை வளர்ச்சியினாலும் புதுப்புது வடிவங்களில் மலையாள கவிதையும் புததுலக இலக்கியத் துறைகளும் மிடுக்கோடு வளரத் தொடங்கின.

இலக்கியத் துறையில் ஏற்பட்ட இந்த மாபெரும் மாறுதலுக்கு குமாரன் ஆசான், மகாகவி வள்ளத்தோல், உள்ளூர் பரமேஸ்வர ஐயர் போன்ற கவிஞர்களும், ·சந்து மேனன, ஈ.வி. கிருஷ்ணப் பிள்ளை, வி.வி. ராமன் பிள்ளை போன்ற கதை இலக்கிய எழுத்தாளர்களும் வேகமும் விறுவிறுப்பும் ஊட்டினர்.

நாடு விடுதலை பெற்ற பின்னர் எல்லாத் துறைகளிலும் ஒரு மாற்றம் ஏறபட்டது போன்றே இலக்கியத் துறையிலும் புதிய போக்குகளும் உததிகளும் வலுவாகக் காலூன்றி வளப்போடு வளரத் தொடங்கின. மலையாள இலக்கியத் துறையைப் பொருத்தமட்டில் இதற்கான அடிப்படை விடுதலைக்குச் சற்று முன்னரே போடப்பட்டு விட்டதெனலாம்.

ஆசானுக்கும் வள்ளத்தோலுக்கும் பின்னர் பெருங் கவிஞர் எனப் போற்றப்படும் ஜி. சங்கர குருப் கவிதை இலக்கியத் துறையை மற்றவர்களினறும் சற்று மாறுபட்ட புதிய நோக்கில் வளர்க்கத் தொடங்கினார். கற்பனை தான் கவிதைக்கு அடிப்படை என்ற நிலையைக் கடந்து கருத்தும் சிந்தனையுமே கவிதைக்கு இன்றியமையா அடித்

தளம் என்ற போக்கில் கவிதைகள் இயற்றி வரலானார். தாகூரையே தம் கவிதாவுணர்வின வழிகாட்டியாகப் போற்றும் ஜி. சங்கர குறுப் இயற்கையை மனிதனின் ஆத்மப பிரச்சினைகளோடு தொடர்புபடுத்தி கவிதைகள் புனையலானார். அந்தித தாரகை, உதய நட்சத்திரம், செக்கர் வானம், வைகறைப் பொழுது, தவழும் மேகம், அலைமோதும் கடல் ஆகியவற்றை மனிதனின ஆத்மா வோடு நெருங்கிய தொடர்பு கொணட குறியீடுகளாக (உருவமாக) அமைத்து தம் கவிதைகளை இயற்றும் தனிததிறமை பெற்றவராகத திகழ்கிறார். இவ்வாறு மலையாள இலக்கிய உலகில் முதனமுதலாக குறியீட்டு முறையை (Symbolism) அறிமுகப்படுத்தியதோடு அத் துறையில் ஓர் தனித தன்மையையும் இன்று வளர்த்து வரு கிறார். அறிவியலின் வாயிலாக ஆனமீகத்தை நோக்கிச் செல்லும கவிஞர் புதுப்புது உலகங்களை ஆய்வதில் தனக் குள்ள பேரார்வத்தை ''அம்மாமன் ஆசீர்வதிக்குந்நு'' (மாமன் ஆசீர்வதிக்கிறார்) என்ற கவிதையின் இரு பாத் திரங்களான உலகமும் சந்திரனும் விஞ்ஞான விளைவு களைக் குறித்த விஞ்ஞான மொழியிலேயே பேசும்படியாக கவிதை அமைத்திருப்பது காலததோடு இணைந்து செல்வதில் இவருக்குள்ள விஞ்ஞான வேட்கையைக் காட்டுகிறது. 'மிஸ்டிஸம்', 'சிம்பாலிஸம்' ஆகிய இரண்டும் அவரது கவிதைப் படைப்புக்களின் இரு கண்களாக அமைந்திருந்த போதிலும் இவர் அனறாட வாழ்க்கையின் அம்சங்களையே தம் கவிதை களின் கருவாகத தேர்ந்தெடுத்து அமைக்கிறார்.

இக்கால அறிவியற்கலையின் பெருவளர்ச்சியையும் அது மனித குலத்தின சிந்தனையிலும் செயலிலும் விளை வித்துள்ள புதுப்புது திருப்பங்களையும் தம் கவிதைகளில் பிரதிபலிக்க ஜி. சங்கர குறுப் துடிக்கிறார். ''நிமிஷய'' என்ற கவிதையில் முன்னேறிச் செல்லும் வாழ்க்கையின

ஒவ்வொரு நிமிடமும் எல்லையற்ற தத்துவத்தின் சிறுசிறு துளிகளாக இருப்பதை அழகுற விளக்குகிறார்.

இத்தகைய அறிவியல், பொருளாதார சிந்தனைகளின் வளர்ச்சிப் போக்கிறகேற்ப கருவை அமைத்துக் கவிதை புனையும் கவிஞர்களின் தொகை மலையாள இலக்கிய உலகில் இன்று வளர்ந்தே காணப்படுகிறது. ரொமாண்டிஸத்தின் மையக் கோட்பாடான 'இலக்கிய நிலக கற்பனை என்ற கொள்கைகளெல்லாம் மலையாள இலக்கிய உலகில் இனறு வேரற்ற மரமாக வீழ்ந்து வருகிறது. இலக்கியத்தில் மேட்டுக் குடியினருக்கிருந்த பெருமையும கித்தாப்பும் இன்று வெகுவாகக் குறைநதுவிட்டது. மண்ணிலே புழுவெனப் புரளும் சாதாரண மக்களும் வறுமைப் பேயின் கைகளிலே சிக்கித திணருவோரும் ஒடுக்கப் பட்டவர்களுமே இன்றை கவிதையின் கருப் பொருளாக அமைகிறார்கள். அவர்களைப் பறறியும் உள்ளது உள்ளபடியே ரியலிஸ' பாணியில இலககியம படைக்கவே கவிஞர்கள், எழுத்தாளர்கள பேரார்வம காட்டுகின்றனர்.

இந்திய விடுதலைக்குப் பின்னர் அரசியலிலும் சமூக வாழ்க்கையிலும் ஏற்பட்ட மாற்றங்கள், அதைத் தொடர்ந்து உருவான பல்வேறு வகையான பிரச்சினை அத்தனையும் சேர்ந்து எழுத்தாளர்களின் சிந்தனையை புதிய கோணங்களில் செலுததத தூண்டியுள்ளன. அதன எதிரொலியை இனறைய மலையாள இலக்கிய உலகின் போக்கில் நனகு காணமுடிகிறது சமூகப் புரட்சிக்கு அறைகூவல் விடுக்கும கெடாமங்கலம் பப்புக்குட்டியின் "ஞங்ஙள் சோதிக்குந்நு" (நாங்கள கேள்வி கேடபோம) கவிதையிலும பி. பாஸ்கரன், எம். பி. அப்பன் போன்றோரின் இதமான கவிதைப் படைப்புக்களில் சமூகத்தின் நோயான சமத்துவமினமைப் பேரக்கைத் தகர்க்கத் துடிக்கும் வீராவேசத்தையும காணகிறோம். புறப்பொருள்களைச் சிததரிப்பதன் மூலம் உள்ளுணர்ச்சிகளை வெளிப்

படுத்தும் கவிதைகளை இயற்றுவதில் சிறந்து விளங்கும் பாலாநாரயண நாயரின் படைப்புக்களுள் ''மனுஷ்யன'' (மனிதன ), ''நிாததனன்'' (வறியன) போனற கவிதைகள் சிறந்த விளங்குகின்றன. வயலார் ராமவர்மா; ஓ.என் வி. குறுப், அக்கித்தம் ஒளப்பமண்ண, ஓ. எம்.அனுஜன் போன்றவர்களும் குறிப்பிடததக்கவர்களாவர்.

இன்றைய கவிஞர்களில் குறிப்பிடத்தக்க மற்றொருவர் வைலோப்பிள்ளி ஸ்ரீதர மேனன் ஆவார். கவிதைத் துறையில் தனிப்போக்கைக் கையாளும் இக்கவிஞர் காலததால் மாற்றமுற்று மறைகிற பிரச்சினைகளைக் காட்டிலும் காலததால் அழியாத உண்மைகளையே கருவாக வைத்து கவிதை புனைகிறார். இவரது ''அஸ்ஸாம் பணிக்கார்'' (அஸ்ஸாம் கூலிக்காரர்கள்) ''ஸஹ்யன்றே மகன்'' (மேலமலையின் மகன்), ''மாம்பழம்'' போன்ற கவிதைப் படைப்புக்கள் அதற்கு உதாரணங்களாகும்.

ஒரே சுருதியில் ஒத்து ஊதுகிறவர்களைப்போல ஒரே விதமான கவிதை அமைப்பு முறைகளினின்றும் பெரிதும் மாறுபடட அமைப்பில் புதுக் கவிதைகளை இயறற வேண்டுமெனற வேட்கையால உநதப்பட்டு சோதனை முறையில் புதுககவிதைகளை இயற்ற முனைந்தவர்களுள் குறிப்பிடததக்க ஒருவர் என.வி. கிருஷ்ணவாரியர் ஆவார். காலத்துக்குக் காலம் மலையாள கவிதை அமைப்பில் சிறு சிறு மாற்றங்கள் ஏற்பட்டே வந்துள்ளன என்றபோதிலும் ஒரு பெருமாறறததுக்கு வழிவகுக்க வேணடுமெனபதே இவர்களின நோக்கம. இப்புதுக் கவிதைத் துறையில் சோதனை செய்து வந்தவருள் குறிப்பிடத்தக்க மற்றொருவர் இடசேரி கோவிநதன் நாயர். கவிதைக் கட்டுக்கோப்பில் அழகிருக்க வேணடுமென்பதிலெல்லாம் சிறிதும் அக்கறை இலலாத இவர் இனறைய சமூகப் பிரச்சினைகளையும் தொழிலாளர்களின வாழ்க்கையே அடித்தளமாகக் கொண்டு கவிதை இயற்றினார். சுருக்கமாகக் கூறினால்

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் முற்போக்குக் கருத்துக்களால் பாதிக்கப்படாத மலையாளக் கவிஞர்கள் மிகமிகக் குறைவு எனக் கூறலாம்.

எத்தகைய புதிய மாற்றங்களுக்கும் முழுமையாக உட்படாத நிலையில் பழைய பாணியையே பின்பற்றி கவிதை புனையும் ஒருசில கவிஞர்களுள் பி. குஞ்ஞுராமன் நாயர். கே,கே. ராஜா போன்றோரை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

கவிதைத் துறையைக் காட்டிலும் மலையாள இலக்கிய உலகின கவனம் புதினத் துறையையும் சிறுகதைத் துறையையுமே சார்ந்துளளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். கவிதைகளைவிட கதை இலக்கியத் துறையிலேதான் மலையாள மண்ணின் தனி வாடை தெளிவாகப் புலப்படுகினறது.

மலையாள மொழியில் உரிய வடிமைப்போடு வெளிவந்த முதல் புதினம் எனக் கூறப்படும் 'இந்து லேகா'வே ஒரு சமூகப் படைப்பாக அமைந்தது. அதேபோக்கில் மலையாள புதினத் துறையின் வளர்ச்சிக்கு வங்கப் புதின உலகம் முன்னோடிப் பாதையாக அமைந்தது எனலாம். நாளடைவில் பழைய கற்பனைப் போக்கு விடைபெறவே கலப்பற்ற பிரத்தியட்ச உண்மைகளைத் தத்ரூபமாகச் சித்திரிக்கும் ரியலிஸப் போககுத் தலைதூக்கி மலையாள புதின இலக்கிய உலகில் நிலையான இடத்தைப் பெறத் தொடங்கியது. மாபஸான், ஃபலாபர்ட், செக்கோவ், இப்ஸன் போன்ற மேலைநாட்டினரின் பிரத்தியட்சப் போக்கில் மலையாள கதை இலக்கியத் துறை பீடுநடை போட இடையறாது முயன்றது. ஏ, பாலகிருஷ்ணப் பிள்ளையின வழிகாட்டுதலில் தகழி, கேசவதேவ் போன்றவர்கள் மலையாள கதை இலக்கிய உலகில் ஒரு புதுயுகத்தையே தோற்றுவிக்கலாயினர். நாட்டு விடுதலைக்குப்

பின்னர் சாதிப்பிடிப்பினின்றும் வறுமைச் சேற்றினின்றும் அறியாமை இருளினின்றும மக்களை விடுவிக்க எழுத் தாளர்கள் தம் எழுதுகோலை பேராற்றல மிக்கக் கருவி யாகப் பயன்படுத்தத தொடங்கினர்.

சமூகப் பிரச்னைகளை மையமாக வைத்து தகழி எழுதிய ஆரம்பகால புதினங்களான "தோட்டியுடெ மகன" (தோட்டியின மகன), "தெண்டி வர்க்கம்" போனறவைகள் சமூகத்தின் அடித்தளத்தில் வாழும் தோட்டி போன்ற தாழ்ந்த நிலையில் வாழும் ஏழை மக் களின் வறுமை வாழ்க்கையையும் சமூகத்தில எதிர்நீச்சல் போட்டு உயரததுடிக்கும் ஆசைக் கனவுகளையும் கண் ணாடிபோல் பிரதிபலித்தன. தம் மகனை 'தோட்டி' என்ற தாழ்ந்த அந்தஸ்திலிருந்து உயர்த்த முயன்ற தாய் தந்தையரின் ஆசை நிறைவேறாது அவர்கள் இறப்பதை யும், தோட்டித் தொழிலின் கசப்பான அனுபவங்கள் ஊட்டிய வெறுப்புணர்ச்சியினாலும உந்தப்பட்ட தோட்டி மகன், தோட்டித் தொழிலாளர்களின புரட்சிக் குத் தலைவனாகி இறுதியில் பலியாவதையும் விளக்கும் இப்புதினம் தோட்டி வாழ்க்கையின் சீர்கேட்டைச் செவ் விய முறையில் படம் பிடித்துக் காட்டி விடுகிறது. மற றொரு படைப்பான "ரண்டிடங்கழி" (இரண்டு படி) குட்ட நாட்டின சதுப்பு நிலங்களில வாழும் நிலமற்ற ஏழைக் குடியானவப் புலையர்களின் சீரழிநத வாழ்க்கை யை உயிரோவியமாகத் தீட்டிக் காட்டுகிறது. இவரது புகழ்பெற்ற மற்றொரு புதினமான 'செம்மீன' ஆழப் புழை மீனவர்களின் வாழ்க்கையை அப்பட்டமாகச் சித் தரிததுக் காட்டுகிறது.

ரியலிஸப் போக்கில் இப்புதினம் அமைக்கப்பட்டிருந் தாலும் கதையின் முடிவு என்னவோ ரொமாணடிஸப பாதையிலேயே சென்று முற்றுப்பெறுகிறது. ரியலிஸமும் ரொமாணடிஸமும் இரு துருவங்களல்ல:அவை இணைந்து

செல்லவும் முடியும் என்பதற்கு இப்புதினம் தக்கதோர் எடுத்துக்காட்டாக உள்ளது. மேலும், இக்கதை நிகழும் பகுதிகளையும் மீனவ மக்களின் வாழ்க்கை முறையையும் 'கற்பு தவறின மீனவப் பெண் கடலம்மையின் கடுஞ் சீற்றத்துக்கு இரையாவாள்' என்ற மீனவர் நம்பிக்கையும் பிரத்தியட்ச உண்மைக்குச் சற்று மாறாகத் தோன்றினும தன் எழுத்து வன்மையின் வாயிலாக அவை அனைததை யுமே ரியலிஸம் என எண்ணி ஏற்கும்படி செய்துவிடுகிறார். தனி மனிதர்களின வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் எண்ணங் களையும் பிரதிபலிப்பதன மூலம் அந்த இனத்தின் ஒட்டு மொத்தமான இயல்புகளையே சித்தரிததுக் காட்டுவது இவரது படைப்புகளில காணும் தனிச்சிறப்பாகும்.

இத்தகைய ரியலிஸப் போக்கில் தகழிக்கு இணையாக விளங்கும் கேசவதேவ் தம் படைப்புக்கு வேண்டிய பாத் திரங்களையும் நிகழ்ச்சிகளையும் சாதாரண ஏழை மக் களின் மத்தியிலிருந்தே தேர்ந்தெடுத்து அமைக்கிறார். சமூகத்தின் கடைக்கோடியில் வாழும் ரிக்ஷாக்காரனிட மும் மற்றவர்களிடமும் காண முடியாத அன்பும் பரிவும் அசாதாரண தியாக உணர்வும மலர்ந்து மணம் பரப்ப முடியும் எனபதற்கு ஏற்ற எடுத்துக்காட்டே "ஓடயில் நின்னு" (சாக்கடையிலிருந்து) என்ற புதினத்தில் வரும் 'பப்பு' என்ற பாத்திரம். தேவின் படைப்புக்கள் பெரும் பாலும் சமூக சீர்கேட்டை எதிர்த்து முழக்கமிடுவதாகவும் தொழிலாளர் முன்னேற்றத்தை குறியாகவும், வாழக்கை யினுள மறைந்து கிடக்கும் ஆழ்ந்த இரகசியங்களை அகழ்ந்தெடுத்து வெளிக்கொணரும போக்கிலுமே அமைந் துள்ளன 'உலக்க' (உலக்கை), 'ஆர்க்குவேண்டி' (யாருக் காக), 'நடி' (கடிகை), 'ப்ரந்தாலயம்' (பைத்தியக்கார விடுதி) போன்ற புதினங்கள் உழைக்கும் சமுதாயத்திடை யே பொங்கி நிற்கும் புரட்சியுணர்வையும் சமுதாய சீர கேட்டிற்கு அடிப்படையான காரணங்களையும் விண்டு ரைப்பனவாகவும் அமைநதுள்ளன.

பொருளற்ற பழக்க வழக்கங்களை ஏளனச் சிரிப் போடு விளக்கும் வைக்கம் முஹம்மத் பஷீரின் 'ண்றுப்பாப் பாய்க் கொரானேண்டார்ந்நு'' (என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது) ''பால்யகால சகி'' (இளம் பருவத்துத் தோழி) போன்ற புதினங்களும் ஏழை பள்ளியாசிரிய களின் சோக வாழ்வைச் சித்திரிக்கும் ஜோஸப் முண்ட சேரியின் ''ப்ரொபஸர்'' என்ற புதினமும் எஸ். கெ. பொற்றக்காட்டின் ''விஷகன்யக'', ''மூடு படாம்'' (முகத்திரை), ''நாடன் ப்ரேமம்'' (நாட்டுப்புறத்துக் காதல்) போன்றவைகளும் குறிப்பிடத்தகப் படைப்புக் களாகும். ரியலிஸத்தையும ரொமாண்டிஸத்தையும் இணைதது்ப் புதினம் படைப்பதில தனித்திறமை பெற்ற வராக பொற்றக்காட் விளங்குகிறார். பி. சி. குட்டிக் கிருஷ்ணனின் ''உம்மாச்சி'', ''சுந்தரிகளும் சுந்தரன் மாரும்'' என்ற புதினங்களும் வாசுதேவ நாயரின் ''நாலு கெட்டு'' (நான்கு கட்டுள்ள வீடு), பாரப்புறத்தின் ''நிணை மணிஞ்ஞ கால்ப்பாடுகள்'' (இரத்தம் தோய்ந்த அடிச்சு வடுகள்), ஆர். எஸ். குறுப்பின் ''தோட்டி'', சுரேந்தி ரனின் ''தாளம்'', விவேகானந்தனின் ''கள்ளிச் செல் லம்மா'',மலையாற்றூர் இராமகிருஷ்ணனின்''பொன்னி''. போன்ற இக்கால கட்டத்தில் எழுந்த புதினங்கள் மலை யாள புதின இலக்கியத் துறையில் அமரத்துவப் படைப் புக்களாக விளங்கும் தகுதியுடையவைகளாகும்.

மேற்குறிப்பிட்ட எழுத்தாளர்களில் பலரும் சிறுகதை களின் மூலம் புதினப் படைப்பாளர்களாக மாறியவர் களே.புதின இலக்கியத் துறையைக் காட்டிலும் சிறுகதைத் துறை இன்னும் சற்று வலுவாக மலையாள இலக்கிய உலகில் காலூன்றி வளர்ந்து வருகிறது.

சமுதாயத்தின் போக்குகளை, கோணல் நிலைகளை, காணும் குறைபாடுகளை அங்கம் அங்கமாகப் பிட்டு வைக்கும் கருவியாக மலையாள எழுத்தாளர்கள் சிறு

கதைத் துறையைக் கையாளுகிறார்கள் எனில அஃது மிகையன்று. வெறுங்காதலுக்கும் பயனற்ற அசைபோடும் நிகழ்ச்சிகளுககும் முக்கியத்துவம் தரும் காலம் மலையாள எழுத்துலகைப் பொறுததவரை ஓரளவு மலையேறிவிட்ட தெனலாம்.

சில குறிப்புகளைக்கொண்டே விரிந்த சிந்தனைப் பரப்பைக் காட்டும கருவியாகப் சிறுகதையை லாவக மாகக் கையாள்கிறார் தகழி. குட்ட நாட்டில் பெருக் கெடுத்த வெள்ளததில்போது தண்ணீரில் தவித்த நாயொன்று கூரையொன்றின் மீது ஏறித் தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்ட காட்சியைச் சிததரிப்பதன் மூலம் வெள்ளக் கொடுமையையே அப்பட்டமாகப் புலப்படுத்தி விடுகிறார். அவரது சிறு கதைகளில் பல படிக்கும் வாசகர் களிடையே வாதப்பிரதிவாதங்களைக் கிளப்பும் அளவுக்கு மனவுணர்வுகள் எனும் கசப்பான உண்மைகளை வெளிப் படுத்தும் திரையாக அமைந்துள்ளன.

லலிதாம்பிகா அந்தர்ஜனம் போன்ற பெண் எழுத் தாளர்கள் வரதட்சிணைக் கொடுமைகளையும் சமூக அநீதிகளையும் பயனற்ற சம்பிரதாயப் போக்குகளையும் எதிர்த்து சீர்திருத்த நோக்கில் ''தகர்ந்த தலமுற'' (சிதைந்த தலைமுறை) போன்ற சிறந்த சிறு கதைகளைப் படைத்துள்ளனர். இன்னும் கேசவதேவ், பஷீர், பொன் குன்ன வர்க்கி, காரூர் நீலகண்ட பிள்ளை, உறுப்பு என்ற பனை பெயரில் எழுதும் பி. சி. குட்டிகிருஷ்ணன், வெட் டூர் ராமன நாயர், முட்டதது வர்க்கி, பேராசிரியர் ஜோஸப் முண்டசேரி, கைனிக்கர பத்மநாப பிள்ளை, எம். டி. வாசுதேவன் நாயர், ஆர். எஸ். குருப், ஈ. எம். கோவூர், பொற்றக்காட், நந்தனார், கோவலன், பாரப் புறத்து, கே. சரஸ்வதி அம்மா, கே. டி. முஹம்மத் போன் றோர் உயிர்த் துடிப்புள்ள சிறுகதைகளைப் புனைந்து

மலையாள இலக்கிய உலகைச் செழுமைப்படுத்தி வரு கின்றனர்.

பாரத விடுதலைக்குப் பின்னர் கவிதை, புதினம், சிறு கதைத் துறைகளைப் போன்றே மலையாள நாடக இலக் கியத் துறையும் பெருவளர்சசியடைந்து வருகிறது. நாட்டு நிலைமைகளை, மக்களது அன றாட—வாழ்க்கை பிரச்னை களை பிற துறைகளைவிட நாடகத் துறைகளின் மூலமே நன்கு பிரதிபலிக்க இயலுமாகையால் அதற்கேற்ற வண் ணம் நாடகங்கள் எழுதப்பட்டு மக்களிடம் செல்வாக்குப் பெற்று வருகின்றன.

ஒழுக்கச் சிதைவுக்குக் காரணமான வறுமையும் அடி மைத்தனமும் அகன்று சமத்துவமும் சுதந்திரமும் இணைந்த புததுலகச் சமுதாயத்தை அமைக்கும் வழியாக ஏழை-பணககார ஏற்றத தாழ்வுகளைப் போக்கும் வகை யில் மக்களின சிந்தனை செல்லவே இவ்வுணர்வை வளர்க் கும் வகையில் பல நாடகங்கள் கடந்த இருபதாண்டு களுக்குள் எழுதப்பட்டுள்ளன. நிலச்சுவான்தார்களுக்கும் ஏழைக் குடியானவர்களுக்குமிடையே எழும் போராட் டங்களை மையமாகக் கொண்ட கே. தாமோதரனின் "பாட்ட பாக்கி" (குததகைப் பாக்கி) நாடகமும், இட சேரி கோவிந்தன் நாயரின் "கூடடுக் கிருஷி" (கூட்டுப் பண்ணை) நாடகமும் குறிப்பிடத தக்கவைகளாகும். இடசேரி விவசாயத்தில் கூட்டுறவு உருவாவதோடு பல் வேறு சாதி, மதங்களைச் சார்ந்தவர்களிடையேயும் நிலை யான ஒனறுபட்ட நெருக்கம் ஏற்பட வேணடும் என்பதை வலியுறுத்தும் முறையில் தன் நாடகத் தைப் பின்னியுள்ளார். கேசவ தேவின் "முன்னோட்டு" (முன்னேற்றப் பாதை), தகழியின "தோற்றில்ல" (தோற்க வில்லை), பொனகுன்னம் வர்க்கியின் 'ஜேதாக்கள்' (வென்றவர்கள்), தோப்பில் பாஸியின் "நீங்களென்னெக் கம்யூனிஸ்டாக்கி" (நீங்கள் என்னைக் கம்யூனிஸ்டாக்

கினீர்கள்), ''முடியனாய புத்ரன்'' (நாசகாலி மகன்) போன்ற அரசியல், சமூக நாடகங்கள் படைக்கப்பட்டுள ளன. மலையாள நாடகத துறையில் காணும் மற்றொரு சிறப்பம்சம் நடிப்பதறகென எழுதப்படும நாடகங்கள படிக்கத் தகுந்தவைகளாகவும் அமைந்திருபபதாகும்.

இதே போக்கில் இசை நாடகங்களும் சமீப காலமாக மலையாள நாடக உலகில் செல்வாக்குப் பெற்று வளர்ந்து வருகினறன சமூகப் பிரச்சினைகளைப் பற்றி எழுந்துளள இசை நாடகங்களில் தோப்பில் பாஸியின் நாடகங்களும செறுகாட் எழுதியுள்ள ''நம்மளொந்து'' (நாமொன்று) என்ற நாடகமும் கே.டி முஹம்மதின ''இது பூமியாணு'' (இது பூமியாக்கும்) போனறவைகள் குறிப்பிடத்தக்கவை யாகும்.

இன்று மேடையைவிட மலையாள நாடக இலக்கியத் துறைக்கு உரமாக ஆக்கமூட்டி வருபவை ஓரங்க, வானொலி நாடகங்களாகும். ஓரங்க நாடகங்களுள் ஆர்.எஸ். குறுப்பின் ''ஆருடெ ஜெயம்'' (யார் வெற்றி), காரூரின் ''அப்பூப்பன்'' (பாட்டன்) மற்றும் கேசவ தேவ், டி.என். கோபிநாதன் நாயர் ஆகியோரின் படைப்புக்கள் சிறந்தவைகளாக விளங்குகின்றன.

சுதந்திரம் பெற்ற பினனர் கடந்த இருபதாண்டு களுக்கு மேலாக மலையாள இலக்கிய உலகம் புதுப்பாதை வகுத்து வளரத் தொடங்கியவுடன் அதன் வளர்ச்சிக்கு விறுவிறுப்பூட்டும் வகையில் மலையாள இலக்கியத் திற னாய்வுத் துறையும் புதிய நோக்கில் படைப்பிலக்கியங் களின் ஆக்கத்திற்குதவும் தக்க உரைகல்லாக மாறி வரு கிறது. ஜோஸப் முண்டசேரி இத்துறையில் குறிப்பிடத் தக்க திறனாய்வாளர் ஆவர். முற்போக்கு இலக்கிய வளர்ச்சிக்கு ஊக்கமூட்டும் முறையில் இவர் செய்த திற னாய்வுகளைக் கொண்ட ''மாற்றொலி'' (எதிரொலி),

''மான தண்டம்'' (அளவுகோல்), ''வாயனசாலையில்'' (வாசக சாலையில்) போன்ற தொகுப்பு நூல்கள் குறிப்பிடத் தக்கவைகளாகும். குட்டிக் கிருஷ்ண மாராரும் திறனாய்வுத்துறை வளர்ச்சிக்கு குறிப்பிடத்தக்க அளவுக்குப் பெரும் பணியாற்றி வருகிறார் மற்றும் எஸ்.வி. கிருஷ்ண வாரியார் கே சுரேந்திரன் கே. என். எழுத்தச்சன் பி.ஏ வாரியார் ஏ டி.ஹரிசர்மா போன்றோர் தொடர்ந்து இத்துறையின் வளர்ச்சிக்குப் பெருமளவில் உழைத்து வருகின்றனர்.

மொழிபெயர்ப்பு நூல்கள் கடந்த இருபதாண்டுகளில் குறிப்பிடத்தக்க அளவுக்கும் பெருந்தொகையாக வெளிவந்து அறிவுப் பரிமாற்றத்துக்குப் பெருந்துணை புரிந்துள்ளது. அதே போன்று விஞ்ஞான நூல்களும், சிறுவர் இலக்கியங்களும் கணிசமான அளவில் வெளிவந்துள்ளன விடுதலைக்குப் பின்னர் பெருக்கமடைந்த பத்திரிகைத் துறை இவ்விலக்கியத் துறைகள் அனைத்திற்குமே பேராதரவு அளித்து வருவதால் புதிய புதிய உத்திகளைக் கையாண்டு புதிய போக்கில் பிற்பகுதி எழுததாளர்களின் கவனத்தைத் தன்பால் ஈர்க்கும் பல்வேறு இலக்கிய அமைப்புகளும் ஏடுகளும் எலலாவற்றிற்கும் மேலாக எழுததாளர்களாலே இயக்கப்படும் ஆசியாவின் மிகப் பெரிய நூல் வெளியீட்டு நிறுவனமான 'சாஹித்திய ப்ரவர்த்தக சஹகரண சங்கம்' என்ற அமைப்பும் பேருதவியாக அமைந்து வலுவூட்டி வருகின்றன.

# டாக்டர் மாஸ்தி வெங்கடேச ஐயங்கார்

கன்னட இலக்கிய உலகின் இணையற்ற ஆஸ்தியாக விளங்கும் டாக்டர் மாஸ்தி வேங்கடேச ஐயங்கார் இன்றைய கன்னட சிறுகதைத துறையின் தந்தையாகப் போற்றப்படுகின்றார். மாஸ்தியின முன்னோர்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதை 'மாஸ்தி வேங்கடேச ஐயங்கார்' என்ற பெயரைக் கொண்டே ஊகிததறிந்து கொள்ளலாம்.

கன்னடப் புத்திலக்கிய மறுமலர்ச்சியுலகின் முன்னோடிகளில் மிக முக்கியமானவராகக் கருதப்படும் மாஸ்தி வேங்கடேச ஐயங்கார் 'சீனிவாசா' எனற புனைப் பெயராலேயே கன்னட மக்களிடையே பெரும் புகழ் பெற்றுள்ளார்.

இவர் கவிதை, புதினம், நாடகம், திறனாய்வுக் கட்டுரைகள் முதலியவற்றை எழுதியிருப்பினும் அவரது சிறு கதைகளே அவரது பெரும் புகழுக்குக் காரணமாக அமைந்துள்ளன.

கன்னட இலக்கிய உலகில் சிறுகதைத் துறை காலூன்றிய காலத்தில் அத்துறையைச் செழிப்பாக வளர்த்தவர்களில் கேரூர் வாசுதேவாச்சார், பஞ்சே மங்கேஷ் ராவ் போன்றவர்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம. இவர்களின் அடிச்சுவட்டிலேயே சிறுகதைப் படைப்புகளை உருவாக்க முனைந்த மாஸ்தி விரைவிலேயே புதிய புதிய உத்திகளைக் கையாண்டு சிறுகதைத் துறையை சக்தி மிக்க இலக்கியக் கலையாக வளர்த்து விட்டார், கன்னட மக்களின் பண்பாட்டையும் வாழ்க்கையின் ஒவ்வொரு

அசைவுகளையும் கூட ஆடியிற் காணும் உருவம் போன்று சுவையாகப் படம் பிடித்துக் காட்டுவது இவருக்கு நன்கு கைவரப்பெற்ற இலக்கியத் திறமையாகும் இலக்கிய மெரு கோடு விளங்கும் இவரது சிறுகதைகள் ஒவ்வொன்றுமே ஒரு சிறிய காவியம என்று கூறலாம்.

அரை நூற்றாண்டுக்கு முன்பு இவரால் எழுதப்பட்ட 'ரங்கன மதுவே' (ரங்கனின் திருமணம்) என்ற சிறு கதையே இவரது முதல் படைப்பாகும் அன்றிலிருந்து இன்றுவரை இவர் உருவாக்கிய நூற்றுக்கணக்கான சிறு கதைப் படைப்புகள் பதின்மூன்று தொகுதிகளாக வெளி வந்துள்ளன உணர்ச்சியை, சூழ்நிலையை, மனநிலையை குணசித்திர பாவத்தை, வாழ்வின் உயிரோட்டமான உண்மைகளை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்ட இச்சிறு கதைகளில் 'ஹேமகூட திந்த ஹிந்திருகித மேலே (ஹேமகூடததிலிருந்து வந்த பினனர்), 'கௌதமி கேளி கத' (கௌதமி சொனன கதை) 'மொசரின மங்கம்மா' (தயிர்க்காரி மங்கம்மா) முதலியன அமரத்துவப் படைப் புக்களாகும். மொசரின மங்கம்மா' போனற நாட்டுப்புற மக்களின் வாழ்கையை—உணர்ச்சிகளைத் தோலுரித்துக் காட்டும் மாஸ்தி 'சரிபுத்திரரின் அந்திம காலம்' போன்ற தத்துவார்த்தக் கதைகளையும் 'மசுமதி' போன்ற தேச பக்தக் கதைகளையும் 'நிஜகல் ராணி' போன்ற வரலாற் றுப் பின்னணிகொண்ட கதைகளையும் படைத்துள்ளார்.

ஆழ்ந்த உண்மைகளை யெலலாம் அனாயாசமாக சிந்தனைத் தெளிவோடு புலப்படுத்தும் இவரது சிறுகதை களில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த மூதறிஞர் ராஜாஜி மாஸ்தியின சிறுகதைகளில் சிலவற்றைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். மாஸ்தியே தமது சிறு கதைகளில் பல வற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட டுள்ளார்.

சிறுகதைத் துறையைப் போன்றே கவிதை இலக்கியத் துறையிலும் நிறைபுகழ் எய்திடவர் மாஸ்தி. தூய கன்ன டச் சொற்களைக் கையாண்டு கவிதை புனைவதில் தனி ஆர்வமும் ஆற்றலும வாய்க்கப் பெறறவர். உள்ளதது உணர்ச்சிகளை உணர்வோவியமாகத திட்ட எளிய சொற்களையே பெரிதும கையாணடு கவிதை இயற்று கிறார். மொழியும் நடையும் மிக எளிதாக இருப்பினும் கவிதையின் பருப்பொருள்கள் நுட்பமும் ஆழமும் உடை யனவாக அமைந்துள்ளன.

இவ்வுணமை உணராத ஒரு சிலர் இவரது கவிதை களை 'கவிதைகள்' எனப் பெயரிட்டு அழைக்க விரும பாது அவைகளை 'வசன நடைக் கவிதைகள்' என்றே புதுப் பெயரிட்டு அழைககின்றனர்.

மாஸ்தியின கவிதைகளில் 'அருணா' 'பினனாஹர' முதலியன தலைசிறந்த படைப்புக்களாகும். இவரது கவிதைகளில பெருமபாலானவை பக்தியுணர்வை அடித் தளமாகக் கொணடவைகளாகும். எளிய நனகு அறிமுக மான சாதாரண சொற்களையே சகதிமிக்க ஆயுதங்களா கத தம் கவிதைகளில பயனபடுதது உயர்ந்த தத்துவங் களையெலலாம் உணர்தது விடுகின்றார்.

கவிதை வடிவிலும் சுவை குன்றாது கதை கூறுவதில் இவர் இணையற்றவராக விளங்குகிறார் 'கௌடர மலலி' (கௌடர் குடுமபதது மல்லி) 'கனகதாசரு' (கனகதாசர்) முதலியன அவற்றுள தலைசிறந்தனவாகும்.

மாஸ்தியின் நாடகக் காப்பியங்களுள் குறிப்பிடத் தக்கச் சிறப்புடையது 'யசோதரா' எனும் நாடகக் காப் பியமாகும் புததரின் அன்புத் துணைவியரான யசோதரா தேவி புத்தரின் பிரிவால் ஏற்பட்ட மனத் துன்பத்தை அடக்கிக கொண்டு அவரது வருகைக்காகப் பொறுமை

யுடன் காததிருக்கும் தகைமையினை உணர்ச்சி பொங்க விளக்குகிறது இந்நூல் மாஸ்தியின கவிதா உணர்வுக்கும் திறமைகரும் தக்க உரைகலலாக அமைந்துள்ளது இக் காவியப ஷேக்ஸ்பியர் நாடகங்கள் சிலவறறையும இவர் கன்னடத்தில் மொழி பெர்த்துள்ளார்.

இன்றைய கனனட இலக்கிய உலகின் வரலாற்றுப் புதினப படைப்பாசிரியர்களில் முதலிடம் வகிப்பவர் மாஸ்தி தமிழ் நாட்டின வரலாற்றுப் புதினப் பேராசிரியர் 'கல்கி'யைப் போல கனனட உலகில இததுறையில் பெரும் புகழபெற்றவர் இவர் தமது வரலாற்றுப் புதினப் படைப்புகளில் அக்காலத்திய அரணமனைகள சோலைகள அந்தப்புற வாழ்க்கை அரசபோகச் சிறப்பு உப்பரிகை உலலாசம் ஆகியவற்றைச் சித்தரிப்பதிலேயே பெருங் கவனம் செலுததாது அககாலப் பொது மக்களின் வாழ்க் கையை நுணுகி ஆராய்ந்து விளக்குவதிலேயே அதிக ஈடு பாடுள்ளவராகத் தகழ்கிறார் 'செனன பசவ நாயகா'வும் 'சிக்க வீர ராஜேந்திர'வும் இவரது வரலாறறுப் புதின எழுத்தாற்றலுக்குக் கட்டியங்கூறும் படைப்பக்களாகும்.

பெண்களின் மென்மையான உணர்வுகளை திறமை யோடு வெளிப்படுததும இவர் பெண்ணுலகின் மீது பரிவு மிகக் கொண்டவராவார் அதேபோனற பக்திமான்களி டம் இவர் கொண்டிருக்கும் மதிப்பும் ஈடுபாடும் குறைத்து மதிப்பிடக்கூடியதலல இவரது அமரத்துவப் படைப்பு களுள் ஒன்றான 'சுப்பண்ணா'வில் வரும் சுப்பண்ணா லலிதாம்மா போன்ற பாத்திரங்களை இவர் உருவாக்கி யிருக்கும் பாங்கே மேற்கண்ட இவரது திறமைக்கு ஏற்ற எடுத்துக்காடடு குடும்பச் சூழலும் மனப்போராட்டங் களும் பின்னிப் பிணையப்பட்டிருக்கும் இப்புதினத்தைப் படிப்போர் 'பெண் குலத்தின் குல விளக்கு லலிதாம்மா' என வாய்விட்டுக் கூறுவர் என்பது திண்ணம்.

# பேந்த்ரே

கன்னட இலக்கிய உலகில் இன்று ஒளிவீசித் திகழும் புதியதோர் இலக்கியப் பரம்பரையை வீறுடன் உருவாக்கி உலவவிட்ட பெருமையில் பெரும் பகுதி திரு. பேந்த்ரே அவர்களைச்சாரும். 'அம்பிகாதனய தத்தா' என்ற புனை பெயரிலே கனனட இலக்கிய உலகில் புகழ் பெற்ற திரு. பேந்த்ரேயின் முழுப்பெயர் தத்தாத்ரேய ராமச்சந்த்ர பேந்த்ரே என்பதாகும்.

இன்றைய மறுமலர்ச்சிக் கவிஞர்களாக-திறம்பெற்ற எழுத்தாளர்களாக—ஆற்றல் மிக்கத் திறனாய்வாளர் களாக மதிக்கப் பெறும் டாக்டர் கோகக் (வினாயகா) முகளி, மதுர சென்னா, யெழுப்பி ஆனந்த கந்தா போன்றவர்கள் உருவாக பெருந்துணையாய் விளங்கிய வர் பேந்த்ரே.

தேசிய உணர்ச்சி கொப்பளிக்கும் தம் பாக்களால மக்களின் உள்ளத்தே உறங்கிக் கிடந்த தேசிய உணர்ச்சி யைத் தட்டி விடுதலைப்போரில எழுச்சியுடன் ஈடுபட இவரது படைப்புக்கள் பெரிதும் உதவின எனபது வெள்ளிடைமலை.

புத்துலகப் போக்கில் கன்னட இலக்கிய உலகம் விரைநது நடைபோடத் துவங்கிய காலத்தில் அதற்கு வேகமும் விறுவிறுப்பும் ஊட்டியவர்களாக இருவரைக் குறிப்பிடலாம தென கர்நாடகப் பகுதியைச் சேர்ந்த திரு. பி. எம். ஸ்ரீ கணடையாவும் வட கர்நாடகப் பகுதி யைச் சேர்ந்த திரு. பேநத்ரேயுமே அவர்கள், இளம் தலை முறையைச் சேர்ந்த மறுமலர்ச்சிப் படைப்பாளர்களை

யெல்லாம் ஒன்று சேர்த்து, அவர்கள் திறமையைக் கட்டுக் கோப்பாக வளர்ப்பதன் மூலம கன்னட இலக்கியத் துறை யின் வளர்ச்சியை விரைவுபடுத்தலாம் என எண்ணிய திரு. பேத்ந்ரே 'கௌயர குபபு' (நண்பர் குழு என்ற எழுத்தா ளர் குழாமை உருவாக்கினார், இதன் மூலம் ஒருமுகப் படுத்தப்பட்ட எழுத்தாளர்கள் பலரும் ஆக்க வழியில் தம் இலக்கியப் பணியைக் கட்டுக்கோப்பாக்க முடிந்தது. கனனட இலக்கிய வரலாற்றில் இந்நிகழ்ச்சி குறிப்பிடத் தக்க ஒரு சிறப்புச் செயலாகவே கருதப்படுகிறது.

தார்வாரிலுள்ள மகாராஷ்டிர அந்தணர் குடும்ப மொன்றில் 1896ஆம் ஆணடில் பிறந்த பேந்த்ரே கன்னட மொழிப் பேராசிரியராகப் பல்லாண்டு காலம் பணி யாற்றி ஓய்வு பெற்ற நிலையில் அமைதியாக இலக்கியத தொண்டாற்றத தவறவில்லை.

இளமை முதலே இலக்கியத் துறையில் புத்தார்வமும் புதுமை யுணர்ச்சியும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவராக விளங்கும் இவர் தலை சிறந்த கவிஞர், கட்டுரையாளர் நாடகாசிரியர், படைப்பளார் எனற பலதுறைத் தகுதியும் மிக்கவராக விளங்குபவர். இலக்கியத் துறைகள் அனைததி லும் இவர் தம கைவணணத்தைக் காடடியிருப்பது போன்றே இவர் தம் கவிதைகளில் கருவாக அமைத்துப் பாடாத பொருளேதும் இலலை எனறு கூறுமளவுக்கு எல்லா விஷயங்களைப் பற்றியும் கவிதைகளை எழுதிக் குவித்துள்ளார்.

இலைமறை காயாக இலக்கியப் பணியாற்றி வந்த இவரைக் கன்னட மக்கள் முழுமையாக அறிந்து கொள்ள பெருந்துணையாயமைநத நூல் 'ஹக்கி ஹாருத்திடே' (பறவை பறக்கிறது) என்ற கவிதை நூலாகும் 1930ஆம் பெல்காமில் நடைபெறற 'கவி சம்மேளன' மொன்றில்

அரங்கேறிய இந்நூல் இலக்கிய உலகில் பெரியதொரு சலசலப்பையே உண்டாக்கிவிட்ட தெனலாம்.

இவரது தொடக்க காலக்கவிதைகளின் கருப் பொருளாக அமைந்தவை இயற்கையின் அழகுக் காட்சிகள், காதல் உணர்வு, அன்பு, நாட்டுப்பற்று, கலை' தத்துவம் போன்றவைகளேயாகும். நாளடைவில் வாழ்க்கைச் சிக்கல்களைப் பற்றியும் அச்சிக்கலகளுக்குக் காரண மான மனவுணர்களைப் பற்றியும் கவிதைகள் வடித்தார். வாழ்க்கைப் போராட்டங்களும் சமுதாயப் பிற்போக்குக் கூறுகளும் இவரது கவிதைப் பொருள்களாக அமைந்துள்ளன.

இவரது கவிதைகள் அனைத்திலும் காணப்படும் ஒரு தனிச் சிறப்பு எளிய கவர்ச்சியான நடையாகும். நாடோடிப் பாடல்களில் காணும் தன்மையை இவரது பாடல்கள் பெற்றிருப்பதால் மக்கள் அனைவருமே எளிதாகக் கவிதைகளின்பால் கவரப்பட்டதோடு அவற்றை சுலபமாக மனனம செய்து கொளளவும் இயன்றது. இவ்வாறு இவர் கிராமியக் கவிதையின் மறுமலர்ச்சிக்குப் பெரிதும் உழைத்துள்ளார் எனக் கூறினும் பொருந்தும.

பேந்த்ரேயின் மற்றொரு தனிச்சிறப்பு தாம் எடுத்துக் கொண்ட பொருளுக்கு இவர் தரும் உருவச் சிறப்பாகும. இவரது புகழ்பெறற நூலான 'ஹத்தி ஹாருத்திடே' (பறவை பறக்கிறது) எனற கவிதையில் நுண்பொருளான காலத்தையே பருப்பொருளான பறவையாக உருவகித்துப் பாடியுள்ளார் இதன்மூலம் அவரது கவிதை உயிரூட்டம் உடையதாக ஆகிவிடுகிறது. இவரது 'பௌகு' (வைகறை) 'பௌதிங்கள் நோட' (நிலவொளியைப் பார்க்க) 'ஷ்ராவண' (ஷ்ராவண மாதம்) 'பாதர கித்தி' [வண்ணாத்திப் பூச்சி) போன்ற கவிதைகளில இயற்கைச் சிறப்பை இனிது விளக்கியுள்ளார்.

இவரது காதல் கவிதைகள் வெறும் உணர்ச்சியை அடித்தளமாகக் கொண்டமையாது கருத்தாழம் மிக்கவை களாகவும் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்க தாகும் 'புட்ட விதவே' (இளம் கைம்பெண்) 'ஹெணத ஹிந்தே' (பிணத்திற்குப் பின்னால்) முதலிய கவிதைப் படைப்புக்களின் வாயிலாக சமுதாய பிற்போக்குத்தனங் களையும பெண்களின துயர உணர்ச்சிகளையும் படம் பிடித்துக் காட்டுகிறார். 'துத்தின சீல' (சோற்றுப் பை) என்ற கவிதையின் மூலம் வறுமையின் கோரப் பிடியில் சிக்கிச் சிதையும் வறுமையை எதிர்த்துச் சங்கநாதம் முழங்குகிறார் 'குருடு காஞ்சனா' போன்ற பாடல்களின் மூலம் சமுதாயத்தைச் செல்லரித்து வேற்றுமையுணர்ச்சி களுக்கு வித்தாக விளங்கும் ஏழை பணக்கார வேறுபாடு களை எதிர்த்துப் புரட்சிக் கீதம் முழங்குகிறார். நிலப் பிரபுத்துவ ஆதிக்கப் போக்கையும் ஏழைகளின் வியர்வை யில இன்பங் காணும செல்வர்களின் கொடுமைகளையும் விளக்கியுள்ளதன மூலம் இவரது பொதுவுடைமை உணர் வைத தெளிவாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

இவரது சிறு காவியமான 'சகி கீதா' (காதலியின் கவிதை) நடைச் சிறப்பும் கவர்ச்சியும் கொண்ட புகழ் பெற்ற நூலாகும் ஒரு வகையில் இந்நூல் அவரது வாழ் வின் எதிரொலி என்று கூடக் கூறலாம் மண வாழ்வி லிருந்து அவர் தனது வாழ்க்கையில் அடைந்த இன்னல் களையும் எதிர் நீச்சல்களையும் இதமாக எடுத்துச் சொல் லும் வாழ்க்கை நூலாகும்.

கன்னட நாட்டில் தேசிய உணர்ச்சி பொங்கியெழ உறுதுணை புரிந்த கவிதைகளில் இவரது படைப்புகளுக்கு கணிசமான பங்குண்டு என்பது மறக்கவோ மறுக்கவோ முடியாததாகும்,

நாட்டு விடுதலைக்காக மட்டுமின்றி சமூக நீதிக்காக

வும் குரலெழுப்ப இவர் தவறவில்லை 'மூலத்துமூறு கோடி' (முப்பத்து மூன்று கோடி) என்ற கவிதை சமூக நீதிக்கென ஒலிக்கும் உயிர்ச் சித்திரமாக உள்ளது 'கனசி நௌகொந்து கனசு' (கனவில் கனவு) நூல் அங்கதக் குறிப்புத் திறமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்,

இவரது படைப்புக்களில் காணும் மற்றொரு சிறப்பு கன்னட பகுதியின பாரத நாட்டின் பழம் பெருமைகளை பெருமிதத்தோடு விதந்தோதுவதாகும் மறைந்த பெரி யார்கள் தத்துவஞானிகள் அரசியல் மேதைகள் சிந்தனை யாளர்களில் கருத்துக்களை அழகுற உணர்த்தும் கருவி களாக இவரது கவிதைகள் அமைந்துள்ளன. 'தும்பி' 'சச்சிதானந்தா' முதலிய கவிதைகள் இதற்கு உதாரண மாகும். அரவிந்தரின சிந்தனைகளை இவரது பாடல்கள் பல எதிரொலிக்கின்றன. இவரது புகழ்பெற்ற கவிதைத் தொகுப்பான 'அருளு மருளு' சாகித்திய அக்காதெமிப் பரிசைப் பெற்றுள்ளது.

பேந்த்ரே கவிஞர் மட்டுமன்று; நாடாகாசிரியரும் ஆவார். அவர் படைத்த நாடகங்கள் ஒரு சிலவே என் றாலும் அவை குறிப்பிடத்தக்கவையாகும் 'யுத்தாரா' (முன்னேற்றம்) ஹொச சம்சாரா (புதிய குடும்பம்) 'நகெய ஹொகெ' (சிரிப்பின் புகை) போன்ற நாடகங்கள் மக்கள் மனதைக் கவர்ந்தனவாகும் இவரது ஓரங்க நாடகங்களின் தொகுப்பான 'ஹொச சம்சாரா' மகாராஷ்டிர மாநில அரசின் பரிசைப் பெற்றுள்ளது.

இவர் சிறந்த கட்டுரையாசிரியராகவும் கருதப்படு கிறார் நகைச்சுவையாக எழுதுவதில் திறம் பெற்ற இவர் திறனாய்வுத துறையிலும் பெரும் பணியாற்றியுள்ளார்.

கனனட மொழியன்னியில் ஆங்கிலம், மராத்தி, சமஸ் கிருதம் ஆகிய மொழிகளிலும் போதிய அளவுக்குப் புலமை படைத்துள்ள இவர் இளைஞர்களை ஊக்குவிப்பதில தனி

யாத ஆர்வமும் அக்கரையும் உள்ளவர் தொடக்க காலந் தொட்டு இவரால் தூண்டி வளர்க்கப்பட்ட இளம் தலை முறையினர் இன்று கன்னட இலக்கிய உலகில் பீடுநடை போட்டு பெருமைப்படத்தக்க அளவில் பணியாற்றி வரு வதைக் காண முடிகிறது,

# சிவராம காரந்த்

கல்விக்கெனப் பல்கலைக் கழக வாசற்படியைக்கூட மிதிக்காத போதிலும் 'பல்கலைச் செல்வர்' எனப் பலராலும் பாராட்டப்படும் கன்னட எழுத்தாளர் சிவராம காரந்த் வாழ்க்கையில் எத்தனை படிகள் உண்டோ அத்தனை படிகளிலும் வாழ்ந்த அனுபவ நிறைகுடமாக இன்று விளங்கி வருபவர். அவரது படைப்புக்களில் நடமாடும் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் அவரது பரந்த அனுபவத்தின் சாயல்களாகவே விளங்குகின்றன.

இன்றைய கன்னட இலக்கியத் துறையில் கவிதையை தவிர இவரது கைவண்ணம் பெறாத இலக்கியத் துறைகளே இல்லை எனலாம். ஆயினும் தலைசிறந்த நாவலாசிரி என்ற முறையிலேயே இவர் இலக்கிய உலகில் சிறப்பான முதலிடம் பெறுகிறார்.

சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் புதினங்களை எழுதத் தொடங்கிய இவர் இதுவரை இருபத்தைந்துக்கு மேற்பட்ட புதினங்களைப் படைத்தளித்துள்ளார் அவரது ஆரம்பகால புதினமான 'கன்யா பலி'யிலிருந்து அணமையில் வெளிவந்த 'ஆழ-நிராழ' (ஆழமும் ஆழமற்ற தன்மையும்) வரை அவருடைய புதினங்கள் அனைத்தும் அவரது எழுத்தாற்றலும அனுபவச் சிறப்பும் ஒருங்கே கொண்டு திகழ்வனவாகும்.

காரந்தின் புதினங்களிலே பெருஞ் சிறப்புக்குரிய தலைசிறந்த புதினப் படைப்பாக விளங்குவது 'மரளி மண்ணிகே' (திரும்பவும் மணணிற்கு) என்பதேயாகும். மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும்

இடைப்பட்ட நிலப் பகுதியில் வாழும் தென்கரைாப் பகுதி மக்களின் வாழ்க்கையையும் பணபாட்டை யும கரு வாகச் கொண்டுள்ள இப்புதினத்தின் கதை ஒரு தலை முறையின் கதையாக அமையாது மூன்று தலைமுறை களைப் பற்றிய கதையாக அமைநதுள்ளது 1850இல் தொடங்கும் இக்கதை 1940இல் முடிகிறது தான் பிறநத மண்ணின் வாடையை—மக்களின் வறுமை வாழ்வை— அப்படியே படம் பிடிததுக் காட்டுகிறார் காரந்த மூன்று தலைமுறைகளாக அப்பகுதி மக்களின் வாழ்வில் எழுந்த எணணறற வாழ்க்கைப் பிரச்சினைகளையும் அப் பிரச்னைகளை அவர்கள் அணுகிய முறைகளையும் அற புதத் திறமையோடு விளக்கியுரைக்கிறார் ஆசிரியர் காரந்த்.

பதினைந்தாண்டுகட்கு முன்னரே இந்நூலின் ஆங்கில பெயர்ப்பு வெளிவந்துள்ளது சாகித்திய அகாதெமியின முயற்சியால் தமிழ் உட்பட பல்வேறு இந்திய மொழிகளி லும் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள் ளது.

அவரது படைப்பாற்றலுக்குச் சான்று கூறும் மற் றொரு சிறந்த புதினம் 'பெட்டத ஜீவா' (மலை வாழ்க் கை) எனபதாகும்

மலைமீது வாழ்ந்துவரும் ஒரு தனி மனிதனின் வாழ்க் கையை புதின வடிவில் சித்தரிக்கிறது இநநூல் ஒரு தனி மனிதனின் வாழக்கையையே ஒரு புதினப் படைப்பாக உருவாக்கிய சிறப்பு போற்றிப் பாராட்டுதற்குரிய ஒன் றாகும்.

சோம என்ற தாழ்த்தப்பட்டவன ஒருவனின் வாழ்க் கையை அவன் ஆசைகளை அச்சங்கள் நம்பிக்கைகள் ஆகிய வற்றை விளக்கும 'சோமன துடி' (சோமனின் துடி) (துடி

என்பது ஓர் இசைக்கருவி) என்ற சிறு நாவல் இருபத்தைந் தாண்டுகட்கு முன்பு எழுதப்பட்டதாயினும் இன்றும் சோமனின் அவலம் நிறைந்த சோக வாழ்வு படிபபோர் உள்ளத்தை நெக்குருகச் செயவதாகவே உள்ளது.

பழங்குடி மக்களின் வாழ்வை உள்ளது உள்ளவாறே சுவை குன்றாது படம் பிடித்துக் காட்டுவதில் கைதேர்ந் தவர் காரந்த் அவர் பழங்குடியினரில் ஒருவராக சில கால மேனும் வாழ்ந்து அவர்கள் வாழ்வின் அடிப்படைத் தன் மைகளை நன்கு அறிந்துணர்ந்து அதன் பின்னரே அவர் களது வாழ்வுக்குக் கறபனை மெருகேற்றி கதை வடிவில் வடித்துக் கொடுக்கிறார்.

இவ்வகையில் பெருஞ்சிறப்புக்குரிய புதினமாக இன்று விளங்குவது 'குடியர கூசு, (குடியரின் குழந்தை) என்ப தாகும் மேற்குத் தொடர்ச்சி மலையில் வாழும் புராதன குடியர் இன மக்களின் வாழ்க்கையை விளக்கும் காவிய மாகவே விளங்குகிறது இப்புதினம்.

காரந்தின் புதினங்கள் அனைத்துமே கர்நாடக மக் களின் வாழ்க்கையையும் பண்பாட்டையும் அம்மண்ணிற் கேயுரிய இயல்பான தன்மையையும் பிரதிபலிப்பனவாக அமைந்துள்ள போதிலும் அவை இந்திய வாழ்க்கையை- பாரதப் பண்பாட்டின் சாயலைப் பிரதிபலிக்காமல் இல்லை.

உள்ளதை உள்ளவாறே சித்தரிப்பது காரந்தின் தனி இயல்பு. வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தையும் காணும் குறை நிறைகளையும் நன்கு ஆய்ந்தறிந்து அவற்றை தமக்கே யுரிய முறையில கதைப்போக்கில் சுவைபட விவரித்துக் கூறுகிறார். தமது சொந்த விருப்பு வெறுப்புக் களை தாம் படைக்கும் கதாபாத்திரங்கள் மூலம் சுமத்தி

நடமாடவிடும் போக்கு இவரிடம் எப்போதுமே காணப் படாத ஒரு அம்சமாகும். சமுதாய கோணல்நிலைகளை நாசுக்காகத் தாக்குவதில் இவர் கைதேர்ந்தவர். 'ஹள்ளிய ஹத்து சமஸ்தரு' (கிராமத்தில் பத்துப் பெரிய மனிதர்கள்) 'கர்பகுடி' (மூலஸ்தானம்) முதலியன இதற்குத் தக்க சானறாக அமையும் அங்கதப் படைப்புகளாகும்.

புதினங்களையன்னியில் சிறுகதைகளையும் 'கீசா கௌதமி' போன்ற இசை நாடகங்களையும் 'ஆபூவி நிண்ட பாராமக்கெ' (அபூவிலிருந்து பாராம வரை) 'ஆபூர்வபஸ்கிம்' (கிழக்கல்லாத மேறகு) முதலிய பயண நூலகளையும் எழுதியுள்ளார். அவரது பரந்த அனுபவங் களை அடித்தளமாகக் கொண்ட 'பித்து மனதின பதது முகங்கள்' என்ற அவரது சுய வாழ்க்கை வரலாற்று நூல் அவரை நன்கு அறிந்துணர விரும்புவோர்க்கு உதவும் உரை கல்லாக விளங்குகிறது.

நாடகம், நடனம், ஓவியம், திரைப்படம் முதலிய கலைத் துறைகள் பலவற்றிலும் ஈடுபட்டு சோதனைகள் பல செய்துபார்த்த காரந்த் சிறுவர் இலக்கியத் துறைக்கு ஆற்றியுள்ள தொண்டு கொஞ்ச நஞ்சமல்ல.

தலைசிறந்த புதின ஆசிரியர் என்பது போன்றே புகழ் பெற்ற சிறுவர் இலக்கிய எழுத்தாளராகவும் இவர் விளங்குகிறார். பல அறிஞர்கள் இணைந்து செயல்படும் அமைப்புகளால் கூட சாதிக்க முடியாத பல சாதனை களை வியப்பூட்டும் வகையில் நிகழ்த்தி வெற்றி கண்டிருக் கிறார். 'பால பிரபஞ்ச' (குழந்தைகளுக்கான கலைக் களஞ்சியம்—மூன்று தொகுதிகள்) ''கன்னட-கன்னட அகராதி' 'விஞ்ஞான பிரபஞ்ச' (பொது மக்களுக்கான விஞ்ஞானக் கலைக்களஞ்சியம்—ஐந்து தொகுதிகள்) அவரது ஆற்றலையும் அயராத உழைப்பையும் உலகுக் குணர்த்தும் அசுர சாதனைகளாகும்.

1902ஆம் ஆண்டில் பிறந்த சிவராம காரந்த் பல்கலைக் கழகப் படிப்புவரை எட்டவில்லை யென்றாலும் அவரது அரிய இலக்கியத் தொண்டைப் பாராட்டி கர்நாடகப் பல்கலைக் கழகமும் மைசூர்ப் பல்கலைக் கழகமும 'ஆனரரி டாக்டர்' பட்டமளித்துப் பெருமைப் படுத்தியுள்ளது 1960ஆம் ஆண்டில் 'யக்ஷகான பயலாடா' (திறந்தவெளி யக்ஷகான நாடகங்கள்) என்ற கர்நாடக நாடோடி நடன-நாடகங்களைப் பற்றிய நூலுக்கு பரிசளித்துப் பெருமைப்படுத்தியுள்ளது. அதே நூலிற்கு ஸ்வீடிஷ் நாடோடி நாட்டியக கழகமும் மைசூர் அரசாங்கமும் பரிசளிதது்ப் பாராட்டியுள்ளன

எழுபது வயதைக் கடந்து நிற்கும் காரந்த் இன்றும் இளைஞரைப் போலவே துடிப்போடு பல புதிய இலக்கிய முயற்சிகளில் ஈடுபட்டு வருகிறார்

நூலாசிரியராகவும் கன்னட நூல் வெளியீட்டாளரா கவும் சுதந்திரமான எழுத்துப் பணியாற்றி வரும் இவர் ஆரம்ப நாட்களில் கன்னட மொழித் திங்களிதழ் ஒன்றின் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

நிறை புகழ் பெற்றிருந்த போதிலும் 'மிகவும் பிடிவாதக்காரர் கர்வம் மிக்கவர்; யாரோடும் ஒத்துப் போகும் இயல்பு இல்லாதவர்' என்ற அவப் பெயரையும் சிலர் சுமத்தவே செய்கின்றனர்.

மக்களைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும இவருக்கு அழுத்தமான கொள்கைகள் உண்டு. அவற்றில் இவருக்குத் திடமான நம்பிக்கையும் உண்டு. எனவே இவர் நம்புவனவற்றை இவர் ஒளிவுமறைவு இன்றி அழுத் தந்திருத்தமாகக் கூறுகிறார். நிறைகண்ட விடத்து வெளிப் படையாக அதனை வானளாவப் புகழ்வதும் இயல்பாக

இருப்பதனால்தானோ என்னவோ இவருக்கு இந்த அவப் பெயர் ஏற்பட்டுள்ளது.

கன்னட மொழி இலக்கியத்தின்—குறிப்பாகப் புதின இலக்கியத்தின் வளர்ச்சிக்கு அளவுகோலாக விளங்கும் சிவராம காரந்தின் புகழ் கன்னட மொழி உள்ளவும் நிலைபெற்றிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# டாக்டர் கே. வி.புட்டப்பா

கன்னட இலக்கியவுலகில் எழுச்சிமிக்கப் புத்திலக்கிய வளர்ச்சிக்கு இடையறா பெரும் பணியாற்றி வருபவர் களுள் குறிப்பிடத்தக்க ஒருவர் டாக்டர் கே வி. புட்டப்பா 'குவெம்பு' (Kuvempu) எனும் புனைபெயரில் அறிவாற்ற வோடு இலக்கியத் தொண்டாற்றி வரும் இவர் கன்னட இலக்கியவுலகில் முதல் சாகித்திய அக்காதெமிப் பரிசு பெற்ற கன்னட எழுத்தாளர் ஆவர். ஸ்ரீ இராமாயண தர்சனம்' எனும் அப்பரிசு நூல் கன்னட இலக்கியத் துறை யில் மின்னிப் பொழியும் தனி உருவாகும்.

சிறந்த இலக்கிய ஶிற்பன்னராக விளங்கும் இவர் தலைசிறந்த கல்வித்துறை நிபுணர்களுள் ஒருவராகவும் இன்று மதிக்கப்படுகின்றார்.

மைசூர் பல்கலைக் கழகத்தில் கன்னட மொழிப் பேராசிரியராகவும் பின்னர் மகாராஜா கல்லூரி முதல் வராகவும் பணியாற்றிய இவர் இறுதியாக மைசூர்ப் பல் கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பதவி வகித்தவர்.

விரல்விட்டு எண்ணத்தக்க சிறந்த கன்னடக் கவிஞர் களுள் ஒருவராய்த் திகழும் டாக்டர் கே வி புட்டப்பா இளமையில் எழுதத் தொடங்கியது ஆங்கிலக் கவிதைகளே யாகும். கன்னடத்தைப் போன்றே ஆங்கிலத்திலும் சமஸ் கிருதத்திலும் வங்காள மொழியிலும் புலமைமிக்க இவர் ஆங்கிலப் பாடல்களின உணர்வுத் தூண்டுதலால் பெரிதும் கவரப்பட்டு 'ஆரம்பக் கவிதைகள்' எனும் தலைப்பில் ஆங்கிலப் பாடல்களை அழகுறப் புனைந்து வந்தார். இவரிடத்து இயல்பாகப் பொங்கி நின்ற கவித்துவ உணர்

வை அறிந்த இவரது ஆங்கில நண்பர் பேராசிரியர் கசின் (Cousin) என்பவர் 'உங்கள் தாய்மொழியாகிய கன்னட மொழியில் கவி புனைந்தால் ஆங்கிலத்தை விட இன்னும் அழகாக உங்களது தனித்துவ உணர்வுகளையும் சிந்தனை யோட்டத்தையும் திறம்பட வெளியிட முடியும்' எனக் கூறி கன்னடத்தில கவிதை புனையத் தூண்டினார். ஆங் கிலப் பேராசிரியரின தூண்டுதல் வீண் போகவில்லை. புட்டப்பாவின ஆரமபக கவிதைகளே முருகியற் சுவையும் கருததாழமும மிக்கவைகளாகப் படிப்போரைப் பெரிதும் மகிழ்வித்துப் பாராட்டுப் பெறறன. வளர்ந்து வந்த இக் கவிதைப் பணி பிற்காலத்தில் இவரைப் பெருங்கவிஞராகக் கன்னட இலக்கியத் துறையில் பீடுநடை போடவும் வழி வகுத்தன.

புட்டப்பா சிறநத கன்னடக் கவிஞராக விளங்கு வதற்கு அவரது நுண்ணிய சிந்தனையோட்டமும் மொழிந் திறமும் மட்டும் காரணமன்று. அவர் பிறந்து வளர்ந்த மண்ணின் சுற்றுப்புறச் சூழலும் ஒரு முக்கியக் காரண மாகும.

கர்நாடகத்தின் இதயமெனக் கூறப்படும் மலைநாட் டில் பிறந்த புட்டப்பா இளமை முதலே இயற்கையின் வயப்பட்டவராக வளர்ந்தார். ஆங்கிலப் பெருங்கவிஞர் வோர்ட்ஸ்வொர்த்தின் கவிததுவ உணர்வுக்கு நிலைக களானக இயற்கை விளங்கியது போன்றே இவரது கவிதா உணர்வுககும் ஆதர்சன சக்தியாக இயற்கை அமைந்து தனி அழகூட்டியது எழில் கொழிக்கும் மலைநாட்டின் இயற்கை வளமும் இருபுறமும்கரை புரண்டோடும் துங்கா நதியின் இசையொலியும் கவின்மிகு காடுகளின கவர்ச்சி யும் விண்ணில் பறக்கும் வண்ணப் பறவைகளின் இன் னொலியும் அவரது கவிதைகளில் எழிலுருக் கொண்டதில் வியப்பில்லை.

இவர் இம்வரை இருபத்தைந்து கவிதை நூல்களுக்கு மேல் எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் மிகச் சிறந்தவைகளாக 'கொழலு' (குழல) 'பட்சி காசி' 'அக்னி ஹம்ச' போன்றவைகளைக் குறிப்பிடலாம். சொல்லாட்சித் திறன் மிக்க இக்கவிதைகளில் ஆழ்ந்த தத்துவச் சிந்தனைகள் மெல்லிய நூலிழைபோல் கவிதையெங்கும் பின்னிப் பிணைந்து செல்வதைக் காணமுடிகிறது. எழுச்சிமிக்க இக்கவிஞர் பழைய போக்கில் நடைபோடத் தொடங்கினாலும் புதுமைகளை இணைத்துக் கொள்ளத் தவறவில்லை டி.எஸ் எலியட் போனற புத்துலகக் கவிஞர்களின் செல்வாக்கையும் இவரது கவிதைகளில் பரக்கக் காணலாம்.

எதுகை மோனை எழில்மிகு வர்ணனை இவைகளில் மட்டும் கருத்தைச் செலுத்தி வலை பிலனும் வலைஞனை போனறு கவிதை புனையும கலைஞன அனறு இவர் காலவோட்டத்திற்கேற்ப புதுப்புதுப் போக்குகளை இணைத்து கவிதைக்கு வலிவும வளப்பும் நலகும பாங்கினை இவரது படைப்புக்களில் காண முடிகிறது துணிந்து பழைய மரபுகளைப் புறக்கணிக்கவும் இவர் தயங்குவதாகத் தெரியவில்லை கவிதை அம்சங்களில் மட்டுமலலாது கதைப் போக்கிலும் இவர் பல புதுமைகளைச் செய்துள்ளார். இவர் இயற்றிய 'ஸ்ரீ இராமாயண தர்சன'த்தில் இராவணன் போன்றவர்களை வழக்கத்துக்கு மாறாகப் போற்றிப் புகழும் புதுவகைப் போக்கினை இதற்கு உதாரணமாகக் கூறலாம், 'குயிலும் ரஷியாவும்' என்ற கவிதையும் கால வோட்டத்தின் வேகத்திற்கேற்ப விரைநது குதிடோடும் இவரது புத்துலகச் சிந்தனைகளுக்குக் கட்டியங் கூறுவதாகும்.

கன்னட மொழியில் மட்டுமல்லாது தம் கவிதைகளில் சிலவற்றை இவர் சமஸ்கிருதத்திலும் மொழி பெயர்த்துள்ளார். சமஸ்கிருதப் புலவர்களை வியப்பிலாழ்த்தும்

வகையில் அவை சிறந்த மொழி பெயர்ப்புகளாக அமைந் துள்ளன. இவரது ஸ்ரீ இராமாயண தர்சனம்' இவரது கவித்துவத் திறமைக்கும் ஆழ்ந்த மொழிப் புலமைக்கும் தத்துவச் சிந்தனைக்கும் அழியா ஓவியமாக நின்று புகழ் கூட்டும அரிய படைப்பாகும.

கவிதைத் துறையோடு இவரது கைவண்ணம் நிற்க வில்லை. புதினம், நாடகம், திறனாய்வு என நீண்டு செல்கிறது பொம்மன் ஹள்ளிய கிந்தர ஜோகி' (பொம் மன ஹள்ளியின் பாம்பாட்டி) என்ற குழந்தை இலக்கி யத்தை எழுதியதன் மூலம் சிறுவர் இலக்கியத் துறைக்கும் தன் எளிய காணிக்கையைச் செலுத்தியுள்ளார் இவர்.

இவரது புதினங்களுள் குறிப்பிடத்தக்கது 'கானூரு சுப்பம்ம ஹெகடிதி' (கானூரின் கிராமத் தலைவி சுப் பம்மா) என்பதாகும். மலைநாட்டு மக்களின் வாழ்க்கைப் போக்குகளையும் நம்பிக்கைகளையும் மரபுகளையும் தெள்ளத் தெளிவாகப் பிரதிபலிக்கிறது இப்புதினம் 'மேலகலல்லி மடுமகளு' என்பது மற்றொரு சிறப்புப் படைப்பாகும்.

நாடக இலக்கியத் துறையின் வளர்ச்சிக்கும் கணிச மான பங்கை இவர் அளித்துள்ளார். இவரது நாடகங் களுள் பெரல்கே கொறல்' (கழுத்துக்கு விரல்), 'மஹா ராத்ரி' போன்றவை குறிப்பிடத் தக்கவையாகும். இசைச் சிறப்புமிக்க இந்நாடகங்கள் கற்றோரை மட்டுமன்றி நாடகமாக நடிக்கப்பட்டதன மூலம் படிக்காத பாமர கிராம மக்களையும் பெரிதும கவர்ந்தன.

ஸ்ரீ இராமகிருஷ்ணரிடத்தும் விவேகானந்தரிடத்தும் நீங்காப் பற்றும் பக்தியும் கொண்ட இவர் இவ்விருவரது வாழ்க்கை வரலாறுகளையும் தனித்தனி நூல்களாக எழுதி வெளியிட்டுள்ளார்.

கன்னட இலக்கியத் துறையில் சிறந்த கட்டுரையா சிரியர்களுள் ஒருவராக விளங்கும இவர் கன்னட இலக்கி யத் திறனாய்வுத் துறையின வளர்ச்சிக்கும் தன் பங்கைச் செலுத்தியுள்ளார். இவரது திறனாயவுக் கட்டுரைகள் ஆழ்ந்த ஆராய்ச்சி அடிப்படையில் அமைந்துள்ளன. ஆயினும் புட்டப்பா போனறவர்கள முனைந்து திறனாய் வுத் துறையில் உழைத்ததால கனனட இலக்கியத்துறை யின் வளமான வருங்கால வளர்ச்சிக்கு அவை பெரிதும் உதவும என்பதில் ஐயமில்லை.

தொடக்கததில் இயற்கை வயப்பட்ட இனிய கவிதை கள் மூலம் வாசகர்களின் நெஞ்சங்களை இதமாக வருடிய 'குவெம்பு' கன்னட மொழி மீதும் கவிதையின் மீதும் மக்களின் கவனத்தைப் பெருமளவில் திருப்பினார். நாளடையில் மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளையும் ஆங்காங்கே காணும குறை நிறைகளையும், மேடு பள்ளங் களையும் மக்களுக்கு உணர்த்தத் தம் கவிதையாறறலைத் திறமையுடன் பயன்படுத்தலானார்.

இந் நோக்கத்தை எளிதில் ஈடேற்றிக்கொள்ள மற் றொரு வலுவான துறையாக இவருக்கு அமைநத புதினத் துறையில் வெற்றிநடை போட்ட போதிலும் இவரது கவிதைப் பணி இடையறாது நடைபெற்றது இவரது கவித்துவப் பேருணர்வுக்கோர் எடுத்துக்காட்டாகும்.

எல்லா வகையிலும் பேந்தரேயின் இலக்கிய வழித் தடததோடு இணை நது சென்றதனால்தானோ என்னவோ இந்தியாவின மிகப் பெரிய இலக்கியப் பரிசான பாரதீய ஞானப்பீடப் பரிசும் இருவருக்குமே கிடைததது.

இப் பரிசைப்பெற்றதன் வாயிலாக இவர்தம் இணை யற்ற கனனட இலக்கியப் பணி கலமேல் எழுத்தாக என றென்றும் நிலைபெறும் தனமையைப் பெற்றுவிட்ட தெனலாம்.

# டாக்டர் வி. கே. கோகக்

'விநாயக்' என கன்னட இலக்கிய அறிஞர்களாலும் கவிஞர்களாலும பெருமையோடு அழைக்கப்பெறும் பத்மஸ்ரீ டாக்டர் விநாயக் கிருஷ்ண கோகக் அவர்கள் இன்றைய கன்னட இலக்கிய உலகின குறிப்பிடத்தக்க ஒரு சிலரில் தலையாயவராக விளங்கியவர் ஆவார்.

சிந்தனை தேங்கிய ஒளியுமிழும் கணகளும் பரந்த நெற்றியும் அறிவின் ஆழத்தை அளந்து காட்டும் அழகிய மூக்கும் அவரைக் கலையின் வடிவமாகவே காட்டின அறுபது ஆணடுகளைக் கடநதுவிட்ட முதுமையின் சாயல் முகத்தில் படர்ந்திருப்பினும் இருபததைநது வயது இளைஞனுக்குரிய உணர்சசியும் துடிப்புமே உருவா யமைந்த பெருங்கவிஞராக இலக்கிய வித்தகராக—ஆராய்ச்சியறிஞராக-திறன்மிக்க திறனாய்வாளராக-நாடகாசிரியராக-எழுச்சிமிக்க எழுத்தாளராக-தலை சிறந்த கல்வித்துறையாளராகதிகழ்ந்தவர் டாக்டர் கோகக் அவர்கள்.

கவிஞர் டி.ஆர். பேநத்ரேயின் மந்திரசக்தி வாய்ந்த கவிதையால் ஈர்க்கப்பெற்ற இளைஞர் கோகக் கவிதைக் கன்னியிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொண டார். ஷெல்லியின் இலடசிய உணர்வும் கீட்ஸின அழ குணர்ச்சியும, ஏ.இ. ஹௌஸ்மெனின கற்பனை வளமும் அரவிந்தரின் தத்துவ நோககமும இவரைப் பெரிதும் ஆட்கொண்டதோடு, காதல் தததுவத் துறைகளில் புதிய நோக்கில் சக்திமிக்கக் கவிதைகள் புனைய பெரிதும் தூண்டி தலைசிறந்த இலட்சியவாதியாகவும் மனித இனத் தின் பரிவுமிக்கப் பண்பாளராகவும் இவரை மாற்றின.

1934இல் வெளிவந்த 'கலோபாசகர்' (கலை வழிபடு வோன்) என்ற கவிதைத் தொகுப்பும் 1935இல வெளிவந்த 'பயணா' (பிரயாணம்) என்ற கவிதைத தொகுப்பும் இவரது சிறந்த கறபனை வளத்துககும உள்ளததைக் கவரும இனிமைக கவிதை படைக்கும் ஆறறலுக்கும கட்டி யங் கூறுவனவாக அமைந்துள்ளன.

1939இல் வெளிவநத இவரது 'சமுத்ர கீதகளு' (கடற் கவிதைகள்) என்ற தொகுப்பு கவிதைத் துறையில் புது முயற்சி காண விழையும் இளைஞர்களுக்கு புது வழி காட்டும் புததிலக்கியக கவிதைக் களஞ்சியமாக அமைந் தன கன்னடக் கவிதையுலகில் புது வழிவகுதத இவரைக் கன்னடக் கவிதைத் துறையின புதிய இயக்கத்தின் வலு மிக்கத தலைவராக கவிஞர் உலகம் போற்றிக் கொண் டாடி மகிழ்ந்தது. 1950இல் வெளிவந்த இவரது 'நவ்ய கவிதைகளு' (புதிய கவிதைகள்) என்ற தொகுப்பு கன்னட கவிதையுலகுககே புது வழிவகுத்துத் தந்த புத்திலக்கியக் கவிதைகள் எனலாம். 1957இல் இவர் வெளியிட்ட 'த்யாவா பிரதிவி' (விண்ணும் மண்ணும) என்ற காவியம் அவருக்குச் சாகித்திய அகாடெமியின பரிசைப் பெறறுத் தந்து சிறப்பித்தது.

பழமைக்கும் புதுமைக்கும் இடையேயுள்ள போராட் டத்தைச் சிததரிக்கும் 1,200 பக்கங்களைக் கொணட இவரது 'சமரசவே ஜீவன்' (சமரசமே வாழ்க்கை) என்ற புதினமும் ஷேக்ஸ்பியரது நாடகங்களோடு ஒப்பிடத தக்க 'ஜனநாயகா' (மக்கள் தலைவன்) என்ற நாடகமும் ஒன்றுக்கொன்று முரணபட்ட மார்க்ஸிம்—முதலாளித் துவம ஆகிய இரு பெரும் தந்துவங்களின் போராட்டங் களைக் கருத்தாழததோடு விளக்கும் 'யுகாந்தரா' (யுக மாற்றம்) என்ற நாடகமும் இவரது எழுத்தாற்றலுக்கும் புத்துலக நோக்குக்கும் இணையறற எடுததுககாட்டு களாக விளங்குகின்றன.

இவரது ஆழ்நத புலமைககும் விமர்சனத் திறனுக்கும் சிறந்த எடுததுக்காட்டுகளாக விளங்குகின்றன 'இநதின கனனட காவ்யத கொத்துகுரிகளு' (இன்றைய கன்னடக் கவிதையின் நோக்கம்) 'நவ்யதே ஹாகு காவ்ய ஜீவன' (புதுமையும கவிதை வாழ்வும்) என்ற இரு விமர்சனப் படைப்புகள்.

கட்டுரைகளை எழுதுவதில் இவருக்குள்ள ஆற்றலுக்கு சான்றாய் விளங்குவன இவர் இங்கிலாந்து சென்று படித்துத் திரும்பிய அனுபவங்களைப் பசுமையாகச் சித்தரிககும் 'சமுதரதாசே இண்டா' (கடல் கடந்து) பயண நூலும் செலுவி நிலவு' (அழகு நிலையம்) என்ற மற்றொரு கட்டுரைத தொகுப்பும் கனனடததிலும் ஆங்கிலத்திலுமாகக் கிட்டத்தட்ட 40 நூல்களுககுமேல் எழுதியுள்ளார் டாக்டர் கோகக்.

பல இலக்கிய மாநாடுகளைத் தலைமை தாங்கி நடத்தியும் மாநில இந்திய அனைத்துலக கவிஞர் மாநாடுகளிலும் கல்வியரங்குகளிலும பங்கேற்று இலக்கியத் தொண்டாற்றி வரும அன்னாரின அருந்தொண்டைப் பாராட்டி மத்திய அரசாங்கம் 'பத்மஸ்ரீ' பட்டமளித்துப் பெருமைப்படுத்தியுள்ளது. கல்வி, இலக்கியத் தொண்டைத் தன் உயிர்மூச்சாகக் கொண்டு பணியாற்றிவரும் டாக்டர் கோகக் அவர்கள் பெங்களூர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பொறுப்பைத் துறந்த பின்னர் சமய ஆன்மீக தத்துவக் கருத்துக களைப் பரப்பத் தன் பேனவை மிக வலுவோடு பயன்படுத்தியவர்.

# ஆத்ய ரங்காச்சாரியா

தென்னக நாடகத்துறை வளர்ச்சிக்குக் கன்னட இலக்கிய உலகு ஆற்றியுள்ள கணிசமான ஆக்கப்பணியை யாரும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது அததகு சாதனையைக் கன்னட இலக்கியயுலகில் நிகழ்த்திய டி.வி. கைலாசம், ஹுயில்கோல் கருடாசம்ஸா போன்றவர்களின் பட்டியலில் குறிப்பிடத்தக்க ஒருவர் நாடகப் பேராசிரியர் ஆத்ய ரங்காச்சாரியா அவர்கள் இவர் பெரும்பாலும் 'ஸ்ரீரங்கா' என்ற புனைபெயராலேயே மக்களிடையே பிரபலமடைந்துள்ளார்.

பழமைப் போக்கை உடும்புப்பிடியாகக் பிடித்துக் கொண்டு கடுமையன ஆச்சார அனுஷ்டானங்களிலிருந்து இம்மியும் பிசகாது அவற்றைக் கண்டிப்போடு கடைப் பிடிக்கும் வைதீக பிராமண குலத்தில் பிறந்த ஆத்யாவோ பொருளற்ற 'கண்மூடிப் பழக்க வழக்கங்களும் பழமைப் போக்குகளும் மண்மூடிப்போக'த் தொடக்க முதலே இடையறாது உழைக்கும் புரட்சி வாதியாவார்.

சமுதாயத்தில் உள்ள கோணல் நிலைகளை, மேடு பள்ளங்களைக் கதைப் போக்கில் பாத்திரப் படைப்புக் களின் வாயிலாகச் சுட்டிக் காட்டி அங்கதக் குறிப்போடு, நகைச்சுவை ததும்ப விளக்குவதில் தனித்திறமை பெற்றவராக விளங்குபவர் ஆதயா. மூட நம்பிக்கைகளும் பொருளற்ற பழக்கவழக்கங்களும் எந்த அளவுக்கு சமூக நல்வாழ்வை சிதைத்துச் சின்னாபின்னமாக்கி அலைக் கழித்து வருகிறதென்பதை எண்ணிக் குழையும் உள்ளம் படைத்தவர். பழமை இருளிலே நின்று தடுமாறும் மக்களுக்கு உண்மை எனும் புதுமை ஒளி காட்டி அவர்

களை வழிநடத்த உறுதுணை புரியும் வண்ணம் கதைக் கருவை அமைத்தே தம் நாடகங்களை உருவாக்கியுள்ளார் இன்றைய உலகில் காணும் சாதாரண மனிதர்களையே பாத்திரமாகப் படைத்து விளக்குவதன் மூலம் மக்களுக் குப் பிரத்தியட்ச உண்மைகளை நேரடியாகவும் மறைமுக மாகவும் சுட்டிக்காட்டி அவர்களது மனப்போக்கில் மாபெரும் மாற்றங்களுக்கு வித்திடுகிறார். புதுமை யுணர்வு கொப்பளித்து நிற்கும் இவரது சக்திமிக்க உரைநடையும் நாடகத்துறையில் இவர் கையாளும் புதிய உத்திகளும் நுணுக்கங்களும் இவரது புதுமை நோக்கம் இனிது நிறைவேற பெருந் துணைபுரிகின்றன. சமூகவாழ் வில் படிநதுள்ள பாசிகளை மட்டுமல்ல, அரசியல், பொருளியல், சமய, கல்வித் துறைகளின் மீது படிந்துள்ள மாசுகளையும், தூசிகளையும் அப்புறப் படுத்த இயனற அளவு தம எழுத்தின்மூலம் இடையறாது முயல்கிறார். சமூக அநீதிகளை மக்கள் முன தோலுரித்துக் காட்டுவதன் மூலம் அவர்களிடையே விழிப்பையும், புரட்சியுணர்வை தோற்றுவிக்கிறார். அநீதியை அகற்றி, நீதியை நிலை நாட்டுவதே இவரது நோக்கம் என்பதை இவரது படைப் புக்கள் அனைத்தும் பறைசாற்றுகினறன.

கன்னட மாநிலத்திலுள்ள பீஜப்பூர் மாவட்டத்தில் அகர்கெடா என்ற குக்கிராமமொன்றில் அறுபத்தேழு ஆண்டுகட்டு முனபு வைதீக பிராமணக் குடுமபமொன றில் பிறந்த ஜாகிர்தாா (ஆம் அதுதான் அவரது பெற் றோர் ஆரம்பததில் அவருக்கு இட்ட இயற்பெயர்) கள்ளிப்படிப்பை முடித்து. பம்பாய் பல்கலைக் கழகததில் சமஸ்கிருதம் பயினறு எம். ஏ. பட்டம் பெற்றார் தொடர்ந்து உயர் கல்வி பெற மேனாடு சென்று திரும் பியபின் தார்வாரில் உள்ள கர்நாடகக் பல்லூரியில சமஸ் கிருதப் பேராசிரியராகச் சிலகாலம் பணியாற்றினார். இச்சமயத்தில்தான் இவர் தம் இயற்பெயரான 'ஆர். வி. ஜாகிர்தார்' என்பதை மாற்றி 'ஆத்யரங்காச்சாரியா'

என அமைத்துக் கொண்டதோடு 'ஸ்ரீரங்கா' என்ற புனைபெயரையும் சூடிக்கொண்டு தம் எழுத்துலகப் பணியைத் தொடங்கலானார்.

இயல்பாகவே சிந்தனைத்திறமும் புதுமையுணர்வும் தனித்துவப் போக்குமுடைய ஆத்யாவால் எவ்வித மாறுதலுக்கும் உட்படாத செக்குமாட்டுத் தன்மைகொண்ட ஆசிரியப் பணியை மேற்கொண்டு நீண்டகாலம நீடிக்க இயலவில்லை. அவரது உள்ளத்தின் அடித்தளத்தில் கனன்று கொண்டிருந்த புரட்சிக்கனல், சமூக சீர்திருத்த உணர்வு, அநீதியைக் காண சகிக்காத மனப்போக்கு ஆகியன எழுத்துலகை நோக்கி அவரை நடைபோட வைத்தன. எவ்விதக்கட்டுப்பாட்டுக்கும் உட்படாத சுதந்திர எழுத்தாளனாகத தம் வாழ்வைச் சிலகாலம் நடத்திவந்தார். தனி மனிதர்களிடையே காணும் குறை நிறைகளை நகைச்சுவையாகச் சுட்டிக்காட்டி கேலி செய்வதன மூலம சமூக மாற்றத்திற்கு வழிகுக்கும் பெர்னாட்ஷா, இப்சன ஆகிய மேனாட்டு புதுமை நாடகாசிரியர்களின் போக்கும் எழுததுத் திறமையும் இவரைப் பெரிதும கவர்ந்தன. அவர்கள் வகுத்துச் சென்ற தடயத்தைப்பின்பற்றித் தம் படைப்புக்களை உருவாக்கத தொடங்கினார். நாளடைவில் தனக்கெனத் தனியான தொரு பாணியையும் உத்தியையும கையாண்டு முழு நாடகங்களையும் ஓரங்க நாடகங்களையும கதை இலக்கியங்களையும் உருவாக்கினார். விரைவிலேயே அப் படைப்புக்கள மக்களிடையே விழிப்பையும் ஒருவிதப் பிடிப்பையும் ஏற்படுத்தின. முற்போக்கு இளைஞருக்கும் புதுமைப் போக்காளர்களும் இவரை புரட்சி நாடகாசிரியராக ஏற்றிப் போற்றத் தொடங்கினர்.

தீண்டாமை எனும் பெரும் சமூகக் கொடுமையைத் தாக்கி, வைதீக மனப்பான்மை கொண்டவர்களைக் கடுமையாகச் சாடும் இவரது புதுமைப் படைப்பான 'ஹரி

ண வால்' என்ற புரட்சி நாடகத்தின் மூலம் பயனற்ற மூட நம்பிக்கைகள் எந்த அளவுக்கு நம சமுதாயத்தைப் பாழ்படுத்தியுள்ளது எனபதையும் சாதிப் பிரிவுகளால் விளைந்துள்ள சமூக அநீதிகளையும் வெட்டியெறிய முடியாத அளவுக்கு வேரூன்றிவிட்ட தீமைகளையும் நாடகம் காண்போர் உள்ளத்தைக் கவ்வும் வகையில் அருமையாகச் சித்தரித்துள்ளார். பிராமண சாதியில் உள்ள கைம்மைப் பழக்கம், சமூக முன்னேற்றப் பாதையில் காணப்படும பயங்கர அபாயச் சின்னம் என்பதை இதில் அழுத்தமாக விளக்கியுள்ளார். இத்தகைய சமூக அநீதிகளைப் பாது காக்கும கேடயமான சாதிப் பாகுபாடுகளைத தூள் தூளாக்க வேண்டும என முழக்கமிடுகிறார்.

இந்த நாடகம் அரங்கேறியவுடன் தான் பிறந்த வைதீக பிராமண குலத்தின மாபெரும் எதிர்ப்புப் பிரளயத்தையே எதிர் நோக்க வேண்டியிருந்தது. தனது உறவினர்களின் கடும்பகையும் இவரைப் பயங்கரமாகத் தாக்கத் தொடங்கியது. உற்றார் உறவினர் மட்டுமல்லாது ஆச்சாரமிக்க அந்தணர் குல எழுததாள நண்பர்கள பலரும் ஒரு முகமாக இவரது புரட்சிப் போக்கைக் கண்டிக்கத் தொடங்கினர். ஆனால் இவரது இலக்கியப் போக்கை இத்தகைய எதிர்ப்புகளால் ஏதும் செய்ய இயலவில்லை. தொடர்ந்து தம் சமூக சீர்திருதத நாடகங்களை உருவாக்கலானார்.

இன்றைய சமூக அமைப்பில் எதத அளவுக்கு தனி மனிதனின் உயர் பண்புகள் உருக்குலைந்துள்ளன என்பதையும் நசித்து மறைந்துவரும் மனிதனின உயர் பண்புகளை மீண்டும் நிலைநிறுநதி ஒளியூட்ட இன்றையச் சமூகச் சூழல் எம்முறைகளில் தடுப்புக் சுவர் எழுப்பி ஆர்வத்தைக் குன்றச் செய்து மந்தப்படுத்தி வருகிறது என்பதையும் இதனால் ஏற்பட்டுள்ள தேக்கத்தால் விளைந்துள்ள விபரீத நிலைமைகளையும் உணர்த்துவது

தான் இவரது 'உதார வைராக்கியா' என்ற நாடகப் படைப்பு.

அஸ்வமேத யாகமொன்று நடத்த எத்தகைய சிரமம் உண்டோ அதைவிட அதிகமான சிரமம் ஒரு திருமணத்தை நடத்த ஏற்படுகிறது என்பதை நகைச்சுவையாக அங்கதப் போக்கில் விளக்குகிறது 'அஸ்வமேதா' என்ற நாடகம் வரதட்சணை வழக்கத்தின் கொடுமைகளை அப்பட்டமாக விளக்குவதன் மூலம் சமூகத்தில் புரையோடிப் போயிருக்கும் பெருந்தீங்கை சுட்டிக் காட்டித் திருத்த வழி கோலுகிறார் அந்நாடகத்தில்.

இன்றைய சூழ்நிலையில் கூட்டுக் குடும்ப முறை என்பது சிறிதும் பொருத்தமற்றது என்பதை உணர்த்துகிறார் 'பிரபஞ்ச பரிபட்டு' என்ற அவரது மற்றொரு நாடகத்தில் சாதி சமயம் என்ற குறுகிய எல்லைகளையெல்லாம் கடந்த நிலையில் மனிதரெல்லோரும் ஒரு குலம் என்ற கண்ணோட்டத்தில் மனிதகுல மேன்மையையே எண்ணிச் செயல்பட வேண்டும் என வலியுறுத்துகிறார். 'அதிகமாக' என்ற அவரது மற்றொரு நாடகம் பால்ய மணத்தின—குழந்தைத் திருமணத்தின கொடுமையை சோகத்தின நிழலாட்டமாகச் சித்திரிக்கிறது.

முழு நேர நாடகங்கள் மட்டுமல்லாது ஓரங்க நாடகங்கள் பலவற்றையும் எழுதியுள்ளார். அவைகளுள் 'நிம்தர குமரா' 'சமபத் தர்மா' முதலிய ஓரங்க நாடகங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். இக்கதைகளின் கரு புராணங்களிலிருந்து எடுக்கப்பட்ட போதிலும் அவை புத்துருவில சித்திரிக்கப்பட்டுள்ளன. நகைச்சுவை கலந்த அங்கதப் போக்கு இந்நாடகங்களின் உயிரோட்டமான பண்பாகவுள்ளது

இவர் நாடகாசிரியர் மட்டுமல்லர். புதினப் படைப் பாளருமாவார். இவரது புதினப் படைப்புகளில் குறிப் பிடத்தக்கது தொடக்க நாட்களில இவர் எழுதிய 'விஸ் வாமித்ர சிருஷ்டி' எனற புதினமாகும் பிற புதினப் படைப்புக்களைப் போலன்றி இது தனித்துவப் போக் குடையதாகும தன்னுணர்வுத் தொடர் எனற புதிய முறையை இவர் திறம்பட இப்புதினத்தில் கையாண்டு வெற்றி பெறறுள்ளார் தன்னுணர்வின நீரோட்டமான நிலையை செம்மையுறச் சிததிரிக்கும் இப்புதினத்தில் வரும் பாத்திரமொனறின மூலம சமூகப் பிரச்சினைகளை நகைச்சுவைப் போக்கில் ஆராய்கிறார். 'புருஷார்தத' 'அனாதி' ப்ருக்கருதி' 'புருஷ' 'குமாரசம்பவா' முதலியன மற்ற சில புதினங்கள் இப்பதிலங்கள் ஒவ்வொன்றும் ஒவ் வொரு போக்கில் சோதனை முறையாக எழுதப்பட்டவை களாகும். இவரது இலக்கியப் படைப்புக்கள் ஒவ்வொன் றுமே ஒரு சோதனைப் படைப்பு எனத துணிந்து கூற முடியும்.

'சோகச் சக்கரம்' 'பூர்வரங்கா' 'சம்புஷ்ட ராமா யணா' முதலிய படைப்புக்கள் உள்ளத்தைக் கிளறி சிந்திக்கத் தூணடுபவைகளாகும். இவரது அமரத்துவப் படைப்புக்களுள் ஒனறான நிருத்தர குமாரா'வில் வரும் உத்தர குமாரன் பாத்திரம் உணர்ச்சிப் பிழம்பாக அமைந்து வாழ்வின் உண்மைத் தன்மையை உணர்த்திக காட்டும் அரியதொரு பாததிரப் படைப்பாகும். இக் கால கல்விப் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து சிததிரிக் கும் 'சரஸ்வதியின் சர்க்கஸ்' குறிப்பிடத்தக்கதோர் படைப்பாகும்

புதிய புதிய சோதனைகளையும் உத்திகளையும் நுணுக்கங்களையும் கையாணடு நாடகங்களையும் உரு வாககும் ஆத்யா எப்போதும் சமுதாயக் கோணல் நிலை களைச் சுட்டிக்காட்டத் தவறுவதேயில்லை. கொடுமை

கண்டு கொதித்தெழும் இவர் அவைகளை கண்மூடித்தன மாகக் கண்டிக்க முற்படுவதில்லை. நகைச்சுவையின் துணைகொண்டு அங்கதப் போக்கில கடிந்து கொள்வது போல் தன் கண்டனங்களை வெளிப்படுத்துகிறார். தனது கோபத்தையோ தீவிர உணர்ச்சிகளையோ அப்பட்ட மாக அப்படியே வெளிக்காட்டிக் கொள்ளாது, அவற்றை அங்கதக் குறிப்பின மூலம் வெளிபபடுததி படிப்போரை யும் நாடகம பார்ப்போரையும் சமுதாயப் பிற்போக்குத் தனத்தின் மீது வெறுப்பும் ஆத்திரமும் கொண்டு வெகுண டெழச்செய்கிறார். ஆழ்ந்த உண்மைகளையும அனாயாச மாக வெளிப்படுத்தும் சக்தி மிக்கக் கருவியாக இவர் மொழியைக் கையாள்கிறார். சிக்கல்களின்றி நாடகப் போக்குகளை உருவாக்கி அமைப்பதன் மூலமும் நீரோட் டம் போன்ற எளிய தெளிவான உரையாடல்கள் மூலமும் யாரும் எளிதாக நடிக்கவும் படிக்கவும் முடிகிறது. தற் கால நாடக உலகின போக்குகளையெல்லாம் நன்கறிந்த ஆதயா தம் நாடகங்களையும் புதிய போக்குகளுக்கேற்ற முறையிலே உருவாக்கியுள்ளார்.

ஆத்யா வெறும் நாடகாசிரியர் மட்டுமல்ல; பண் பட்ட நாடக இயக்குநரும் திறமிக்க நடிகருமாவார். அவர் தமது நாடகங்கள் பலவற்றில் திறமபட நடித்துப் பல்லோரது பாராட்டையும பெற்றுள்ளார்.

ஆத்யா கன்னடம், சம்ஸ்கிருத மொழிகளில் மட்டும் நிறை புலமை பெற்றவரல்ல; ஆங்கிலம், இந்தி, மராத்தி ஆகிய மொழிகளிலும் போதிய புலமை பெற்றுள்ளவர். இம்மொழிகளிலிருந்து சில படைப்பிலக்கியங்களை இவர் கன்னடத்தில் பெயர்த்துள்ளார்.

சிறந்த படைப்பிலக்கிய ஆசிரியர் என்பதோடு தகுதி மிக்க இலக்கியத் திறனாய்வாளராகவும் கன்னட மொழி இலக்கியவாணர்களால் மதிக்கப்படுகிறார்

# ஆர். எஸ். முகளி

இந்திய இலக்கிய உலகில் குறிப்பாகத் தென்னக இலக்கியத் துறையில் திறனாய்வுக்கலை அண்மைக் காலத்தில் வெகுவாக வளர்ந்து இலக்கிய வளர்ச்சிக்குப் புதிய வேகமும் விறுவிறுப்பும் தந்து வளமூட்டி வருகிறது புத்துலக இலக்கிய முயற்சிகளுக்கு உறுதுணை புரியவல்ல திறனாய்வுத்துறை தமிழ் மலையாள, தெலுங்கு மொழிப் பகுதிகளில் பெருவளர்சசி கணடுள்ளது போனறே கன்ன டப் பகுதியிலும் அழுந்தக் காலூனறிப் பெருமைப் படத் தக்க அளவில் வளமாக வளர்ந்துவருகிறது. கன்னட திற னாய்வுற் துறையின் இத்தகைய வளர்ச்சிக்குப் பெருந் துணையாயமைந்த கனனட இலக்கிய வாணர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவர் 'ஆர். எஸ். முகளி' எனறழைக் கப்படும் டாக்டர் ரங்கநாத ஸ்ரீநிவாச முகளி அவர்கள்.

டாக்டர் முகளி தலைசிறந்த திறனாய்வாளர் என்ப தோடு புகழ் பெற்ற கவிஞராக-புதினப் படைப்பாளராக வும் கன்னட இலக்கிய உலகில் பெரு மதிப்போடு போற் றப்படுகின்றார்.

1906ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் வட கர்நாடகத்தி லுள்ள மலப்ரபா நதிக்கரையில் அமைந்துள்ள ஆலூர் என்ற ஊரில் பிறந்த முகளி தம் தொடக்கப்படிப்பை பீஜப்பூரிலும் கல்லூரிக் கல்வியை தார்வார் கர்நாடகக் கல்லூரியிலும் படித்து முடித்து சமஸ்கிருதத்தில் பி. ஏ. பட்டம் பெற்றார் 1930ஆம் ஆண்டில் எம் ஏ பட்டம் பெற்ற அவர் கிடைத்தற்கரியதான 'வித்யாரண்யா' பதக்கமும் பெற்றார். 1932ஆம் ஆண்டில் ஆசிரியப் பயிற்சியை முடித்தபின் ஹுப்ளியிலுள்ள சங்கிலி எனு

மிடத்தில் உள்ள வெலிங்டன கல்லூரியின் கன்னடப் பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கி, பின் கல்லூரித தலைவராகப் பணியாற்றலானார்.

கல்லூரியில் கல்வி கற்றுவந்த காலத்திலேயே இவரது உள்ளத்தில கவித்துவ உணர்வு பொங்கி நின்றது இவரது உள்ளத்தே ஊற்றெடுத்து வந்த கவித்துவ உணர்வை செயலுருக் கொள்ளுமாறு மாற்றிய பெருமை கவிஞர் பேந்த்ரேயின கவிதைகளையே சாரும் அககாலத்தில் பல பெருங் கவிஞர்கள் உருவாகப் பெருங் காரண மாயமைந்த 'கெளயரகும்பு' (Gelayaragumpu) என்ற கவிஞர் குழுவில் முகளி பெரும் பங்கேற்றார்.

கவிதை உணர்வால் பெரிதும் சூழப்பட்டிருந்த போதிலும் நூல் வடிவில் முதன்முதலாக வெளிவந்த இலக்கியப் படைப்பு புதினமேயாகும் இவரது முதல புதினப் படைப்பான 'பாளுரி' (வாழ்க்கைத் தீ) வேலையின்மைப் பிரச்சினைகளையும் அதனால் ஏற்படும் வறுமையையும் மைய மாகக் கொண்டு பின்னப்பட்டதாகும் 1939ஆம் ஆண்டில் அவரது இரணடாவது புதினம் 'காரண புருஷ' வெளி வந்தது. இலட்சியத்துக்கும் நடைமுறைப் போககுக்கும் உள்ள இடைவெளியை விளக்குவது இப்புதினம் அவரது புதினங்கள் அனைத்தும் சமூக வாழ்க்கையில் இன்றியமை யாது இடம்பெற வேண்டிய உயரிய ஒழுக்கப் போக்கினை வலியுறுத்துவதாகவே அமைந்துள்ளன.

1930ஆம் ஆண்டு முதலே இவர் கவிதை எழுதத் தொடங்கிய போதிலும் முதல் கவிதைத் தொகுதியான 'பாசிகா 1940ஆம் ஆண்டில்தான் வெளிவந்தது. உணர்ச்சிப் பெருக்கோடு இயற்கையழகினை வர்ணிக்கும் இக் கவிதைகளில் தத்துவக் கருத்துக்கள் பரக்க அமைந்துள்ளன. மனித சமுதாயத்தின்மீது இவருக்குள்ள மனிதாபிமான உணர்வுகளை அழகுற சித்தரிக்கும் பலபாக்கள்

இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. இவரது இரண் டாவது கவிதைத் தொகுப்பான 'ஓம அஷாந்தி' தத்துவக் கருததுக் கோவையாகவே அமைந்தது.

இவர் சிறுகதைத் துறையிலும் தன் கைவண்ணத்தைக் காட்டியுளளார். 'கனசின கௌதி' (கனவுக் காதலி) என்ற தொகுப்பில் காணும் கதைகளில் பல சிறந்த கதையம்சம் கொண்டு விளங்குகின்றன. இக்கதைகளில் காணும் மற் றொரு சிறப்பம்சம நகைச்சுவையோடு கதைகளை நடத்தி செலவதாகும் உள்மனத்தைத் தொடவல்ல சோக உணர் வூட்டும் கதைகள் பலவும் இதததொகுப்பில் இடம் பெற் றுள்ளன

இவர் படைத்த நாடகங்கள் பலவும் சாதாரண மக் களின் வாழ்க்கைப் பிரச்சினைகளையே மையமாகக் கொண்டு எழுதப்படடவைகளாகும். 'சேவா ப்ரதீபா' (தொண்டெனும ஒளி), 'மனோராஜ்யா' 'நாமதாரி' (பெயர் பெற்றேன்) போன்ற நாடகங்களில் நகைச்சுவை யும் கேலிக்குறும்புகளும் இரண்டறக் கலந்துள்ள நிலையில் சமுதாயத்தில் உள்ள பல்வேறு பிரிவு மக்களின் வாழ்க் கைப் பிரச்சினைகளை அலசுகின்றன.

டாக்டர் முகளி கவிஞர், புதினப் படைப்பாளர் நாடகாசிரியர் சிறுகதை எழுத்தாளர் என்ற சிறப்புக்களை விட தலைசிறந்த கன்னட இலக்கியவுலகத் திறனாய் வாளர் எனற பெருஞ் சிறப்பாலேயே இன்று போற்றி மதிக்கப்படுகின்றார்.

கல்வி கற்ற காலத்திலும் வெலிங்டன் கல்லூரியில் கன்னட மொழிப் பேராசிரியராகப் பணியாற்றிய காலத் திலும் இவர் திறனாய்வு உணர்வோடடவே இலக்கியங் களை நோக்கினார். திறனாய்வுத் துறையில் ஆழ்ந்த புலமை படைத்த டாக்டர் முகளி கன்னட இலககியத

துறையின் செழிப்பான வளர்ச்சிக்குத் திறனாய்வுத் துறையே பெருந்துணையாடமைய முடியும் என்ற எண ணததில் அததுறையின வளர்ச்சியின்பால் தன் புழுக் கவனத்தையும செலுத்தினார். மற்றவர்களின் எழுத்துக் களைத் திறனாய்வு செய்வதோடு நில்லாது, தனது படைப்புக்களையே தான வகுத்த திறனாயவுக் கோட் பாட்டிற்கேற்ப உருவாக்கினார். இதன்மூலம் இவரது எழுத்துக்கள் தனித்தன்மை பெற்றுத் திகழலாயின. 'சாகிதயோபசனே' (இலக்கிய அஞ்சலி) 'தவநிதி' (பெரு நிதி)முதலிய திறனாய்வுக் கட்டுரைத் தொகுதிகள் இவரது திறனாய்வுக் கோட்பாட்டிற்கும் இத்துறையில் இவரது பெரும் புலமைக்கும் தக்க சான்றாகும்.

இவரது எழுத்துக்களுள் மிகச் சிறந்ததாக மதிக்கப் படும் 'கன்னட சாகித்ய சரித்ரே' (கன்னட இலக்கிய வரலாறு) என்ற நூல் வெறும் இலக்கியங்களின் பெயர் களையும் நூலாசிரியர்களையும் எழுதப்பட்ட காலங்களை யும் மட்டும குறிக்காது கன்னட இலக்கியத்தின் முழுமை யை படிப்போர் அறிந்துணரும் வகையில் உருவாக்கியுள் ளார் படைப்புக்களின் தராதரத்தை மட்டும விண்டுரைக் காது கன்னட இலக்கியததின் வரம்புகளையே சுட்டிக் காட்டும் வகையில் எழுதியுளளார். ஒவ்வொரு கால கட்ட மும் கனனட இலக்கியத்தை எந்தெந்த வகைகளில் பாதித்து மாற்றங்களை விளைவித்தன எனபதையும் அம் மாற்றங்களின் விளைவாக உருவான சூழலையும் கன்னட இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளில் இலக்கிய உலகின் கொள்கைகள் மதிப்பீடுகள் முதலியவைகளையெல்லாம் ஆராய்ந்து தெளிவாக்கியுள்ளார். இந்நூலின் சிறப் புணர்ந்த பூனா பலகலைக் கழகம் திரு முகளிக்கு 'டி.லிட்' என்ற சிறப்புமிகு டாகடர் பட்டத்தை அளித்துப் பெரு மைப்படுத்தியது. இதே நூலிற்கு சாகித்திய அக்காதெமியும் பரிசு வழங்கிப் பாராட்டியது.

# அ. ந. கிருஷ்ண ராவ்

வரலாற்றுப் புதினப் படைப்புத் துறையில், தமிழ் இலக்கிய உலகில தனிவழி வகுத்துப் பெரும் புகழ்பெற்ற பேராசிரியர் 'கல்கி' அவர்களைப் போனறு கனனடத்தில் வரலாற்றுப் புதினப் படைப்புத் துறையில் தனிப்பெரும் எழுத்தாளராக விளங்குபவர் 'அ ந-க்ரு' என அழைக்கப் படும் அ.ந கிருஷ்ண ராவ் அவர்கள்.

இவரைப் பிறவி எழுததாளர் என்றே கூற வேண்டும். சிந்தனை தேங்கிய ஒளியுமிழ் கண்களும் கூரிய நாசியும், பரந்த நெற்றியும், கலைஞனுக்குரிய கவர்ச்சியான உருவ அமைப்பும் கொண்ட இவரைப் பார்தத மாத்திரத் திலேயே, எள்ளளவு ஐயத்திற்கும இடமினறி எவரும் இவரை 'ஓர் எழுத்தாளர்' என முடிவு கட்டிவிடுவார் உருவத் தோற்றததால் மட்டுமல்லாது எழுத்தாற்றலாலும கன்னட இலககியத் துறையில் தனித்துவ நிலைபெற்றிருப் பவர் அ.ந. க்ரு அவர்கள்.

எழுத்தை மட்டுமே நம்பி வாழும் இவரளவுக்கு, கன்னட மொழியில் சளைக்காமல் எழுதிக் குவித்திருப் பவர் யாருமிலர். தமது பதினாறாவது வயதில் எழுதத் தொடங்கிய இவர் புதினம், சிறுகதை, நாடகம், திற னாயவு, வாழ்க்கை வரலாறறு நூல் என இருநூறுக்கு மேறபட்ட நூல்களை கன்னட இலக்கிய உலகுக்கு இயற்றித் தந்துள்ளார்.

வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தேடியெடுப்பதிலும், அவற்றை எளிதாகத் தம் படைப்பு வழி விளக்குவதிலும் அரிய ஆற்றல் வாய்க்கப் பெற்றவர் இவர்.

இவரது முதல் படைப்பு 'மதுவையோ மனெ ஹாளோ' (திருமணம் அல்லது அழிவு) எனும் இன்பியல் நாடகமாகும் தமது பதினாறாவது வயதில் எழுதப்பட்ட இந்நாடகம அன்றைய கன்னட நாடக மேடைகளில் புகழ் பெற்று விளங்கியது. அக்கால பிரபல நாடக நடிகர்கள் பங்குகொண்ட அந்நாடகத்தில் இவரும் ஒரு நடிகராக நடித்தது குறிப்பிடத்தக்கது.

இவரது முதல் படைப்பான நாடகம் இவரைப் புகழேணியில் ஏற்றியபோதிலும், இவர் தொடர்ந்து நாடகங்களை உருவாக்க முனையாது சிறுகதைகளை எழுதுவதில் தம் கவனத்தைச் செலுத்தலானார். நாளடை வில் இவரது எழுதுகோல் புதினத் துறையை நோக்கித் திரும்பலாயிற்று இவரது முதல் புதினம் 'ஜீவன யாதரே' (ஜீவ யாத்திரை) 1938ஆம் ஆண்டில் வெளிவந்தது. அன்றிலிருநது இதுவரை இவரது பேனாமுனை நூற்றிரு பதுக்குமேற்பட்ட சமூக வரலாற்றுப் புதினங்களை எழுதிக்குவித்து கன்னட புதின இலக்கியத் துறையின் முடி சூடா மன்னராக்கியது. சமுதாயத் தனி மனிதவாழ்வில் இழையோடிக் கிடக்கும் புதிரான விஷயங்களை - பிரச்சினைகளை கதைக் கருவாகக் கொணடு கதை புனை வதில் வல்லவரான இவர் வாழ்க்கையில் கீழத்தரமானவை என பிறர் கருதி ஒதுக்கும் விஷயங்களையும் கவர்ச்சியாக வும், பிறர் கவனத்தைக் கவர்ந்திழுக்கத் தக்கதாகவும் தம் படைப்பு வழி உருவாக்கி உணர்த்துவதில் வல்லவர். 'ஷனி சந்தானா' (சனியின பிறப்பிடம) 'நக்ன சத்யா' (அப்பட்ட உண்மை) போன்ற புதினங்களில் விலை மாதர் களின் கொடுமைமிகு வாழ்வின போக்குகளை அழகுற விளக்கியுள்ளார். அதனால இவை எதிர்ப்புககாளானதில வியப்பேதுமில்லை

இவர் தமது கலையுலக அனுபவச் சாயல்களை வலி மையான எழுத்துருவங்களாக வெளிப்படுத்துவதில் தனித்

திறமை பெற்றவராக விளங்குகிறார். 'நட சார்வபௌம (நடிக மாமன்னர்) என்ற பெரியதோர் புதினப் படைப்பு இவரது படைப்புகளிலேயே தனிச் சிறப்புடையதாகும். ஆயினும், பல பதிப்புக்களைக் கண்டதும் பல்வேறு இந்திய மொழிகளில் பெயாக்கப்பட்ட பெருமைக்குரியதுமான புதினம் 'சநதியா ராகா' (மாலைப பாட்டு) என்ற புதினமாகும். வாசகர்களின் சுவைத்திறனுக்குப் பெரு விருந்தாக அமைந்த இப்புதினப் படைப்பு இசை வல்லுநர் ஒருவரைச் சுற்றிப் பின்னப்பட்ட கதையாகும்.

அன்றாட வாழ்வில் காணும் மிகச் சாதாரண மக்களின் வாழ்க்கைப் போக்குகளையும், பாதிப்புக்களையும், அலர்கள் காணும் முன்னேற்றக் கனவுகளையும், நடைமுறை வாழ்க்கையின இனப துனபங்களையும் எழிலோவியமாகத் தீட்டிக் காட்டுவதில் இவர் சிறந்து விளங்குகிறார். இத்தகைய போக்கில் அமைந்த இவரது புதினங்களில் வரும் பாத்திரங்கள் கறபனையாகப் படைக்கப்பட்டிருநத போதிலும அவை நடமாடும் ஜீவன்களாகவே அமைந்திருக்கின்றன இப்பணபே படிக்கும் வாசகர்கள் இவரது புதினங்கள்மீது நீங்காப் பற்றுக் கொள்ளத் தூண்டுகோலாக அமைகின்றது.

இவரது பெருமைக்கு நிரந்தர கட்டியங் கூறுவது இவரது வரலாற்றுப் புதினமாகும் கன்னட இலக்கிய உலகில் வரலாற்றுப் புதினப் படைப்புத் துறையில் பலர் முயனறு உழைத்துப் படைப்புக்களை உருவாக்கியுள்ள போதிலும் அத்துறையில் பெரு வெற்றிகளைத தொடர்ந்து குவிதது வந்திருப்பவர் இவரே எனத் துணிந்து கூறலாம.

தென்னக வரலாற்றில் மட்டுமல்லாது இந்தியச் சரித்திரததிலேயே பொற்காலமென மதிக்கப்பட்ட ஒரு கால கட்டத்தை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்ட வர

லாற்றுப் புதினமான 'விஜயநகர சாம்ராஜ்யா' இவரது வரலாற்றுப் புலமைக்கும அதனைக கலர்ச்சியூட்டும கதையுருவில் அறபுதமாகச் சித்தரிக்கும் ஆற்றலுக்கும இணையற்ற எடுத்துக்காட்டாகவுள்ளது. வெறும் வர லாற்றை மட்டும சித்தரிப்பதோடு இவர் எழுத்துப்பணி அமைந்துவிடவில்லை. வ ர லா ற் று நிகழ்ச்சிகளைக் கொண்டு வாழும் தலைமுறைக்கு வேகமும் விறுவிறுப்பும் ஊட்ட இவரது எழுதுகோல் தவறவில்லை எனபதறகுத் தக்க சான்றாக அமைந்துள்ளது. 'சித்தூர் ராணி சென் னம்மா' எனற மறறொரு வரலாற்றுப் புதினம், பாரத விடுதலை உணர்வுக்கு வேகமூட்டிய நிகழ்ச்சியாக வரலாற் றாசிரியர்களால் கருதப்படும் ஜானசி ராணிக்கும் முனனரே 18ஆம் நூறறாண்டில் பெல்காமுக்கு அருகில் உள்ள சிறியதோர் பகுதியை ஆண்டு வந்த சிததூர் ராணி சென்னம்மா, ஆங்கிலேயர்களை எதிர்த்து வீறுடன் போரிட்ட நிகழ்ச்சிகளை விவரிக்கிறது இப் புதினம்.

மணிவிழாக் கண்ட அ. ந. க்ரு. பதினைந்திற்கு மேற பட்ட நாடகங்களையும் பத்திற்கு மேற்பட்ட வாழ்க்கை வரலாற்று நூல்களையும், நூற்றிருபதுக்கு மேற்பட்ட சமூக, வரலாற்றுப் புதினப் படைப்புக்களையும், ஏராள மான சிறு கதைகளையும் கட்டுரைகளையும் எழுதிக குவித்துள்ளார். இவரது அடிச்சுவட்டைப் பின்பற்றும் இளைஞர் கூட்டமொனறு இனறு கன்னட இலக்கிய உலகில் பீடுநடை போட்டு வருகிறது. இநத இளைய தலைமுறையின படைப்புகளில் அ. ந. கரு வின் செல்வாக் கைப் பரக்கக் காணலாம்.

இவரது எளிய, ஆனால் கவர்ச்சிமிக்க மொழியும, எதனையும் தெளிவுபட விளக்கவல்ல நீரொழுக்குப் போன்ற நடையும் படிக்கும் வாசகர்களை எளிதாக இவரது சிந்தனைப் போக்குடன் ஒன்றிவிடச் செய் கின்றன கம்பீரமான போக்கில் கதை சொல்லும் திறன்

இவருக்கு இயற்கையாகக் கைவரப் பெற்ற வரப்பிரசாத மாகும.

எழுத்தில மட்டுமல்லாது பேச்சாற்றலிலும் இவர் மிகப் புகழ் பெற்று விளங்கியவர். இவரது கன்னட, ஆஙகிலப பேசசுக்களைச் செவிமடுததோர் இவரது நாவன்மையைப் பாராட்டாதிருக்க முடியாது. இவரது குரல் ஒலிக்காத இலக்கிய மேடைகள் கனனட இலக்கிய உலகில் இலலை எனலாம். 1960ஆம ஆண்டில் உடுப்பியில் நடைபெற்ற கன்னட இலக்கிய மாநாட்டில் இவர் ஆற்றிய தலைமையுரை முற்போக்கு இலக்கிய உலகில் எனறும் ஒலிக்கத்தக்க பெருஞ் சிறப்புக்குரிய தொன்றா கும். பகலெலலாம படிப்பு, இரவெல்லாம் எழுத்து எனும் போக்குடைய இவரது இடையறா எழுத்துப் பணியால் கன்னட இலக்கிய உலகு பெற்ற பெரும் பயன் கொஞ் சநஞ்சமனறு.

# பி. புட்டசாமையா

கன்னட இலக்கியத் துறைக்கு-குறிப்பாக நாடக இலக்கியத் துறைச்கு அருப் டணியாற்றி வநதுள்ள ஒரு சில கன்னட எழுத்தாளர்களுள் திரு. புட்டசாமையாவும் ஒருவராவார். சுமார் ஐம்பது ஆணடுகட்கு முன்பே கன்னட நாடக இலக்கியத்துறைக்கு அமரத்துவப் படைப் புக்கள் பலவற்றை உருவாக்கித் தந்து வளங் கூட்டியவர் இவரது எழுத்துத் திறமையால் நாடக இலக்கியத் துறை வளமும் வனப்பும் கொண்டு பீடுநடை போட்டு வளரத் தொடங்கி, நாடக உலகில புதுமைகள் பல தோன்றக் காரணமாக அமைநதது எனலாம்.

இளையோர் முதல் முதியோர் வரை எல்லாப் பருவத தினரிடையேயும் ஓரளவு புகழபெற்றுத் திகழும் இவர் கன்னட நாடக இலக்கியத்துறைக்கு அரிதாகக கிடைத்த நாடக மாமணி என நாற்பதாண்டுகட்கு முன்பே இலக்கி உலகால் மகுடஞ் சூட்டி பாராட்டப் பெற்றவராார். இவரது இலக்கியச் செல்வாக்கால் உருவாகி இவர் வகுத்த பாதையில் இன்று பீடுநடை போட்டு வரும் நாடக எழுத்தாளர்கள் ஏராளம.

இவரும் வேறுசில கன்னட எழுத்தாளர்களைப் போனறு பத்திரிகைத் துறையினின்றும எழுத்துத் துறைக்கு வந்தவராவார். அப்போதைய கன்னடப் பத்திரிகைகள் அனைத்தோடும நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த இவர், தனது முதல் நாடகப் படைப்பை 1930ஆம் ஆண்டில உருவாக்கினார். இது மாமனனர் ஷாஜஹானின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கருவாகக் கொண்டு உருவாக்கப்பட்ட நாடகமாகும் இஃது இவரது

ஆரம்பப் படைப்பாயினும் முழுக்க முழுக்க இவருடைய சரக்கு என்று இதனைக் கூறிவிட முடியாது. திரு டி எல். ராய் அவர்களால் வங்க மொழியில் எழுதப் பட்டு பெரும் புகழோடு விளங்கிய 'நாடகத்தின் கன்னட மொழி தழுவலதாகும் இது. கன்னட மேடைகளில் வெறறி முழுக்கமிட்ட இந் நாடகததின் மூலம் கன்னட ரசிகர்களிடையே இவர் ஓரளவுக்குப் பிரபலமடைந்து விட்டார் எனலாம்.

இவரது இரண்டாவது நாடகமான 'கௌதம புத்தா' இவருடைய பேனா முனையினின்றும் உருவான மூல நாடகமாகும். கன்னட மொழியின் மூல நாடகமான இதன மூலம் இவரது 'புகழ் கர்நாடகமெங்கும் பரவத் தொடங்கியது. இநத இரு நாடகங்களிலும் உரையாடல் களைப் பாத்திரங்களின தன்மைக்கேற்பத்' திறமையாக அமைததுள்ளார். இவரது வருகைக்கு முன்னதாக கர் நாடக நாடக மேடைகளில் ஆதிக்கம் செலுத்தி வந்த நாடகங்கள் பலவும் கடின நடையும் இசையும் கொண் டவைகளாக இருந்தன. பாத்திரங்களின தனமையைச் சித்தரிப்பதை விட எழுதியவர்களின் புலமையை வெளிப் படுத்த முயல்வதாகவே நடையும் இசையும் 'இவைகளில் அமைந்திருந்தன எனலாம். ஆனால, புட்டசாமையா இந் நிலைக்கு முற்றிலும் மாறாக எளிய நடையையும் இனிய இசையையும் கொண்டதாக இந்நாடகங்களை ஆக்கி னார். அவைகளின் தலையாய நோக்கம் நாடகப் பாத் திரங்களின் தன்மையைத் திறம்படச் சித்திரிப்பததே யாகும். இக்காரணங்களால் இவரது ஆரம்ப நாடகப் படைப்புக்கள் படைப்பாளர்களாலும் வெகுவாகப் பாராட்டப்பட்டதில் வியப்பேதுமில்லை. இவரது மூன்றா வது படைப்பான 'குருக்ஷேத்திரா' நாடகம் இவரது புகழைப் பட்டி தொட்டியெல்லாம் பரப்பிய நாடகமாகும் இந்நாடகம் கர்நாடகத் தந்தையெனப் போற்றப்படும் குப்பி வீரன்னா குழுவினரால் சுமார் இருபது வருட

வருட காலம் மைசூர் மாநிலமெங்கும் பட்டி தொட்டி முதல் பெரு நகரங்கள ஈராக நடிக்கப் பெற்றது இதே நாடகம் பின்னர் தெலுங்கு மொழியில் பெயர்க்கப்பட்டு ஆநதிர மாநிலததில வெற்றிகரமாக நடிக்கப்பட்டது. இதனமூலம் இவரது புகழ்மணம் ஆந்திர மாநிலமெங்கும் வீசியதெனலாம். இந்நாடகத்தின் கரு புகழ்பெற்ற மகா பாரதக் கதையினின்றும் எடுக்கப்பட்டது இதன் வெற்றிக்கு மற்றொரு காரணமாகும்

இவரது மற்றொரு படைப்பான 'நசாவதாரம்' நாடகமும், கனனட நாடக மேடைகளில் நெடுங்காலம் வெற்றி முழக்கமிட்ட நாடகமாகும. ஏழாணடு காலம் தொடர்ந்து வெற்றிகரமாக நடைபெற்ற பெருமை இதற் குண்டு.

இவர் தனது ஐம்பதாவது வயதில் தன் எழுதுகோலை நாடகத் துறையினின்றும புதினத் துறையை நோக்கித் திருப்பினார். இவரது முதல் சமூகப் புதினங்களான 'அபி சாரிகா'வும் 'சுதாமயி'யும் 1954ஆம் ஆண்டில் வெளி வந்தன. தொடக்கப் படைப்புக்களே இவருக்குப் பெரும் புகழ் ஈட்டித் தந்தன எனலாம. இந்த வெற்றிப் பெரு மிதத்தால் உந்தப்பட்ட இவர், புதினத் துறையில் தீவிர கவனம்செலுத்தலானார். மூன்றாவதுபுதினப் படைப்பாக 'ரூப லேகா' வெளிவந்தது. இது ஒரு வரலாறறுப் புதின மாகும். புகழ்பெற்ற விஜயநகர சாம்ராச்சியத்தின் மாமன் னரான கிருஷ்ணதேவராயரது அரண்மனையில் காதலுக கும் வீரத்திற்கும் பகைமை எதிர்ப்புணர்ச்சிக்குமிடையே நடைபெற்ற போராட்டத்தை அழகுறச் சித்திரிப்பதாகும். இந் நாடகம், அவரை புகழின உச்சிக்கே கொணடு சென்றுவிட்டதெனலாம். மிக உயர்ந்த வரலாற்றுப் புதினப் படைப்பு என கன்னட மொழிப் புலமையாளர் களாலும், சக எழுத்தாளர்களாலும், திறனாய்வாளர் களாலும் வாசகர்களாலும் புகழ்ந்துரைக்கப்பட்டது

அதன்பின் கன்னட வரலாற்றையும், அதன் தொடர்பாக தென்னக வரலாற்றையும் நுணுகி ஆய்ந்து, அதன் அடிப் படையில் வரலாற்றுப் புதினத் தொடர் நூல்களை உரு வாக்கலானார். ஒன்றிற்கொன்று தொடர்புடைய இவ்வர லாற்றுப் புதினங்கள் பல தொகுதிகளாக வெளிவந்தன. தொடர் நூல்களாயினும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கால கட்டத்தோடு முடிந்தும், புதினத்திற்குரிய தனித்தன்மை யை இழக்காமலும் அமைந்துள்ளது இவரது எழுத்தாற்ற லுக்கு சிறந்ததோர் எடுததுக்காட்டாகும்.

தென்னக வரலாற்றில் சாளுக்கிய மன்னர்களின் காலததை அடித்தளமாகக்கொண்டு, அக்காலத்தில் நடை பெற்ற புகழ் பெற்ற வரலாறறு நிகழச்சிகளை கதைக் கருவாக அமைதது உருவாக்கப்பட்ட புதினங்களில் முதல் படைப்பாக 'உதய ரவி' என்ற வராலாறறுப் புதினம் வெளிவந்தது. பஸவேஸ்வரா, பிஜ்ஜாலா ஆகியோரது காலத்தையும அவர் தம் வீர வாழ்வையும் காவியச் சுவை நனி சொட்டச் சொட்ட சிததிரிக்கிறது இப் புதினம்.

இத் தொடரில் அடுத்தடுத்து வெளிவந்த புதினங்கள் 'ராஜ்ய பாலா', 'கல்யாணேஸ்வர,' 'நாக பந்தா,' 'முகிய்த கனஸு', 'க்ரந்தி கல்யாண' முதலியவைகளாகும் இவறறுள் 'கல்யாணேஸவர,' 1959ஆம் ஆணடில் மைசூர் மாநில அரசின் பரிசைப் பெற்றது. 'க்ரந்தி கல்யாண' புதினம் 1964ஆம் ஆண்டில் மததிய சாகித்திய அக்கா தெமிப் பரிசைப் பெற்றது. இஃது இத்தொடர் புதின வரிசையில் ஆறாவது இறுதியானதுமாகும். பாத்திரங் களை வரலாறறு அடிப்படையில் அழுததமாகச் சித்திரித் திருப்பதற்காகவும் மொழிச் சிறப்பிற்காகவும் இது பரி சளித்துப் பாராட்டப்பட்டது. பிஜ்ஜால மன்னர் பஸ வேஸ்வர மன்னரை அரியணையினின்றும் துரத்திய பின் னர் கல்யாண் நகரத்தில் நூறு நாட்கள் தொடர்நது

நடைபெற்ற சம்பவங்களை விவரிப்பதே 'கல்யாணேஸ்வர' புதினம்.

சாளுக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க காலகட்டமான 1160ஆம் ஆண்டு முதல் 1167ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றுச் சம்பவங்களையெல்லாம் வகுத்துத் தொகுத்து தனித் தனியாகச் சித்திரிப்பவைதான் இப் புதினங்கள் ஆறும்

1928ஆம் ஆண்டிலிருந்து 1962ஆம் ஆண்டுவரை 'பிரஜா வாணி' இதழில் மேற்கூறிய சாளுக்கிய வரலாற்றின் மற்றொரு சூழலைக் கருவாக அமைத்து தொடர் கதையாக வெளியிட்டார் இதுவும் வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது

கன்னட நாடகத் துறைக்கும் புதினத் துறைக்கும் பெருந் தொண்டு புரிந்துள்ள இவர் கன்னடத் திரைப் படத்திற்கென 'சம்பூர்ண ராமாயண'த்தை இலக்கியச் சுவை குன்றாதபடி திரைக்கதையாக அமைத்துக் கொடுத்துப் புகழ்பெற்றார்

கன்னட, ஆங்கில மொழியோடு வங்காள மொழியையும் நன்கு அறிந்துள்ள இவர் தாகூர் நூற்றாண்டு விழாவின் நினைவாக 'சிரகுமார் சபா' எனும் தாகூரின் படைப்பை கன்னடத்தில் பெயர்த்தார். 1962இல் நடைபெற்ற சீனப் படையெடுப்பை கருவாக அமைத்துப் படைக்கப்பட்ட 'சக கட்டித சாம்ராஜ்யா' என்ற நூல் இவரது குறிப்பிடத்தக்க மற்றொரு படைப்பாகும்.

கன்னட இலக்கியத்துக்கு, குறிப்பாக நாடகத் துறைக்கும் வரலாற்றுப் புதினத் துறைக்கும் பெருந்தொண்டாற்றியுள்ள இவர், காலங்கடந்து மத்திய, மாநில இலக்கிய அமைப்புகளால் பரிசளித்துப் பாராட்டப்பட்ட போதிலும், இவரது இலக்கியத் தொண்டு கன்னட இலக்கிய உலகில் காலத்தை வென்று நிற்க வல்லது என்பதில் ஐயமில்லை.

8

# கோவிந்தபை

'ராஷட்ரகவி' எனக் கன்னட இலக்கிய உலகால் அழைக்கப் பெறும் பெருமை பெற்ற திருமஞ்சேஸ்வர கோவிந்தபை கன்னட மொழியில் தலைசிறநத புலமை யாளரும் செஞ்சொற்கவிக் கொண்டலுமாவார். இருப தாம நூற்றாணடின் கன்னட இலக்கிய உலக மறுமலர்ச் சிக்கும் வளமான வளர்ச்சிக்கும் வேகமும் விறுவிறுப்பும் ஊட்டியவர்களில் கோவிந்தபை அவர்களின பங்கும் குறிப் பிடததக்கதாகும்.

கன்னட இலக்கியத்தின் பொற்காலம் எப்போது தொடங்கியது? யாரால் தொடங்கி வைக்கப்பட்டது என பதில் வேண்டுமானால் பலத்த கருத்து வேறுபாடுகள் எழுததாளர்கள், இலக்கியத் திறனாய்வாளர்களுக் கிடையே இருககலாமே தவிர அது 1920 ஆண்டுவாக்கில் தான் தொடங்கியது என்ற இலக்கிய வரலாறறு உண்மை யை யாரும் மறுப்பதற்கில்லை. இந்தக் கால கட்டத்திம தான் தலைசிறந்த இலக்கியவாணர்கள் பலரும் தனித் தனிக் குழுக்களாக அமைந்து கனனட இலககிய வளர்ச்சிக் குப் பெருநதொண்டு புரிந்தார்கள். பி எம் ஸ்ரீ கண்டய்யா மாஸ்தி வேங்கடேச ஐயங்கார், டி வி குணடப்பா போன்றவர்கள் "தாளிரு" எனற பெயரில் கவிக் குழுவாக அமைந்து தொண்டாற்றினர் தத்தாத்ரேய ராமச்சந்திர பேநத்ரேயின் தலைமையில் "கௌர குபபு" எனற இலக் கியக் குழுவும் சுறுசுறுப்பாக இயங்கி அரிய கனனட இலக் கியங்களை எழுதிக் குவித்த அதே காலததில் வேறொரு இலக்கியக் குழுவும் கன்னட இலக்கிய உலகில் தோன்றி பீடுநடை போட்டு அழகு ததும்பும் அற்புதக் கவிதைகளை அரிய படைப்புக்களை உருவாகக முனைந்து உழைத்து வந்தது. அதுதான கோவிந்தபை தலைமையில் இயங்கி

வந்த ''மித்ர மண்டலி'' எனும் அமைப்பு இன்றைய கனனட இலக்கிய மறுமலர்ச்சிக்கு பெருந்தொண்டாற்றிய கவிஞர்கள் எழுத்தாளர்கள் பலர் உருவாகக் காரணமா யமைந்த பாசறையாகும் இவ்வமைப்பு.

''மித்ர மண்டலி'' அமைப்பில் மட்டுமல்லாது கோவிந்தபையின் இலக்கிய வாழ்வுக்கே அடியெடுத்துக் கொடுத்து விரைவு நடைபோட வைத்த பெருமை பஞ்சே மங்கேஷ் ராவ் அவர்களையே சாரும் எனில் அது மிகை யாகாது கோவிந்தபை மங்களூர் கல்லூரியில் மாணவரா யிருந்த காலததில் அவருக்கு கல்லூரி ஆசியராயிருக்கும் பேறு பெற்றவா மங்கேஷ் ராவ், ராவின் தூண்டுதலினாம் கோவிநதபை கனனடக் கவிதைகளை இயற்றத் தொடங் கினார் விரைவிலேயே குருவுக்கு மிஞ்சிய சீடனாக அற் புதக் கவிதைப் படைப்புக்கள பலவற்றை உருவாக்கித தன் ஆசிரியரையே வியப்பிலாழ்த்தினார். இவரிடம் மறைந்திருக்கும் கவித்துவப் பெருக்கைத் தன் ஊக்குவிக் கும் திறத்தால் வெளிக்கொணரச் செய்தார் ராவ் இதன விளைவாக வெளி வந்ததுதான 'கிளி விண்டு'' எனும் முதல் கவிதைத் தொகுப்பு நூல். இந்நூலை வெளியிடப் பெருந்துணை புரிந்தவரும் பஞ்சே மங்கேஷ் ராவ்தான.

மறுமலர்ச்சி எழுத்தாளர்களான பேந்த்ரே, மாஸ்தி கோகக் போன்றவர்களோடு ஒப்பிடும்போது கோவிந்த பையின் படைப்புக்கள் மிகக் குறைவேயெனினும் கருத தாழததிலும் சிந்தனை வளத்திலும் புலமைத் திறத்திலும் அவை என்றும் அழியாமுததிரை கொணட இலக்கியச் செல்வங்கள் என்பதில் ஐயமில்லை.

கவிதா சக்தியும இறையுணர்வும் நிரம்பப் பெற்ற கோவிந்தபை தாம பிறந்த மண்ணிற்கேயுரிய மரபு வழுவா பழக்கவழக்கங்களில கற்பனைகளில் ஆழ்ந்த பிடிப்பும் தொன்று தொட்டு வரும் சமயச் செய்திகளில்

கவர்ச்சியும் கொண்டவராக இருந்தபோதிலும் ஒரு குறிப்பிட்ட வளையத்திற்குள் தன் உணர்வுகளையும் சிந்தனையையும் சிறைப்படுத்திக் கொள்ளும் குறுகிய மனப்போக்கை இவரிடம் காண முடியவில்லை. கால வோட்டத்திற்கேற்ற மாற்றங்களையும் வரவேற்கவோ அவற்றைக் கருவாகக் கொண்டு தம் கவிதை மாலைகளைத் தொடுத்து புத்துருக்கொண்டு விளங்கும் கன்னட இலக்கியக் கன்னிக்குப் புதுப்பொலிவூட்டவோ தவறவில்லை தமது சமயக் கருததுக்களை மதிப்பதுபோலவே பிற சமயக் கருத்துக்களையும் அச்சமயங்களை மக்களிடையே பரப்ர் அத் தலைவர்கள பட்ட அல்லல்களையும் அற்புதமாகப் படம் பிடிததுக் காடடுவதில் மிகச் சிறநது அளங்குகிறார். வெறும் சமயப் போர்வையில் மயங்கி நிற்காது அதன் உயிர்ப்புக் கொள்கைகளிடத்தே மட்டும் தன உள்ளத்தைப் பறி கொடுத்தவர் கோவிந்தபை.

இவரது பாடல்களுள் மிகச் சிறந்ததாகத் திறனாய் வாளர்கள் கருதும் ''கொல்கொதா'' என்ற நூல் ஏசு பெருமானின் வாழ்க்கையை நெஞ்சுருக விளக்குவதாகும். ஏசுநாதரின் அளவிட முடியா மன உறுதி, அவர் அனுபவித்த துன்பங்கள், இடுக்கண ஏற்பட்டபோதெல்லாம அவர் உள்ளததே பொங்கி நின்ற சகிப்புத்தன்மை ஆகிய வற்றையெல்லாம் அழகுறச் சித்தரிப்பதே இக்கவிதைப் படைப்பு.

இதே போன்று கௌதம புத்தரின் வாழ்வில் ஏற்பட்ட ஒரு சிறு சம்பவத்தை மையமாக வைத்து 'வைகாசி'' எனும் பெயரில் கதைப் பாடல் ஒன்றை எழுதியுள்ளார் இந்த இரண்டு பெரியார்களின் வாழ்வை விளக்கும் இந்நூல்களின் மூலமாக மனித ஆத்மா என்பதை சமய உணர்வின் அடித்தளமாகவோ அல்லது ஏதோ ஒரு நினைவாற்றலின மையம் என்றோ மட்டும் கொள்ளாமல் புழுதியிலே புதைந்து கிடக்கும் ஒரு

பேராற்றலாகவும் அதைக் காண்கிறார். இவரது உள்ளம் இயற்கையோடு மனித வாழ்க்கையை ஒப்பிட்டுப் பார்க்கிறது.

எந்த மண்ணில் ஏசுவும் புத்தரும் தோன்றி அறவழி வகுத்துக் காட்டி, சமாதான நல்வாழ்வை வலியுறுத்திச் சென்றார்களோ அந்த மண்ணிலேயே போரும் கொலையும் கொடுந் தாண்டவம் புரிவதைக் கண்டு வருந்துகிறது இவரது கவியுள்ளம். இரண்டாவது உலகப் பெரும் போரைக் கருவாக அமைத்துப் பல பாடல்களை எழுதியுள்ளார் அவற்றுள் மிகச் சிறந்த ஒன்று 'கொள குதை மனவி' (போர் வேண்டுகோள்) என்ற தலைப்பிலான பாடலாகும். போர்ப் பாடல்களிலொன்றில் "மனித சுபாலம் மாறாமல் இருக்கும் வரையில் போர்க்களமே அமைதியின் அன்னை' என்று கூறுகிறார்.

உலகப் போரைப் போன்றே இந்திய விடுதலைப் போராட்டமும் கவிஞரின் கவிதைப் பொருளகளாக அமைந்துள்ளன. எங்கு கொடுமை நடந்தாலும் அது கவிஞரின் உள்ளத்தே கொடுந் தீக்கங்குகளாக உருவெடுக்கின்றன. பாதிக்கப்பட்ட மக்களுக்காக வருந்துகின்றார்; பரிவு காட்டுகின்றார். 1943ஆம் ஆண்டில் வங்கப் பஞ்சம் பற்றிக் கவிஞா தம் பாடலொன்றில் "செழுமையின் திருவருள்—அதனிடை பசியினால் மரணம்; வாழ்வின் மலர்ச்சி-அதனிடை மூச்சுள்ள பிண வாழ்க்கை" எனக் கூறும்போது படிப்போரின் கண்களில் நீர் துளிர்க்கின்றது.

கன்னட இலக்கிய உலகில் இவர் தொடக்கததில் கவிஞராக காலடி எடுத்து வைத்த போதிலும், பிற்காலத்தில் ஆராய்ச்சியுலகே இவரைப் பெரிதும் அரவணைத்துக் கொண்டதெனலாம. இத்துறையில் இவருக்கு ஏற்பட்ட கவர்ச்சி மிக அதிகமாகும இவரது ஆராய்ச்சிக் கருத்துக்கள் கன்னட இலக்கிய வளர்ச்சிக்கு மெருகூட்டுவன என்ப

தில் ஐயமில்லை. ஆயினும் இவர் தனக்கென வரையறுத்த ஆராயச்சிக் கொள்கைகளையோ முறைகளையோ வகுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. கர்நாடகத்தின் பண பாடு, மொழி, பழம்பெரும இலககியங்கள் ஆகியவற்றைப் பற்றி அவ்வப்போது ஆராய்சசிக் கட்டுரைகள் பலவற்றை இலக்கிய அமைப்புகளிலும் கல்வி நிலையங்களிலும் ஆராய்ச்சிப் பேருரைகளையும் அவ்வப்போது நிகழ்த்தி வநதுள்ளார் அச் சொறபொழிவுகள் அனைத்தும நூல வடிவம பெறவில்லையெனினும் முக்கியமான மூனறு சொற்பொழிவுகளை ''மூறு உபனயாசலு'' (மூன்று சொற்பொழிவுகள்) எனற பெயரில் நூல் வடிவில வெளியிட்டுள்ளாா. இந்நூல் ஆராய்ச்சியாளர்களால் பெரிதும் போற்றப்படுகிறது.

கன்னட மொழியனறியில் கொங்கணி, ஆங்கிலம் கிரீக் போன்ற மொழிகளில் ஆழ்ந்த புலமையுள்ள பன மொழியறிஞருமாவாா. இவர் கனனட இலக்கியத்திற்கும் ஆராச்சிக்கும ஆற்றியுள்ள அருந்தொண்டைப் போற்றும் வகையில் 1050ஆம ஆணடில பிரிக்கப்படாத சென்னை அரசாங்கம் இவரை ஆஸ்தானக் கன்னடக் கவிஞராக நியமிததுத் தன நன்றிக கடனைச் செலுத்திச் சிறப்பிததது இவரது நீண்டகால இலக்கியப் பணி கன்னட இலக்கிய வரலாற்றில சிறப்பிடம் பெறும என்பதில் ஐயமில்லை.

# சங்கரபட்ட கடெங்கோட்லு

கன்னட இலக்கிய உலகில் 'கடெங்கோட்லு' என எல்லோராலும் அழைக்கப்படும திரு சங்கரபட்ட கடெங் கோட்லு அரை நூற்றாண்டுக்கு மேலாக கன்னட இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றிய முது பெரும் எழுத்தாளர் ஆவார்.

தென் கனனட மாவட்டத்தைச் சார்ந்த கிராமமொன் றில் 1914ஆம் ஆண்டில் பிறந்த கடெங்கோட்லு பள்ளிப் பருவ நாட்களிலேயே இலக்கிய ஆர்வம் மிகுந்தவராக இருந்தார். இளமையிலேயே இலக்கிய உணர்வும். அன்று நாடெங்கும் கொழுந்து விட்டெரிந்த தேசிய உணர்வும் இவர் உள்ளத்தே போட்டி போட்டுக் கொண்டு பொங்கி நின்றன.

உயர்நிலைப் பள்ளிக் கல்வியை முடித்துக் கொண்டு கல்லூரியில கால் வைக்கும் நேரததில் நாடெங்கும் சூறா வளி வேகத்தில் பரவி வந்த சுதந்திரப் போராட்டத்தில் இவரும் தீவிரமாகப் பங்கேற்க களத்தில் குதிததார் இளமையிலேயே சுதேசி இயக்கத்தில் தீவிரம் காட்டிய இவர் சுதேசிப் பொருள்களை வெறுதமொதுக்கும் போராட்டததில் பெரும் அக்கறை காடடினார்.

அன்றைய வெள்ளையர் கல்வித் திட்டம் இந்தியர் களை அடிமை உணர்வு உள்ளவர்களாக உருவாக்கு கின்றது என்ற கருதது நாட்டுத் தலைவர்களிடையே அழுத்தமாக வேரூன்றியிருந்ததால் தேசியக் கல்விக் கூடங் களை ஆங்காங்கே நிறுவும் முயற்சிகள் தீவிரமாக மேற கொள்ளப்பட்டன தேசிய உணர்வால் உந்தப் பட்ட இளைஞர்கள் வெளளையர் கல்விக் கூடங்களை விடுத்து

சுதேசிக் கல்வி நிலையங்களில் சேர்ந்து தங்கள் கல்வியைத் தொடரலாயினர்

இந்தச் சூழ்நிலையில் கல்லூரிக் கல்வியைத் தொடர வேண்டிய கடடுங்கோட்டு, வெள்ளையர் கல்லூரிகளில் சேர்ந்து அடிமைக் கல்வி பயில மறுத்து, அப்போது தேசியப பலகலைக கழகமாக உருவெடுததிருந்த 'திலக் விதயாலய''த்தில் சேர்நது தன் மேறபடிப்பைபத தொடர்ந் தார் ஆனால அன்றைய சூழநிலையில் போதிய ஆதரவும் பொருளாதார ஒததுழைபபும இலலாத காரணத்தால் தொடக்க விழாக் கண்ட அத தேசியக் கல்வி நிலையம் விரைவிலேயே மூடு விழாவையும கொண்டாடும்படி யாகி விட்டது. இதனால் மிகச் சிறந்த தேசியத் துறையிலும் தன உணர்வை பட்டை தீட்டிய வைரமாக உருமாற்றிக் கொள்ளும் முயற்சியில் தளர்ச்சியடையாது தொடர்ந்து ஈடுபடலானார் கனனட மொழியிலுள்ள பேரிலக்கியங் கள், சமஸ்கிருத இலக்கியப் படைபபுககளின செல்வாக்கு ஆங்காங்கே விரவி நிறபதைக் காண முடிகிறது.

இவர் பதினெட்டாம வயதிலேயே கவிதைகளை இயற்றும் அளவுக்குத தனனை வளர்ததுக் கொணடுவிட்டார். இவர் 1921ஆம் ஆண்டில எழுதி வெளியிட்ட ''ஹோஷ யாதரா' எனும கவிதைத் தொகுப்பு நூல அன்றைய கனனட இலக்கிய உலகில் ஒரு புதிய வரலாறறை உருவாக்கிய கவிதைப் படைப்பாகும்.

கன்னட இலக்கியத் துறையில் புதிய யாப்பு முறை களைக் கையாள்வதிலும புதிய, இலக்கிய நோக்கிலும் உத்தியிலும் சிந்தனைத திறததிலும் வழக்கமான போக்கி னினறும சற்று மாறுபட்ட போக்கில் புதிய புதிய சோதனை முறைகளைக் கையாள்வதிலும் இவர் பஞ்சே கோவிந்தபை போனற இலக்கிய வாணர்களின் வழி நடப்பவராக இருந்தார்.

இவர் அக்காலத்தில் மிகச் சிறந்த இலக்கிய இதழாக கருதப்பட்ட ''உதய பாரதம்'' போன்ற இதழ்களில் தொடர்ந்து தம் கவிதைகளை எழுதி வந்தார். இதழ் வெளியாகும் நாளன்று வாசகர்கள் கடைவாசலில் காத்திருந்து இதழ் வாங்கும் அளவுககு வாசகர்களிடையே பெருஞ் செல்வாக்குப பெறறவையாக இவரது கவிதைகள அமைந்திருந்தன 'வீர மரண'' அல்லது ''விஜய நகர சமாதி' போனற கவிதைகள் தேசிய உணர்வு பொங்கும் கவிதைப் படைப்புக்களாக விளங்குவன. அவர் சிறந்த கவிதைகளைப படைததுக் கொணடே இருந்தாரெனினும் அவரது உன்னதப் படைப்பான ''நலமே'' 1932ஆம் ஆணடில் தான வெளிவந்தது. 'மாதரியெ சிதெ'', ''ஹொனனிய மதுவே'', ''முரளி நாத'' என்ற மூன்று தனிப்பகுதிகள் அடங்கிய பெருந் தொகுப்பாகும் இது. ''மாதரியெ சிதெ'' (மாத்ரியின் சிதை) 'கணட காவ்யம்' என்று கூறப்படும அழகிய நீண்ட கவிதைப் படைப்பாகும் பாணடு மனனருக்கும், மாத்ரியரசிக்குமிடையேயான காதலின துனபியல முடிவைச் சித்தரிக்கும் கவிதைப் படைப்பாகும் இது. ''ஹொனனிய மதுவே'' (ஹொன்னியின திருமணம்) ஒரு அற்புதமான காதல் காவியமாகும் இது. கிராமிய வாழ்க்கையை எதார்த்த அடிபபடையில் அழகுறச் சித்தரிக்கும காதல் காவியம் என்றே இதனைக் கூறவேணடும்

கடெங்கோட்லு கவிதைகளன்னியில் சிறுகதை, புதினம், நாடகம போனற துறைகளிலும் தன் கை வணணத்தைக் காட்டியுள்ளார். ''துடியுவ மக்களு'', 'காஜின பளே' 'சுரியக்கதெ' 'தோடன்ன' ஆகியவை இவரது சிறந்த சிறுகதைகளுள் சிலவாகும். 'தேவதா மனுஷ்ய'' (தெய்வீக மனிதன) என்பது அவரது நாவல்களுள் மிகச் சிறந்த படைப்பாகும் துரோணரும் துருபதனும் சமபந்தப்பட்ட கதையை அடிததளமாகக் கொண்டு படைக்கப்பட்டதாகும 'குருதட்சிணை' எனும் நாடகம்.

இவ்வாறு சுமார் இருபதுக்கு மேற்பட்ட இலக்கியப் படைப்புககளை உருவாககி வெளியிட்டுளளார் கடெங் கோடலு.

நூல் எழுதும் பணியோடு இவரது இலக்கியத் தொணடு நினறுவிடவிலலை. மறக்க முடியாத மற்றொரு டணியையும் இவர் ஆற்றி வந்துள்ளார். அதுதான் இரு பதைநது ஆண்டுகளுக்கு மேலாக 'ராஷ்ட்ரபந்து' எனனும பெயரில் கனனட தேசிய இதழ் ஒன்றை வெற்றி கரமாக நடத்தி வநதுள்ளார். அதுதான் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக 'ராஷ்ட்ரபந்து' என்னும் பெயரில் கன்னட தேசிய இதழ் ஒன்றை வெற்றிகரமாக நடத்தி வந்துள்ளார் என்ற செயதி. பினனர் இவர் 'ராஷ்ட்ர மாதா'' எனும் பெயரில மற்றொரு தேசிய இதழையும் நடத்தி இலககிய அடிப்படையில தேசிய உணர்வை தொடர்ந்து மககளிடையே வளர்ந்து வந்துள்ளார். இதில் இவர் ''குதர்க்க வாச்சாஸ்தி'' என்ற புனை பெயரில் எழுதி வநத நகைச்சுவையும் நையாண்டியும் கலந்த எள்ளல் வகையில் அமைந்த விமர்சனக் கட்டுரைகள் வாசகர்களிடையே மிகப் புகழ் பெறறவைகளாகும்.

எழுத்துத் தொழிலில் ஈடுபட்டிருந்த போதிலும் கடெங்கோட்லு தனது வாழ்க்கைத் தொழிலாகத் தேர்ந் தெடுத்தது கல்வி புகட்டும் ஆசிரியத தொழிலேயாகும். மங்களாபுரம் செயின்ட் ஆக்னஸ் கல்லூரியில கன்னடப் பேராசிரியராக நீண்ட காலம் பணியாற்றிய இவர், 1964ஆம் ஆணடில் ஆசிரியப் பணியினின்றும் ஓய்வு பெற் றார். கடந்த அரை நூற்றாணடாக கனனட இலக்கியத் துறைக்குப் பெருந் தொண்டாற்றியுள்ள இவரது பணி கன்னட இலக்கிய வரலாறறில் என்றெனறும் போற்றப் படும் என்பதில் ஐயமில்லை.

# மத்தூர் கிருஷ்ணமூர்த்தி

பல்வேறு மொழி பேசும் மக்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ள முயல்வதன்மூலமே அவர்களிடை யே நிலையான ஒற்றுமை உணர்வை உருவாக்க முடியும் என்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும். இதற்கு இலக்கியத் துறையைவிடச் சிறந்த சக்திமிகு சாதனம் வேறு என்ன இருகக முடியும்? பிறமொழி இலக் கியப் படைப்புக்களைத் தங்கள் மொழி இலக்கியச் செல் வங்களைப் பிற மொழியிலும் ஈந்து இலக்கிய எல்லை களை விரிவடையச் செயவதன் வாயிலாகவே மக்களின் மன உணர்வுகளிடையே நெருக்கத்தை யுண்டாக்க முடி யும். இததகைய இலக்கியத் தொண்டர்களே உண்மை யான ஒருமைப்பாட்டுணர்வை உருவாக்கும் சிற்பிகள, மொழிபெயர்ப்புத் துறையின் பெருந்துணை கொண்டு இத்தகு அருஞ் சாதனையை உருவாக்கி வரும் இலக்கியத் தூதுவர்களின எண்ணிக்கை இன்று எல்லா இந்திய மொழிகளிலுமே பெருமளவில் வளர்ந்து வருவது மிகவும் வரவேற்கத் தக்கதாகும். அத்தகைய அருந்தொண்டை தென்னக மொழிகளிடையே ஆற்றி, அவற்றினிடையே இணையற்ற இணைப்புப் பாலமாக விளங்கிவரும தென் னக எழுத்தாளர்களின தொண்டு குறித்து ஆயவது பயன் தரத்தக்கது மட்டுமனறு; அவர்தம் அரிய தொண்டுக்கு நாம செலுத்தும் நன்றிக் கடனுமாகும்.

தென்மொழிகளிலேயே தமிழுக்கு அடுத்தபடியாக நீண்டகால இலக்கிய வரலாற்றையுடைய மொழி கன்னட மாகும். தமிழுக்கும் கனனடத்திற்குமிடையே பலமான அடிப்படை ஒற்றுமை இருப்பினும், இடைக்காலத்தில் ஏற்பட்ட விரிசல் அதிகரிக்கா வணணம். இரு மொழி இலக்கியங்களுக்கிடையே அதன்மூலம் அம்மொழி பேசும்

சூழலை உருவாக்க உழைத்து வரலாற்றில் இடம் பெற்றோர் எத்தனையோ பேர். அந்தப் பாரம்பரிய வழியில் தமிழ், கன்னட இலக்கியங்களுக்கிடையே பாலமாக அமைந்து இடையறாது உழைத்த சிலருள் குறிப்பிடத்தக்கவர் திரு மத்தூர் கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

நீண்டகாலமாகவே திரு மத்தூராரின் முன்னோர்களுக்கும் தமிழகத்திற்கும் மிக நெருங்கிய உறவு இருந்து வநதுள்ளது. இன்றுபகூட இவரது முன்னோர் வழி வந்தவர்கள் திருநெல்வேலி சீமையில் வாழ்நது கொணடிருப்பதே இந்த உறவுக்குச் சான்று இனறும இக்குடும்பங்களின் பேச்சுமொழி தமிழும் கனனடமுமேயாகும்

இளமை தொட்டே இயல்பாக இவரிடம் குடிகொண்டிருந்த தமிழார்வம், இவர் சென்னையிலுள்ள கிருத்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் கொழுந்து விட்டெரியத் தொடங்கியதெனலாம் பள்ளியில் இரணடாவது பாடமொழியாகக் கன்னடத்தைப் படித்துவந்த போதிலும, கையில கிடைக்கும் தமிழ் ஏடுகளையும கதைகளையும இவர் படிககத தவறுவதேயிலலை. இத்தகைய தமிழார்வததிறகுச செயல் வடிவம கொடுத்தது அப்போது பேராசிரியர் கல்கி அவர்கள் 'கல்கி' இதழில் எழுதி வநத 'அலை ஓசை' தொடர் கதையே யாகும்.

இத்தொடர்கதைக்கென கலகி அவர்கள் தேர்ந்தெடுத்திருந்த கருப்பொருளும கதைச் சொலலும் உத்தியும் நடையும் இவரை வெகுவாகக் கவர்நதது. தொடர்கதையாக வெளிவந்து கொண்டிருந்த அந்த அமரத்துவப் படைப்பை கன்னட மக்களுக்குப் பெயர்த்துக் கொடுத்து இன்புறச் செய்ய இவா உள்ளம் துடித்தது. விளைவு? அமரர் கல்கியின் அனுமதியோடும் ஆசியோடும் கல்கி

இதழில் தொடர்கதையாக 'அலை ஓசை' வெளிவந்து கொண்டிருந்தபோதே அதனைக் கன்னடத்தில் மொழி பெயர்த்து, புகழ்பெற்ற கன்னட இதழான 'சம்யுக்த கர்னாடகா'வுக்கு அனுப்பினார். சிறந்த கதையம்சத் தோடு அழகான கன்னட மொழிப் பெயர்ப்பையும் கண்ட அதன் ஆசிரியரும் புகழ்பெற்ற கன்னட எழுத்தாளருமான திரு ஆர் ஆர் திவாகர் இவரிடம மறைந்து கிடக்கும் இலக்கியத் திறமைகளைக் கண்டுணர்ந்து இவரை 'சம் யுக்த கர்னாடகா' இதழுக்குப் பணியாற்ற வருமாறு அழைப்பு விடுத்தார். உரிய இடத்திலிருந்து வந்த அழைப்பை உதறித் தள்ளாது ஏற்று அப்பணியைத் தன் எதிர்கால இலக்கியப் பணிக்குரிய ஆரம்ப நிலைக்கள னாகக் கொணடு தன் இலக்கியத் தொணடைத் தொடங் கினார். பதினொரு ஆணடுகள் அவ்விதழின் ஆசிரியராக அமர்ந்து அருந்தொணடாற்றினார்.

தமிழில் வெளிவநத 'அலை ஓசை'யின் கன்னட மொழி பெயர்ப்பு கன்னட மொழி வாசகாகளிடையே இவருக்குத் தனிச் செல்வாக்கை உருவாககித் தந்தது. இவரது அருமை யான மொழிபெயர்ப்பு,அஃது கன்னடத்தில் எழுதப்பட்ட மூலக்கதை போன்ற உணர்வையே பலரிடததும் உண் டாக்கியதெனலாம். இல்வெற்றிக்கு முழுமுதற் காரணம், கர்னாடக மக்களுக்கும தமிழ் மக்களுககும் இடையிலான வாழக்கை அமைப்புமுறை பழக்க வழக்கங்கள், எண்ணப் போக்கு ஆகியவற்றிற்கிடையேயுள்ள நெருங்கிய ஒற்றுமையோடு, இரு மொழிகளிலும் இவருக்கிருந்த நல்ல திறமையுமாகும்.

'அலை ஓசை, மொழிபெயர்ப்பு வெற்றியைத் தொடர்ந்து இவர் புகழ்பெற்ற தமிழ் எழுத்தாளர்களின் அரிய படைப்புக்களைக் கன்னடத்தில பெயர்த்துத் தர ஆர்வத்தோடு முனைந்தார். இதுவரை பதினொரு தமிழ் மூல நூல்களை கன்னட வாசகர்களுக்குத் தநதுளார்.

அவற்றுள், அகிலனின் 'பாவை விளக்கு' அநுத்தமாவின் 'ஒரே ஒரு வார்ததை' 'கௌசலயா நாராயணனின் 'டாக்டர் அகிலா' எஸ். ரங்கநாயகி எழுதிய 'வாழ்க்கைப் பாதை' 'பானு திருமணம்' பாலகிருஷ்ண நாயுடுவின் தனாயகன் கோட்டை முதல் தமிழ்ப் புதின ஆசிரியரான வேதநாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்' அமரகவி பாரதியாரின் 'சந்திரிகையின் கதை' முதலிய வையாகும். ஆங்கிலத்திலிருநதும சில நூல்களை இவர் கனனடததில் மொழிபெயர்த்துள்ளார, அவற்றுள் மறைந்த குடியரத் தலைவா ஜாகீர் உசேன், டாக்டர் வி கே.ஆர்.வி. ராவ் போனறோர் நூல்கள் குறிப்பிடத் தக்கதாகும. மைசூர் அரசு இப் புதினப் படைப பிற்குப் பரிசளிததுப் பாராட்டியுள்ளதே இநநூலின சிறப்புக்குக் கட்டியங் கூறுவதாகும்.

இலக்கியத்தோடு இசையிலும் இவருக்கு ஆர்வமும் திறமையும் உண்டு. இவர் தொகுத்த தியாகராஜ கீர்த தனைகளும் புரந்தரதாஸர் கீாததனைகளும் இசை வாணர்களுக்குக கிடைதத அரிய பரிசுகளாகும. இவர் இசைக கலையைப் பறறிய நூலொன்றும் எழுதியுள்ளார்.

இலக்கிய ஆர்வமும் இசைப் புலமையுமு இவரை தலை சிறந்த சமயச் சொறபொழிவாளராக, கதாகாலட்சேபம் செய்வதில் வல்லவராக மாற்றியதில் வியப்பிலலை

'சம்யுக்த கர்னாடகா' இதழாசிரியர் பதவியைத் துறந்த பின்னர் ஒனறரை ஆணடுக்காலம் அனைத்திந்திய வானொலியில் பணியாற்றிய இவர், பாரதீய வித்யா பவனத்தின பதிவாளரும் ஆவார் எத்துறையில் இவர் பணியாற்றி எந்தபோதிலும் கிடைக்கும் ஓய்வு நேரததை இலக்கியப் பணியிலும் இசைத் தொண்டிலும தவறாது செலவழிக்கும் தகைமையாளர். நாவனமை மிக்க இவரது சொற்பொழிவுகள் கன்னட மக்களிடையே இவருக்கு மிகுந்த செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளன இவரது மேடைப் பேச்சு கன்னடமாக இருப்பினும் அப்பேச்சிடை

யே கம்பரது பாடற் சிறப்புக்களையும் வள்ளுவப் பெரு மானின் வாக்கமுதையும் பாரதியாரின சிந்தனைத் தெளி வை விளக்கும் தமிழ்ப் பாடல்களையும் மேற்கோளாகக் காட்டி விளக்கத தவறுவதேயில்லை கனனடமும் தமிழும் இரண்டறக் கலந்துவெளிவரும இவரது சொற்பொழிவை தங்கு தடையின்றி கன்னடரும தமிழரும் ஒருசேர ரசிதது மகிழ்கினறனர் இதன வாயிலாக இவர் கர்னாடகம் வாழ் தமிழ் மக்களிடையேயும் நன்கு அறிமுகமானவராகத் திகழ்கிறார்.

மைசூரிலுள்ள 'ஷிமோகா' மாவட்டத்திலுள்ள 'மத் தூர்' எனும் சிற்றூரைச் சேர்ந்த இவர், ஆரம்ப காலத் தில் தான் ஊர்ப் பெயரை புனைபெயராகப் பயன்படுதத தொடங்க அது நாளடைவில் இவரது இயற் பெயரோடு ஒனறிக் கலந்து விட்டது கன்னட இலக்கிய உலகைச் சார்ந்தோர் செல்லமாக இவரை :மத்தூர்' என்ற பெய ராலேயே அழைத்து மகிழ்கின்றனர்.

இவர் தமிழுக்கும் கன்னடத்திற்கும் மட்டும் இணைப்புப் பாலமாக அமையாது பழமை உணர்வுக் கும் புதுமைப் போக்குக்கும் இடையேயும் இணைப்புப் பாலமாக விளங்குகிறார் எனலாம்.

இவர் இதுவரை தமிழ் இலக்கியப் படைப்புக்களைக் கன்னடத்தில் பெயர்த்திருக்கிறாரே தவிர, கன்னட இலக் கியங்களைத் தமிழுக்குப் பெயர்க்கும் தொணடை தொடங்கவில்லை எனலாம் எதிர்காலத்தில் அத்தொண்டி லும் அவர் ஈடுபட்டு ஒருவழிப் பாதையை இருவழிப் பாதையாக்கி தமிழ், கனனட மொழி பேசும மக்களிடை யே என்றென்றும நீங்காத நெருக்கத்தின் நிரந்தர நினைவு சின்னமாக இவரது பணி அமைய வேண்டும் எனபதே இலக்கிய உலகத்தின் பேரவா.

# விசுவநாத சத்தியநாராயணா

தெலுங்கு இலக்கிய வானில் ஒளிமிக்கப் பெருஞ்சுடராகத் திகழும் விசுவநாத சத்தியநாராயணா புதினம் சிறுகதை, நாடகம் கவிதை, கட்டுரை, ஆராய்ச்சி, திறனாய்வு ஆகிய இலக்கிய வடிவங்கள் எத்தனையுண்டோ அத்தனையிலும் தமது தனி முத்திரையைப் பதித்துள்ள இலக்கிய மேரு ஆவார்.

தம்மிடம் இயல்பாகப் படிந்துள்ள இலக்கியப் பேராற்றலில் பெரும நம்பிக்கை கொண்ட விசுவநாதப் நல்ல நெடிய தோற்றமும் அறிவார்ந்த கூரிய பார்வையும் பார்ப்போரை எளிதில் கவர்ந்திழுக்கும் கம்பீரமும் கொண்டவர் தம் படைப்பாற்றல திறனால் ஆந்திர மக்களின உள்ளத்தில் மிக உயர்ந்த இடத்தைப் பெறும் பெரும பேறு பெற்றவர்

1895ஆம் ஆண்டு கிருஷ்ண மாவட்டத்தில் உள்ள நந்தமேரு எனும் ஊரில் வைதீக அந்தணர் குலத்தில் பிறந்த விசுவநாதா சென்னைப் பல்கலைக் கழகத்தில் பயின்று தெலுங்கிலும சமஸ்கிருதத்திலும எம் ஏ பட்டம் பெற்றவர் இளமையிலேயே இலக்கிய உலகில் அடியெடுத்து வைத்து எழுத்தாளராகி விட்ட விசுவநாதா வேறு எந்தத் தெலுங்கு எழுத்தாளரையும்விட மிக அதிகமான இலக்கியப் படைப்புக்களையும் அதன் மூலம் பெரும் புகழையும் பொருளையும் திரட்டியுள்ள இலக்கியச் செல்வராவார்

இடதுசாரிப் போக்குக் கெதிரிடையான சம்பிரதாயப் போக்கில் உருவாகும் இவரது இலக்கியப் படைப்புக்கள் வழிவழி இலக்கிய வடிவம், கற்பனை வளமும் சிந்தனைத்

தெளிவும் பழங்காலத்திய உயர்ந்த இலக்கிய நடையும் கொண்டு திகழ்கின்றன

பல்வேறு இலக்கியப் பிரிவுகளிலும் தனக்கென ஒரு தனித்துவம் கொண்டு திகழும் இவர் இன்றைய தெலுங்கு புதின இலக்கியத் துறையில் குறிப்பிடத்தக்கத் தனிச் சிறப்புடைய படைப்பாளராக விளங்குகிறார்

இதுவரை சுமார் முப்பது புதினங்களுக்குமேல் எழுதியுள்ளார். மறைந்து வரும் சமுதாயத்தை வருங்கால சந்ததிகளுக்குத் திறம்பட விண்டுரைக்கும் போக்கை இவரது புதினங்களில பரக்கக் காணலாம் சமூகத்தின் பல்வேறு படிகளில் வாழும் மக்களின் வாழ்க்கைப் போக்கு, சிந்தனை, . பழக்கவழக்கங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றைத் திறம்படக் கதைவழி விளக்கிச் செல்லுவது இவருக்குள்ள தனிச் சிறப்பாகும். இவ்வகையில் அமைந்துள்ள புதினங்களில் தலையாயதாகக் கருதப்படுவது 'வேயி படகலு' (ஆயிரம் நாகப் படங்கள்) என்ற புதினமாகும். ஆந்திர நாட்டில் இரண்டு, மூன்று தலைமுறைகளாக சமுதாயத் துறையிலும் பண்பாட்டுத் துறையிலும் ஏற்பட்ட மாறுதல்களை அழகுறச் சித்தரிக்கும் சிறப்புமிகு புதினமாகும் இது. 'செலியலிகட்ட' (சகோதரி ஆணை) 'தர்ம சக்ரமு' (தர்ம சக்கரம்) மதுரையைப் பின்புலமாகக் கொண்டு படைக்கப்பட்ட 'ஏக வீர' 'பத்தன்ன சேனாணி' (சேனாதிபதி பத்தன்ன) 'மா பாபு' (என் பாபு) முதலிய புதினங்களில் பலவும் பல பதிப்புக்களாக வெளிவந்துள்ளன.

இவரது புதினங்கள் காணும் மற்றொரு குறிப்பிடத்தக்க அம்சம் இவருக்குள்ள பழமைப் பற்றாகும் எந்த அடிப்படையில் கதையை அமைத்தாலும் அதில் நம் நாட்டின் பழம்பெரும்' நாகரிகத்தின் உயர்வையும் மேலை

9

நாட்டு வாழ்க்கை முறையைப் பின்பற்ற முயல்வோரை யும கணடித்து இந்து தர்மத்தின் உயர்வை நிலைநாட்ட முயலும் போக்கையும் காணலாம்.

மேற்கத்திய வாழ்க்கை முறையை மட்டுமல்ல இலக் கியப் போககையுமகூட இவா அப்பபடியே பின்பற்ற விரும்புவதில்லை இதனால் இவரது கதை இலக்கியங்கள் மேனாட்டு கதை இலக்கிய அமைப்பு முறைகளினின்றும் சற்று வேறுபட்டே உள்ளன

எனவே, இவரது புதினங்களும் சிறுகதைகளும் இவருக்கேபுரிய தனித்துவப் போககுடையனவாக விளஙகு வதில் வியப்பேதும் இல்லை இவர் நூற்றுக்கணக்கான சிறு கதைகளை எழுதியுள்ளார். இவரது சிறுகதை இடம் பெறாத 'சிறுகதைத் தொகுப்பு' நூல்களே இல்லையென லாம்.

கவிதை இலக்கியத் துறையில் பழம் பெரும் கவி மன்னர்களாகத் திகழும் நன்னய்ய, திக்கன்ன போன் றோர்க்கு இணையாக இக்காலத் தெலுங்குக் கவிதை யுலகம் போற்றும் விசுவநாதா ஆந்திர மக்களால் கவி சாம்ராட்' என்ற சிறப்புப் பெயரால் அழைத்துப் போற் றப்படுகின்றார். இவர் தமது கவிதைப் படைப்புக்களில் பழங்கால இலக்கிய நடையையும் உத்தியையும் கை யாண்ட போதிலும் இக்காலத் தெலுங்கு மக்களின பேச்சு மொழி மரபையும் திறமபடக் கையாண்டு கவிதை புனைந் துள்ளார்.

கற்பனை வளமிக்கக் கவிதைகளும், ஆழ்ந்த சிநதனை களைத் தாங்கி வெளிவரும் செய்யுட்களும் பாவமிக்க இசைப்பாடல்களும் எளிய நடையில் உணர்ச்சிச் சித்திரங் களாக அமைந்து படிப்போரைக் களிப்பிக்கின்றன.

'கின்னர சானி பாடலு' (கின்னர மாதின் பாடல்கள்) போன்ற கவிதைப் படைப்புக்கள் சந்த அழகுடன் கூடிய இசைப் பாடல்களாக அமைந்துள்ளன, 'கோகிலம்மா பெண்ட்லி' (குயிலம்மையின திருமணம்) போன்ற கவிதைப் படைபபுக்கள் மூலம் இயற்கையினூடே காணும் பேரன்புத் திறத்தையும் காதல் உணர்வுகளையும் திறம் பட வெளிப்படுத்தியுள்ளார் படிப்போரை எளிதில் தன் வயப்படுத்திக் கொள்ளும் கீத சந்த அமைப்புக் கொண்ட கவிதைகள் புலவர்களை மட்டுமின்றிப் பாமர மக்களை யும் கவர்ந்ததில் வியப்பில்லைதான் ஆயர்குலச் செல்வ னான கண்ணபிரான கோபியர்களோடு கொண்டிருந்த லீலா, விநோதங்களை அடிததளமாகக் கொணடு பின்னப் பட்ட 'சிருங்கார வீதி' (சிருங்காரப் பாடல்கள்) அழ குணர்வூட்டும் கவிதை மட்டுமின்றி பக்தியுணர்ச்சியையும ஊட்டவல்ல கவிதைப் படைப்பாகும 'சசி தூதம்' (சந்திரன தூது) என்ற தூதுக் கவிதையும 'தெலுகு ரிது வுலு' (தெலுங்கு நாட்டுப பருவங்கள்) என்ற கவிதை நூலும் இவரது சிறந்த படைப்புகளாகும்.

ஆரம்ப காலததில இவரை புகழேணியின் உச்சிக்கு இட்டுச் சென்ற அமரத்துவக் கவிதைப் படைப்புக்கள் 'ஆநதிர ப்ரசஸ்தி' (ஆந்திராவின் புகழ்) 'ஆந்திர பௌ ரஷமு' (ஆநதிராவின் வீரம்) என்ற கவிதைத் தொகுப்பு நூல்களாகும். ஆந்திர நாட்டின் பெருமையையும் ஆந்திர வீரர்களின் புகழையும் பற்றிய கவிதைகளாகும் இவை.

கவிதையுலகில் காலத்தால் அழிக்க முடியாத அமரத் துவப் படைப்பாக இவர் உருவாக்கியுள்ள 'ராமாயண கல்ப வ்ருகக்ஷமு' (ராமாயண கற்பக மரம்) என்ற படைப்ப ராமாயணக் கதையைப் பின்னணியாகக் கொணடு இயற்றப்பட்ட காவியமாகும்.

இவர் கவிதைத் துறையிலும் புதினத் துறையிலும் ஆற்றிய அளவு நாடக இலக்கிய வளர்ச்சிக்கு உழைக்க

வில்லையெனினும் 'நர்த்தன சாலா' (நாட்டிய அரங்கு) 'வேன ராஜு' போன்ற நாடகங்கள் இவரது நாடக ஆற்றலுக்குச் சான்றாகும்.

இன்றைய தெலுங்கு இலக்கியத் திறாய்வாளர்களில் முன்னோடி எனக் கருதப்பட்ட விசுவநாதா, நன்னய்ய, காளிதாசா, கிருஷ்ண தேவராயா போன்ற பெருங் கவிஞர்களின் கவிதைப் படைப்புக்களைத் திறம்பட ஆராய்ந்து கட்டுரைகளாக வெளியிட்டுள்ளார். இவ் வாராய்ச்சிக் கட்டுரைகள் இலக்கிய அறிஞர்களால் பெரிதும் போற்றப்படுகின்றன

பல்வேறு இலக்கியத் துறைகளில் தனக்கெனத் தனி யிடம் கண்டுள்ள விசுவநாதா இதுவரை நூற்றுக்கு மேற் பட்ட படைப்புக்களை உருவாக்கியுள்ளார். இவரது படைப்புக்களில் பல இந்திய மொழிகளில் குறிப்பாகத் தமிழ், கன்னட, இந்தி, வங்கமொழிகளில் பெயர்க்கப் பட்டுள்ளன. இவரது 'வேயி படகலு' (ஆயிரம் நாகப் படங்கள்) என்ற புதினம் டாக்டர் சி ஆர். சர்மாவினால் சிறப்பாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப் பட்டுள்ளது

இத்தனை சிறப்புகளுக்கு உரியவராக இருந்தும் இவ ரிடம் சில குறைகளும் இருக்கவே செய்தன. இவரது இலக் கியப் படைப்புகளில் அளவுக்கதிகமாக சமஸ்கிருதச் சொற் றொடர்கள் இடம் பெறுவதால் பாமர மக்கள் அதனை முழுவதுமாக சுவைக்க இயலுவதில்லை. மேலும் மாறி வரும் கால ஓட்டத்திற்கெதிராக பழம் பெருமை பேசுவதி லும் புதுமையைப் போற்ற மறுக்கும் பண்பினாலும் சமூகப் பிரச்னைகளை அலசி ஆராய முற்படாததாலும் இவர் பிற்போக்காளராகவே இளம் தலைமுறையினரால் கருதப்பட்டு வந்தார். எனினும் இவருக்குள்ள இலக்கியப் பேராற்றலை எல்லோரும் ஒருமுகமாக ஒப்புக் கொண்டு போற்றுகின்றனர்.

விஜயவாடாக் கல்லூரியில் தெலுங்கு மொழிப் பேராசிரியராகவும், கரீம் நகர் அரசினர் கல்லூரி முதல்வ ராகவும் பணியாற்றி ஓய்வுபெற்ற விசுவநாதா இறுதி வரை தம் முழு நேரத்தையும் இலக்கியத் தொண்டிற்கே ஒதுக்கி வந்தார்.

# ஸ்ரீ. ஸ்ரீ.

ஸ்ரீ. ஸ்ரீ என்ற இரண்டு எழுத்துக்களுள் மறைந்து கொண்டிருக்கும ஸ்ரீரங்கம் ஸ்ரீனிவாசராவ் இளைறைய தெலுங்குப் புத்திலக்கியக் கவிஞர்களின வழிகாட்டியாகத் திகழும் புரட்சிக் கவிஞராவார் இனிய பண்பும் எளிமைத் தோறறமுமம கொண்ட இக் கவிஞரின் உள்ளமோ வெடிகதும் எரிமலையும கொந்தளிக்கும் புயலும குடியிருக் கும் புரட்சிககனலாக உள்ளது

ஆழ்ந்த சிந்தனையும் கற்பனை வளமும் கூர்த்த மதி யும் கொண்ட அவர் சமுதாயக் கோணல் நிலைகளைச் சாடுவதில் புரட்சிக்கவி பாரதியாராக—பாரதிதாசனாக வுமே திகழகிறார்.

வானத்தையே அண்ணாந்து பார்த்து, கவைக்குதவாத கற்பனைகளுககுக் கவிதை வடிவம் தந்து, கவிதைப் பணி யாறறி வந்த தெலுங்குக் கவிஞருலகின் கவனத்தைப் பிரத்தியட்ச உலகை நோக்கித் திருப்பிய பெருமை புதுமைக கவிஞா ஸ்ரீ. ஸ்ரீ. அவர்களையே சாரும்.

உப்பரிகை வாசிகளின் உல்லாச வாழ்வைக் கருப் பொருளாகக் கொண்டு கவிதை புனைந்து வநத கவிஞர் களின் மத்தியில் குருதியை வியர்வையாகக் கொட்டி உழைக்கும் உழவர்களையும் பிற பாட்டாளி மக்களையும கருவாகக் கொண்டு கவிதை புனைந்து அவர்களின் உரிமைக்கும் பெருமைக்கும் முரசு கொட்டிய புரட்சிக் கவிஞர் ஸ்ரீ ஸ்ரீ. தாஜ் மகாலைப் புகழ்ந்து பாடுவதில் பொருளிலலை என்று கூறும் இக்கவிஞர், அரச ஆணைக்கு அடிபணிந்து அதனைக் கட்டி முடிக்கப் பனனெடுங்காலம் கட்டாயப் பணியாற்றி உழைதத உழைப்பாளிகளையே

எண்ணிப் பார்க்க வேண்டும் என்கிறார். பயனற்ற பழமைப் போக்குகளை கைவிடத் துடிக்கும் கவிஞர், இலக்கிய உலகின வீண சம்பிரதாய கவிதை அமைப்பு களையும் வழி வழியாக வந்த கீத சந்த முறைகளையும் எதுகை மோனை போன்ற இலக்கணக் கட்டுக்கோப்பு களையும் மாற்றியமைக்கவோ உதறித் தள்ளவோ தயக்கம் காட்டியதில்லை.

'முற்போக்கு' என்ற போர்வையைப் போர்த்திக கொண்டு வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் பழமைக்கு வால் பிடிக்கும் பிற கவிஞர்களைப் போலன்றி எணணத திலும் எழுத்திலும் இடையறாது முற்போக்கு உணர்ச்சி யை ஊட்டுவதன்மூலம் ஆநதிர மக்களின் உள்ளததில் நிரந்தர இடம்பெற்றிருக்கும் மக்கள் கவிஞராவார்

இன்றைய தெலுங்குக் கவிதையுலகின் முற்போக்கு அணியின் வழிகாட்டியாகத் திகழும் ஸ்ரீ.ஸ்ரீ. 1910ஆம் ஆண்டு விசாகப்பட்டினத்தில் பிறந்து, விசாகையிலும், பின்னர் சென்னை கிருத்துவக் கல்லூரியிலும் பயின்று பி.ஏ. பட்டம் பெற்றவர்.

எட்டு வயதிலேயே கவிதை புனையத் தொடங்கி விட்ட அவர் தம் பதினைந்தாம் வயதில் 'பரிணய ரஹஸ் யாலு' (காதல் இரகசியங்கள்) என்ற பெயரில் துப்பறியும் புதினமொன்றை எழுதினார். ஆயினும் இயற்கையிலேயே கவித்துவ உள்ளம் படைத்த அவர் பின்னர் தம் முழுக் கவனத்தையும் கவிலை இயற்றுவதிலேயே செலுத்தினார். அக்காலத்தில பெரும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்த கதைப்பாடல் அமைப்பில் பல கவிதைகளைத் தொகுத்து 1928இல் 'பிரபல' (தோற்றம்) என்ற பெயரில் வெளியிட் டார். அக்காலப் போக்குக்கேற்ப இக்கவிதைகள் அமைந் திருந்தன. ஆனால், 1935ஆம ஆண்டிற்குப் பின்னர்தான் அவர் தனககென தனியானதொரு பாணியை வகுத்துக்

கொண்டு புதுமைக் கவிதைகளைப் படைக்கலானார். 1950இல் அவரது சிறநத கவிதைப் படைப்பான 'மகா பிரஸ்தான' (சிறந்த புறப்பாடு) வெளியிடப்பட்டது. இந் நூல் தெலுங்குக் கவிதையுலகில் ஒரு பெரும் மாற்றத்துக்கு வழி வகுததது. உணர்ச்சி கொப்பளிக்கும் ஆற்றல்மிக்க அக்கவிதைத் தொகுப்புமூலம் இளைஞர்களுக்கு ஒரு இலட்சிய உலகைக் காட்டியதோடு அதை நோக்கி நம்பிக் கையோடு முன்னேற இளைஞர்களை ஊக்கித் தூண்டி னார். தொடர்ந்து முற்போக்குப் புதுமைக் கவிதைகளை இயற்றி தெலுங்குக் கவிதையின போக்கையும் கருத்தை யும் அடியோடு மாற்றியமைத்து விட்டார். முற்போக்கு உணர்வு படைத்த எழுத்தாளாகளும் இளங்கவிஞர்களும இவரது தலைமையின்கீழ் அணி திரண்டனர்.

இவரது கவிதைகள் மக்களிடையே பெரும் புகழ் பெற்றது. இவரது கவிதையாற்றலுக்குக் கட்டியங்கூறும் கவிதைப் படைப்புகள் 'தேச சரித்ராலு' (நாடுகளின் வரலாறு) 'மானவுடு' (மனிதன்) முதலியனவாகும்.

இவர் ஆங்கிலம், ஃபிரெஞ்சு ஆகிய இரு மொழிகளின் தற்காலக் கவிதைகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டி ருந்ததால் இவரது கவ்தைகளில் அவ்விரு மொழிக கவிதைகளின் செலவாக்கு மிகுதியும் பிரதிபலிக்கக காண லாம். சான்றாக இம்ப்ரஷனிசம், ஹியூமானிசம், சர்ரிய லிசம் போன்ற பல புது முறைகளை அவர்தம் கவிதைகளி னூடே காணலாம்.

இவர் தம் கவிதைகளில் பலவற்றை ஆங்கிலத்தில் தாமே மொழிபெயர்த்து 'த்ரி சியர்ஸ் டு மேன' (Three cheers to Man) என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். இதன் வாயிலாக அவர்தம் புகழ் ஆந்திராவுக்கு அப்பாலும் பரவியுள்ளது. மற்றும் அவரது சிறந்த கவிதைகளில் பல

ரஷியன் போன்ற ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

அவர் தம் வாழ்க்கையில் எண்ணற்ற இடர்ப்பாடு களைச் சந்தித்தவர். ஆசிரியராகவும் பத்திரிகையாளராக வும் சிலகாலம் பணியாற்றிய அவர் சிறிதுகாலம் அனைத் திந்திய வானொலியிலும் பணியாற்றினார். ஆனால் அவரது புரட்சிப் போக்கு எங்குமே அவரை நிரந்தரமாக தங்கவிடவில்லை. சக்திமிக்கக் கவிதைகள் பலவற்றை ஈன்றெடுத்தார்.

புகழ்மிக்கக் கவிஞராக மட்டுமின்றி சிறந்த கட்டுரை யாளராகவும் நாடகாசிரியராகவும் திகழ்கிறார்.

அவரது வானொலி நாடகங்களின் தொகுப்பு 'மனோ பிரபஞ்சம்' (மற்றோர் உலகம்) என்ற பெயரில் வெளி வந்துள்ளது. அங்கதக் குறிப்புகளடங்கிய கட்டுரைத் தொகுப்பொன்று 'சரம் ராத்ரி' (இறுதி இரவு) என்ற பெயரில் வெளிவந்தது. 'வாரம் வாரம்' என்பது மற் றொரு தொகுப்பு நூலாகும். தற்காலத் தெலுங்கு இலக் கியத் தந்தையாக ஆந்திரர்களால் போற்றப்படும் குரு ஜாடா அப்பாராவின் படைப்பாற்றலை விளக்கும் கட்டுரைகளைக் கொண்ட தொகுப்பு 'மன குருஜாடா' (நம் குருஜாடா) என்ற பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. 'சிறி சிறி முவ்வ' (சின்னச் சின்ன மணி) என்ற நூல் அவரது நகைச்சுவைத் திறனுக்கும் 'கட்க சிருஷ்டி' (கத்தி யின் படைப்பு) என்ற நூல் அவரது அங்கதப் பாடல் இயற்றும் ஆற்றலுக்கும் சான்றாக விளங்குவனவாகும.

இவர் 1953-58ஆம் ஆண்டுகளில் ஆந்திரா இணைந் திருந்த அப்போதைய சென்னை மாநில மேலவை உறுப் பினராகவும் 1954ஆம் ஆண்டில் ஸ்டாக்ஹோமில் நடை பெற்ற அமைதி மாநாட்டிலும் பங்கேற்றதோடு ஐரோப்

பிய சுற்றுப் பயணம் மேற்கொண்டார். 1966ஆம் ஆண்டில் 'சோவியத் நாடு' நேரு இலக்கியப் பரிசைப் பெற்றதன்மூலம் அதற்கு அடுத்த ஆண்டில் சோவியத் யூனியனில் சுற்றுப் பயணம் செய்தார்.

தெலுங்குத் திரைப்படங்களுக்குப் பாடலும் உரை யாடலும் எழுதுவதைத் தன வருவாய்ப் பணியாக மேற் கொண்டு சென்னையில் வாழந்து வரும் கவிஞர் மணி விழாவை 1970ஆம ஆண்டில் ஆந்திராவெங்கும் சீரும் சிறப்புமாகக் கொண்டாட இலக்கிய உலகம் ஏற்பாடு செய்தது. அதன் தொடர்பாக அவரது அமரத் துவப் படைப்புகள் கொண்ட மாபெரும மணி விழா வெளியீடு' ஒன்றும் வெளிவநதது.

# பாலகும்மி பத்மராஜு

இன்றைய தெலுங்கு சிறுகதை இலக்கிய உலகில் தனித் தாரகையென விளங்குபவர் பாலகும்மி பத்மராஜு 1952 ஆம் ஆண்டில 'நியூயார்க் ஹெறால்ட் ட்ரிப்யூன்' நடத்திய அகில உலகச் சிறுகதைப் போட்டியில் இரண் டாம் பரிசு பெற்றதன் மூலம தெலுங்குச் சிறுகதை இலக் கியத் துறையை உலக இலக்கியங்களிடையே ஒரு தனி யிடத்தை பெறச் செய்தவர் பத்மராஜு அவ்வாறு பரிசு பெற்ற அவரது அமரததுவ சிறுகதையான 'காலிவான' (சூறாவளி) இவரது சிறுகதை இலக்கியப் படைப்பாற்றல் திறனுக்குச் சரியான உரைகல்லாக அமைந்துள்ளது.

மேற்குக் கோதாவரி மாவட்டத்தில் உள்ள திருப்பதி புரம் எனற கிராமத்தில் 24-6-1915'இல் பிறந்த பத்மராஜு தமது ஒன்பதாவது வயதிலேயே தன் தந்தை யை இழந்து தமது தாத்நாவின் அனபான அரவணைப் பிலே வளர்நறு வந்தார் சரியாகப் பன்னிரணடாவது வயதில் தன் தாத்தாவையும் இழந்துவிடவே இஃது சிறு வனாக இருந்த பத்மராஜுவின உள் மன உணர்ச்சிகளை பாதிக்கும் ஒரு சம்பவமாக அமைந்துவிட்டது தாத்தா வின் மரணம் ஏற்படுத்திய மன உளைவுகளைக் கவிதை யாக வடித்து மன அமைதி பெறலானார் அவர் எழுதிய முதல் படைப்பு கவிதையாகவே அமைந்தது இநதக் கவிதையிலிருந்து தான் அவரது இலக்கியப் பயணமும் தொடங்கியது

மிக இளமையிலேயே மற்றவர்களுக்குக் கதை சொல் வதில் தனி ஆர்வம் கொணடவராக இருந்தார் பத்மராஜு ஆயினும் பள்ளிப் பருவ நாட்களில் எழுத்தில் வடிப்பதெல் லாம கவிதைகளாகவே இருந்தன அவை ஆசிரியர்களிடத்

திலே தனி மதிப்பையும் செல்வாக்கையும் அவருக்குப் பெற்றுத்தரச் செய்தன

ஒருநாள் அவர் தன் தங்கையின் மரணத்தை நேரில் காண நேர்ந்தது வாழ்விநின்றும் விடைபெற்றுப் போகும் தன தங்கையின் பிரிவு அவர் உள்ளத்தின் அடித் தளத்தில் அழுத்தமான வேதனை உணர்வுகளை பதித்துச் சென்றது அநத உணர்வு அவரது கவிதையிலே உரமாக வடிவம பெற்றது அக்காலததில் புகழ்பெற்று விளங்கிய தரமான இலக்கிய இதழான 'கிருஷ்ணா'வுக்கு அனுப்பி வைத்தார் அடுதத இதழிலேயே கவிதை வெளி வந்தது இதுவே அச்சுவாகனமேறி பத்திரிகையில் வெளிவந்த இவரது முதற்படைப்பு அப்போது அவருக்கு வயது பதினாறு

பள்ளிப் பருவத்திலேகிய தான் /ஒரு சிறந்த படைப் பாசிரியனாக அக்காலத்தில் புகழ்பெற்ற மக்கள் கவியாகத் திகழ்ந்த திருப்பதி வேங்கடேசலுவைப்போல வளர்ச்சிப் பெற வேண்டும் என்ற ஆசை அவர் உள்ளத்தில் எப் போதும் இழையோடிக் கொண்டே இருந்தது

காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் விஞ்ஞான உயர் கல்விபெற சேர்ந்த பின்னர்தான் அவரது மனப்போக்கில் பல மாற்றங்கள் விளைந்தன விஞ்ஞான உணர்வு அவர் உள்ளத்துள் ஆழப் பதிந்து, அறிவிலும் மனதிலும் பல மாற்றங்களை உண்டாக்கியதோடு கற்பனையின் ஆழத் துக்கும் உண்மையின் விஞ்ஞானத்துக்கும் விபரீதமான இடைவெளி இருப்பதை அவருக்கு உணர்த்தின படைப் பிலக்கியம் பற்றிய சரியான கண்ணோட்டம் உருவாக இஃது உதவியதோடு தனித் தன்மையுள்ள கவிதைகள் பிறக்கவும் வழி கோலியது இவரது இறுதிக் கவிதை 1954ஆம் ஆண்டில் அன்றைய இந்திய உழைப்பாளி உழவன் ஒருவனைப் பற்றிய 'பிரம்மாண்ட உழவன்'

என்ற தலைப்பில் வெளிவந்ததாகும் அக்காலத்தில் அவர் எழுதிய 'சீகடி' (இருள்) என்ற கவிதை அவரது தனித் துவப் போக்குக்குக் கட்டியங்கூறும் கவிதையாகும்

தாம் கூறவேண்டிய கருத்துக்களை சமுதாயத்துக்கு எடுத்துச் சொல்ல கவிதையைவிட கதை அதிலும் சிறு கதையே சிறந்த சாதனம் என்பதை உணர்ந்து தெளிந்த பத்மராஜு சிறுகதைகளை உருவாக்குவதில் தனி ஆர்வ மும் முயற்சியும் மேற்கொண்டார் அவரது முதல் சிறு கதை 'அப்பு' என்பதாகும் ஒரு குடும்பத்தில் அப்பாவும் அம்மாவும் ஒரு வேலைக்காரிக்கு அவர்களின பிள்ளையின் மூலம் ஒரு குழந்தை பிறந்துவிடுகிறது. அந்த வேலைக் காரியைச் சுற்றி ஓடுவதுதான கதை இந்தக் கதை ஆங்கிலத்தில் எழுதப்பட்டு 'திருவேணி' என்ற இதழில் வெளிவந்தது கதையின் கருவையும் உருவையும் பாராட் டிய இதழாசிரியர் அவர் தெலுங்கிலும் இதைப் போன்ற கதைகளை எழுத வேண்டுமென பத்மராஜுக்குக் கடிதம் எழுதினார் உண்மையில் இக்கதை முதலில் தெலுங்கில் எழுதப்பட்டு பிரபல தெலுங்கு இதழுக்கு அனுப்பப்பட, அவர்கள் பிரசுரிக்க இயலாது என திருப்பியனுப்பிய பின்னரே இக் கதை ஆங்கில வடிவில் 'திருவேணி' இதழுக்கு அனுப்பப்பட்டு வெளியாகியது தெலுங்கு பத்திரிகையுலகில் ஆரம்ப காலத்தில் பத்மராஜுக்குக் கிடைதத வரவேற்பு அப்படித்தான் இருந்தது

பத்மராஜுவின் சிறுகதைப் படைப்பாற்றல் வாசகர் மத்தியில் ஒரு புதிய விழிப்பை உருவாக்கவே தொடக்கத் தில் இவர் கதைகளை ஏற்றுக் கொள்ள மறுத்த இதழ் களெல்லாம் வருந்திக் கேட்டுப் பெற்றுச் சிறுகதைகளைப் பிரசுரிக்கலாயின

இவர் நூற்றுக்கு மேற்பட்ட சிறுகதைகளைப் பல பத்திரிகைகளில வெளியிட்டுள்ளார் அவற்றில் பதினைந்து

சிறுகதைகள் 'கூலி ஜனம்' (கூலி மக்கள) என்ற தலைப்பில் 1953ஆம் ஆண்டில் ஒரு தொகுப்பாகவும் 'பத்மராஜு கதகலு' (பதமராஜு கதைகள்) என்ற தலைப்பில் 1955 ஆம் ஆண்டில மற்றொரு தொகுப்பாகவும் வெளிவந்தன அவருடைய சிறுகதைகளில பல தமிழ், மலையாளம், கனனடம முதலிய தென்னக மொழிகளிலும் இந்திய ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலும் மொழிபெயர்க்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளன

இவரது சிறுகதைப் படைப்புகள் வாழ்வின் உணமை களை உணர்ததிக் காட்டும் சக்திமிக்க ஆயுதங்களாகத் திகழ்வதற்கு முதற காரணம் இவர் பெற்றுள்ள விஞ் ஞானப் புலமையே எனத துணிந்து கூறலாம. இநத விஞ்ஞான அறிவு எந்தப் பொருளின் அடிப்படையையும் ஆராயந்து பார்க்க இவரைக் தூணடுகினறன என்பதை தெளிவாக இவரது சிறுகதைகள் மூலம் உணரலாம். இயற்கைக்குப் புறமபான எந்த ஒரு கதாபாத்திரத்தையும் இவரது கதைப் படைப்புககளில் காணமுடியாது.

இயற்கைத் தன்மை, உண்மை, மக்களின் போக்கு முதலியவை சிறந்த முறையில் இவரது கதைகளில் இடம் பெற்றிருப்பதோடு, அவைகளுள் ஆழ்ந்த கருத்துக்கள் பல பொதிநதிருப்பதையும் காண முடிகிறது. மனிதத தன்மை யின ஒவ்வொரு கூறுகளையும் வெளிக்கொணரும் சக்தி மிக்கத கருவியாக இவர் சிறுகதைகளைக் கையாளுகிறார் எனக் கூறினால் அது மிகையாகாது.

இவரது சிறுகதைகளில் நாம் காணுகிற மற்றொரு சிறப்பு கதைகளினூடே அதை எழுதிய கதாசிரியரை காணமுடியாதது தான. கதைககளில் இவர் உருவாக்கும் சூழ்நிலை, அமைக்கும் உரையாடல்கள் முதலியன கதைக்கருவுக்குச் சீரான உருவம் தரும் வகை யில அளவோடு அமைக்கப்படுகின்றன. அவை கதையின

குறிக்கோளை விழுங்கும் அளவுக்கு முக்கியத்துவம் பெறு வதில்லை. இந்திய மொழிகளிலும், வெளிநாட்டு மொழி களிலும் பெருமளவில் மொழிபெயர்க்கபபட்ட இவரது 'படல பிரயாணம்' (படகுப் பயணம) என்று சிறுகதை இதற்குத் தக்க சான்றாகும்.

கவிதை சிறுகதைகளோடு நில்லாது சில முழுநீள தெலுங்கு நாடகங்களையும் தமிழில் வெளிவந்த நாடகங் களைத தழுவி தெலுங்கில் சில நாடகஙகளையும எழுதி யுள்ளார். இவையனைததும் மேடையில அரங்கேறி மக் களிடையே நல்ல வரவேறபைப் பெற்றுளளவைகளாகும்.

இவர் கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றிய காலதததிலும் பினனரும் எழுதிய பதினைந்திறகு மேற பட்ட குறுநாடகங்களும் ஐம்பதுககு மேறபட்ட வானொலி நாடகங்களும் இனறு குழுககளாலும, கல்லூரி மாணவர்களாலும் நடிககப்பட்டு வருகினறன.

இவரே தமது சிறுகதைகளில் பலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுளளார்.

1937இல் காசிப் பல்கலைக் கழகத்தில் எம எஸ சி. (இரசாயனம்) பட்டமபெற்ற பினனர் காகினாடாவில உள்ள பி.ஆர். கலலூரியில் இராசயன விரிவுரையாளராக வும், பின்னர் 1945-லிருந்து 1952 வரை பிமாவரத்தில உள்ள டபிள்யூ.ஜி.பி. கல்லூரியில இரசாயனப் பேராசிரி யராகவும் பணியாற்றி, பினனர் திரைபபடவுலகில் பணி யாற்றுவதற்கென சென்னை வந்துவிட்டார்.

தெலுங்குத் திரைப்படங்களுக்குத் திரைக்கதை, உரை யாடல்களை அமைதது வந்கதோடு சில படங்களைத் திறம்பட இயக்கியும் உள்ளாா.

இவரது திரைப்படவுலகப் பிரவேசம் திரைப்பட வுலகுக்குப் பெரும் பயனளிப்பதாக அமைந்த போதிலும்

தெலுங்குச் சிறுகதையுலகைப் பொறுத்தவரை பெரும் இழப்பு என்றுதான் கூறவேண்டும். ஏர்னஸ்ட் ஹெமிங்வே போன்ற ஆற்றல்மிக்கப் படைப்பாசிரியரான பத்மராஜு வின் இலக்கிய வேகத்தை திரைப்படவுலகம் பெருமளவில் பாதிக்கும்படி செய்துவிட்டது என்பது என்னவோ உண்மைதான்.

# குடிபாடி வெங்கடாச்சலம் (சலம்)

தெலுங்கு நாடக, கதை இலக்கியத் துறைகளில் புரட்சிப் பெயராக விளங்கும் 'சலம்' என்ற புனைபெயருக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருக்கும் குடிபாடி வெங்கடாச்சலம் தெலுங்கு இலக்கிய உலகிலே பலகாலம் புரியாத புதிராகவும், புரட்சிப் புயலாகவும் விளங்கியவர். பழமைவாதிகளின் இடைவிடாத தூற்றுதலுக்கும் புதுமைப் போக்காளர்களின் பெரும் போற்றுதலுக்கும் இலக்காகி, தெலுங்கு இலக்கியவுலகின் கடுமையான விமர்சனத்திற்குரிய இலக்கியங்களை நாற்பதாண்டுகளாக எழுதிக் குவித்து, இறுதியில் திருவண்ணாமலை ரமணாசிரமத்தில் துறவுக் கோலம் பூண்டவர் குடிபாடி வெங்கடாசலம் அவர்கள்

அவரது இலக்கியப் படைப்புக்களின் கருப்பொருளை கடுமையாக விமர்சிப்பவர்கள் கூட அப்படைப்புக்களின் இலக்கியத் தரத்தைப் பெரிதும் போற்றிப் புகழத் தவறுவதில்லை. சக்தி மிக்க எளிய சொற்றொடர் அமைப்பும், உணர்ச்சி பொங்கும் விறுவிறுப்பான பேச்சு வழக்கு நடையும், சொல்லுந்திறனும் தெலுங்கு உரைநடை வளர்ச்சிப் போக்கில் மாற்றங்களைத் தோற்றுவிக்கத் தவறவில்லை என்பதை தெலுங்கு இலக்கிய உலகு நன்றியோடு இன்று போற்றுகிறது.

சென்னையில் 1894ஆம் ஆண்டு மே திங்கள் 18ஆம் நாள் புத்த ஜயந்தியன்று பிறந்த சலம் தெனாலியில் படித்துப் பட்டம் பெற்று காகினாடாவில் உள்ள பி.ஆர். கல்லூரியில் சிலகாலம் டியூட்டராகப் பணியாற்றினார்.

அக்காலத்தில் ஞானி என்றும், மகரிஷி என்றும் போற்றப்பட்ட மறைந்த சர்.ஆர். வெங்கடரத்தினம்

நாயுடு அவர்களோடு ஏற்பட்ட தொடர்பின் விளைவாக சலம் பிரம்ம சமாஜத்தின் தீவிர உறுப்பினராக ஆனார். இக்கால கட்டத்தில் இவருக்கு ஏற்பட்ட கசப்பான அனு பவங்கள் இவரது உள் மனத்தில் உறங்கிக் கொண்டிருந்த ஆவேசப் புரட்சியுணர்வை வேகமாக உசுப்பிவிட்டது. இஃது இவரது வளர்ச்சிப் போக்கில் 'பெரும் மாற்றங்கள் தோன்ற வழி வகுத்தன அநீதியின அடிப்படையில் உரு வாக்கியுள்ள சமுதாயத்தின் இனறைய போக்கு அவரைத் தீவிரமாகச் சிந்திக்கத் தூண்டின உணமை வாழ்க்கைக் கும் போலியான சாதி, மதச் சமபிரதாயக் கட்டுப்பாடு களால் மூடப்பட்டிருககும வாழ்க்கைக்குமிடையேயுள்ள அகனற இடைவெளியைக் கண்டு வருந்திய அவர் பிரம்ம சமாஜத்தினின்றும் வெளியேறியதோடு கல்லூரிப் பணி யையும கைகழுவினார். பிறகு முறையான ஆசிரியப் பயிற்சி பெற்று பள்ளி மேற்பார்வையாளராகவும் பயிற்சி பள்ளி ஆசிரியர், பயிற்சிப் பள்ளித் தலைமையாசிரியர் பணிகளைப் பல காலம மேற்கொண்டார்.

ஆரம்ப காலத்தில் பக்தியுணர்வை ஊட்டவல்ல கட்டுரைகளை எழுதிய அவர் 1920 ஆண்டு முதல் தனக்கேயுரிய பாணியையும் நடையையும் அமைத்துக் கொண்டு தம் உளளத்தில் ஊறிவரும் புரட்சியுணர்வு களுக்கு எழுத்துருக் கொடுத்து இலக்கியம் படைக்க லானார். பிரத்தியட்ச வாழ்க்கை பறறிய தம் உணர்வு களையும் சிந்தனையையும் வெளியிடத் தகுந்த சாதனமாக பிற துறைகளைவிட நாடகத் துறையையே அவா தொடக்கததில் தேர்ந்தார் 1920ஆம் ஆண்டில் வெளி வந்தது 'சசிரேகா' எனும் நாடகமேயாகும் பின்னர் 'சத்யம்' 'சிவம்' 'சுந்தரம்' முதலிய ஓரங்க நாடகங்களை யும் எழுதி வெளியிட்டார்.

சமுதாயத்தில, தாய்க்குலமாகிய பெண்ணுலகம் அடைந்து வரும் அவல நிலைகளை—கொடுமைகளை

அலர்கள்மீது சமுதாயம் சுமத்தியுள்ள சமூக அநீதிகளை அப்பட்டமாகச் சித்திரித்து சமூக நீதி கேட்பதே அவை களின் நோக்கமாகும் பெண்ணினம் பெற்று வரும் பெருந் துன்பங்களுககு அடிப்படைக் காரணம் கண்மூடித்தன மான பழகக வழக்கங்களும் மரபுகளுமே எனபதைத் தனககேயுரிய வழியில விளக்க முற்பட்டார் அவர் தனது கதாபாததிரப் படைப்புக்களை பாவாத்மாக்களாகவே படைத்துள்ளார் பாவங்களைச் செய்யத் தூணடுபவை சமுதாயத்தின் கோணல் நிலைகளே என்பதை இதமாக எடுத்துக் கூறுவதோடு படிப்போரது மனிதாபிமான உணர்ச்சியையும் தூணடலானார் உண்மை வாழ்க்கை யில் பெரிய மனிதர்கள் என்ற போர்வைக்குள் போலியாக நடித்துக் கொணடிருட்பவர்களைவிட இந்நாடகங்களில் வரும் பாவாதமாக்கள் மிக உயர்ந்தவர்கள் என்பதைத் திறம்பட அவரது கதாபாத்திரங்கள் உணர்த்தின இவரது பாத்திரப் படைப்புக்கள் ஒவ்வொன்றும செல்லரித்த சமு தாயத்தில் சீர்கேட்டினை உள்ளங்கை நெல்லிக்கனியென விளககும் பாத்திரப் படைப்புகளாகவே உருவாக்கப் பட்டுளளன.

1920ஆம் ஆண்டில் எழுதத் தொடங்கிய சலம் இது வரை சுமாா முப்பது ஓரங்க நாடகங்களையும் ஏழு முழு நாடகங்களையும பத்துப் புதினங்களையும பதினமூன்று சிறுகதைத் தொகுப்புகளையும், கட்டுரை, கடிதங்கள் கொண்ட பததுத் தொகுப்புகளையும் வெளியிட்டுள்ளார். ஆரம்ப காலததில வெளியிட்ட 'கன்னீடி காலவ' (கண் ணீர் கால்வாய) எனற சிறுகதைத் தொகுப்புக் குறிப்பிடத் தக்கதாகும.

சமுதாய மாற்றத்திற்கு மூலாதாரமான பெண்களின் முன்னேற்றத்தின் இன்றியமையாத் தேவையையும் இன் றைய அவல நிலையையும் அதனைப் போக்குவதற்கும் பெண்களுக்கு அறிவுரை கூறுமுகத்தான் அவர் எழுதிய

கட்டுரைகளின் தொகுப்பு 'ஸ்திரி' என்ற தலைப்பில் இரு தொகுதிகளாக வெளிவந்துள்ளன.

தாகூரின சிந்தனையும், மாபசான், இப்சன், டி.எச். லாரன்ஸ் போன்றோரின செல்வாக்கும் இவரை ஆற்றல் மிக்கக் கலைஞராக்கியுள்ளன வாழ்க்கையைப் பற்றிய இவரது 'சிந்தனைகள்' உரைநடைக் கவிதை வடிவில் ஒரு தொகுப்பாக வெளிவந்துள்ளது. வாழ்க்கையைப் பற்றிய உண்மை உணர்வுகளை யுணர்த்த வல்ல இவ்வுரை நடைக் கவிதைத் தொகுப்பு ஆழ்ந்தத் ததுவக் கருத்துக்களைப் பொலிவதாக அமைந்துள்ளதெனலாம். தாகூரின் கீதாஞ் சலியையும் இவர் எளிய இனிய நடையில் தெலுங்கில் மொழி பெயர்த்துள்ளார்.

அவரது நாடகங்களுள் 'புரூரவா' 'சரசாங்கா' 'ஜெய தேவா' முதலியனவும் புதினங்களுள் 'மைதானம்' 'பிராம் மாணீகம்' 'விவாகம' ஆகியனவும ஆழ்ந்த அனுபவ முததிரைகளோடு படைக்கப் பட்டவைகளாகும் இவற்றி னூடே சமுதாயம் பற்றிய சலத்தின் புரட்சி மனப் பான்மையும் பிரத்தியட்ச உணர்வுகளை அப்பட்டமாகச் சித்தரித்துக் காட்டுவதிலே இவருக்குள்ள அளவு கடந்த ஆர்வத்தையும நன்கு அறிய முடிகிறது

பெண்ணுலக விடுதலைக்கு வேண்டியும் சமுதாய சீர் திருத்தங்களுக்காகவும் இவர் இலக்கியத்தைக் கையாண்ட முறை பலரது கணடனத்துக்கு ஆளாகியது என்னவோ மறுக்க முடியாத உண்மை. அதே சமயத்தில் இளைய சமு தாயத்தின் ஆதரவும் போற்றுதலும் நாளுக்கு நாள் பெருகவே பழமைப் போக்காளர்களின எதிர்ப்புக் குரலும் கண்டனக் கணையும் நாளுக்கு நாள் கூர்மழுங்கி மறைய லாயிற்று. ஆண்-பெண் உறவுகளை—காதலைப் பற்றிய இவரது பிரத்தியட்சக் கண்ணோட்டம் ஆபாசமானது

என இன்றுங்கூட சிலர் முணுமுணுப்பது என்னவோ உண்மைதான. ஆயினும் ஒரு சிலர் எணணுவதுபோல அவை இலக்கிய மெருகை இழந்து விடவில்லை. பிற்காலப் படைப்புக்களில் இந்நிலை பெரிதும் மாற்றமடைந்துள் ளது.

இவரது இலக்கியப் படைப்புக்களில் ஆரம்பத்தில் காணப்பட்ட கொந்தளிக்கும் புரட்சியுணர்வு பிற்காலப் படைப்புக்களில் தெளிந்த சிந்தனையோடு தத்துவப் போக்கில் வெளிப்படுவதைக் காணலாம். காரணம் இவரது வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களாகும். பிரம்ம சமாஜத்தின் தீவிரவாதியாக இருந்து, பின்னர் அதினின்றும் விலகி தீவிர சமுதாய சீர்திருத்தவாதியாக, சமூக நீதிக்காகப் போராடும் புரட்சிக்காரராக, நாத்திக உணர்வு படைத்தவராகத் திகழ்ந்து பின் ரமண மகரிஷி யின் அரவணைப்பில் தத்துவக் கோட்பாடுகளுள் தம் சிந்தனையைச் செலுத்தித தெளிவு பெற்றவராகத் தம் எழுததுப் பணியைத தொடர்ந்தார். இவ்வாறு அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களை அவரது படைப்பு களிலும் நாம் காண முடிகிறது.

உண்ர்விலும் சிந்தனையிலும் பெரிதும் மாறிவிட்ட சலம் பிறகு ரமணாசிரமத்தில் 'சாதக'ரானார். ஆரம்ப நாட்களில தாம படைத்த புரட்சிக் கனல்தெரிக்கும் தமது இலக்கியங்களைப் பறறி சந்நியாச வாழ்க்கையை மேற் கொண்ட அவர் பூரிப்போடு 'நான் உணமையைத் தேடிய முயற்சியில் அது ஒரு நிலை' என்றார்.

தெலுங்கு இலக்கியயுலகில் ஒருவிதப் புரட்சியுணர்வை யும் விறுவிறுப்பையும் ஏற்படுத்திய சலம் தாழ்ந்து கிடந்த சமுதாயத்தின் எழுச்சிக்குப் போராடிய உத்வேகமிக்கக் கலைஞராக திகழ்ந்ததோடு இலக்கிய யுலகுக்கு விறுவிறுப் பூட்டிய நாடகங்களையும் கதை இலக்கியங்களையும் படைத்துத் தனக்கென தனியானதொரு அமரத்துவ இடத் தையும் பெற்றுக் கொண்டுள்ளார் என்பதை யாரும் மறக்கவோ மறுக்கவோ முடியாது.

# கொடவடிகண்டி குடும்ப ராவ்

ஆந்திர மாநிலத்திற்கு அப்பாலும நன்கு அறிமுக மாகியுள்ள ஒருசில தெலுங்கு எழுத்தாளர்களுள குறிப் பிடததக்கவர் திரு கொடவடிகண்டி குடும்பராவ் அவர் கள்.

தெலுங்கு புததிலக்கியத் துறையின் ஆந்திர சரத் சத்திரராக மதித்துப் போறறப்படும் திரு குடும்பராவ் புதினப் படைப்பாளர், சிறுகதையாசிரியர். பததிரிகை யாளர், நாடகாசிரியர் எனப் பல்வேறு இலக்கியத் துறை களிலும் தனி முத்திரை பதித்துப் புகழ்பெற்றவர்

இவரது இலக்கிய நோக்கும் எழுதத் தேர்ந்தெடுக்கும் கருப்பொருளும் கதை சொல்லும உத்தியும் தனிப்போக் கில் அமைந்தவைகளாகும் இதற்கு இளமையிலேயே இவர் உள்ளத்தில விததிட்டவை கார்ல மார்க்ஸின சிந்தனை களேயாகும்.

கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே சிறுகதைகள் பல வற்றை எழுதிய குடும்ப ராவ் காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் அறிவியல் பாடத்தில் முதுகலைப் பட்டம் (எம்.எஸ்சி,) பெறுவதற்காகச் சென்றபோதுதான் இவர் கார்ல் மார்க்ஸின 'மூலதனம்' நூலைப் படிக்க நேர்ந்தது. மார்க்ஸின் கருத்துக்கள் அவா சிந்தையைக் கவர்நததோடு இவரது சமுதாய நோக்கையும் பெருமளவுக்கு மாற்றி விட்டன அதுவரை படைப்பாசிரியன என்ற முறையில் அவருக்கிருந்த சமுதாயப் பார்வை புதிய கோணத்தில் அமைந்தது. சமுதாயத்தின பிரத்தியட்ச நிலைமையின் போக்குகளை கழுகுக் கண்களால் கண்டறிந்து அவற்றை எழுத்து வழி விணடுரைக்கும் போக்கில் தன் எழுத்தோவி யங்களை வரையத் தொடங்கினார். இதன்மூலம் இவரது

எழுத்துக்கள் மக்கள் மத்தியில் பெரும் செல்வாக்குப் பெறத் தொடங்கின. இவரது புததிலக்கியச் சிந்தனையும் நோக்கும் இளைஞர் மத்தியில் இவருக்குப் பெரும் புகழைத் தேடிக் கொடுத்ததோடு முற்போக்கு உணர்வு படைதத ஒரு வாசகர் கூட்டத்தையும் தேடிக் கொடுத் திருக்கிறதெனலாம்.

இவர் தேர்ந்தெடுக்கும் கதைக் கருவைப் போன்றே மொழி நடையும், வேகமும் விறுவிறுப்பும் உடையதாகும். கதாபாத்திரங்களின உள்ளுணர்வுகளை கூடியவரை முழுமையாகப் பிரதிபலிக்க முயலும் இவர் அப்பாததிரத் தின தனமைக்கேற்ப பேச்சு வழக்கு மொழியையே பெரி தும கையாளகிறார். இநத நடை இவரது படைப்புக் களுக்குத் தனிக் கவர்ச்சியூட்டுகின்றது என்பதில் ஐய மில்லை.

சமுதாயததின் பிரத்தியட்ச நிலைமைகளைப் படம் பிடித்துக்காட்டி அதனமூலம் சமுதாயததின் குறை நிறை களைத் தோலுரிததுக்காட்ட முயலும் இவர், வீண சொல்லலங்காரங்களிலும் படாடோபமான வார்த்தை ஜாலங்களிலும் சிறிதும் அக்கறையோ ஆர்வமோ காட்டு வதில்லை.

இவரது படைப்பாற்றலுக்கு மெருகூட்டும் துறையாக இவரது வாழ்க்கை நெடுக இடையறா தொடர்புடைய தாகப் பத்திரிகைத் துறை இருந்து வந்தன எனலாம்.

சுமார் முப்பத்தைந்தாண்டு கால பத்திரிகைத் துறை அனுபவம் பெற்ற இவர் 'யுவ' கினிமா' 'ஆந்தர. போன்ற வார இதழ்களுக்கும் சிறிது காலம் 'ஆந்த்ர' நாளிதழுக்கும் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார் முற் போக்கு தெலுங்கு எழுத்தாளர் சங்க இதழான 'அப்யுரா' வின் கௌரவ ஆசிரியராகவும் பணியாற்றியுள்ள இவர்

பல்வேறு மொழிகளில் வெளிவந்து கொண்டிருக்கும் 'சந்தமாமா' (அம்புலிமாமா) இதழின் ஆசிரியர் குழுவில் முக்கியப் பங்குகொண்டு பணியாற்றி வந்தார்.

சுமார் முப்பதுக்கு மேற்பட்ட படைப்புக்களை உருவாக்கி யுள்ள இவர் நாவல் குறுநாவல்களை விட சிறுகதைகளை யே மிக அதிகமாக எழுதிக் குவிந்துள்ளார். இச்சிறுகதை களில் பெரும் பாலானவை வார, மாத இதழ்களில் வெளி வந்தவைகளாகும். இவரது சிறுகதைகளில் பலவும் பதினைந்திற்கு மேற்பட்ட தொகுதிகளாக வெளிவந்துள் ளன அவைகளுள் குறிப்பிடத் தக்கவை 'நிலவ நீரு' (நிலையான நீர்) 'வேசி போயின மனுஷி' (ஓடிப்போன பெண்) 'ஆட ஜன்ம' (பெண பிறவி) முதலியனவாகும். ஆனால் இன்னும் எத்தனையோ சிறுகதைகள் நூல் வடிவம் பெறாமலிருக்கின்றன.

இவரது புதினங்களுள் குறிப்பிட்டுக் கூறக்கூடியவை 'பெதிரின மனுஷியலு' (பயந்தாங்கொள்ளி மனிதர்கள்) 'வார சத்வம்' (மரபு) 'சதுவு' (படிப்பு) ஆகியனவாகும. இவைகளுள் 'சதுவு' எனும் புதினம் இவரது வாழ்க்கைச் சாயலில் உருவானதாகும. அதோடு நாற்பது ஆண்டுகட்கு முன்பிருந்த விடுதலை இயக்கத்தின் வீறார்ந்த போக் கினையும், அன்றைய இளைய சமுதாயத்தின உள்ளத்தே பொங்கியெழுந்த தேசபக்தியுணர்ச்சியையும், தேசிய விழிப்பையும பல்வேறு வகைகளில் உருவெடுத்திருந்த விடுதலை இயக்கத்தின் போக்கையும் ஒருங்கே கூறுகிறது இப்புதினம்.

இவர் நாடகங்கள் பலவற்றையும் எழுதியுள்ளார். இந்நாடகங்களில் பெருமபாலானவை வானொலி நாடகங்களாகும். நாடக விழாவொன்றில் இடம் பெற்ற 'சவதி தல்லி' (மாற்றாந் தாய்) எனும் வானொலி நாடகம், இவரது வானொலி நாடகங்களுள் குறிப்பிடத்

தக்க ஒன்றாகும். பல்வேறு இந்திய மொழிகளுள் இஃது மொழி பெயர்க்கப்பட்டு நடிககப்பட்ட தொன்றே இதன சிறப்புக்குக் கட்டியங் கூறுவதாகும்.

திரைப்படத் துறைக்கும் இவர் கணிசமான அளவுகசு இலக்கியத் தொண்டாற்றியுள்ளார். 'தாறுமாறு' 'ஜோதி' 'வீரஅபிமன்யூ போனற திரைப்படங்களுக்குக் கதைய மைததுத் தந்துள்ள இவர் சில படங்களுககு உரையாட லில் பெரு வெற்றி கண்ட படம்,'பால நாகம்மா' என்ப தாகும்

அறிவியல் துறையில் மிகுந்த ஆர்வமும் பிடிப்பும் இளமை முதலே கொண்டுள்ள இவர், அறிவியல் செய்தி களை சாதாரண மக்களும் எளிதாக அறிந்துணரும் பொருட்டு பல நூல்களை எழுதியுள்ளார். எளிய நடை யில் அமைநதுள்ள இந்நூல்கள் சாதாண மக்களும் எளி தாக அறிந்துணரும் பொருட்டு பல நூல்களை எழுதியுள் ளார் எளிய நடையில் அமைந்துள்ள இந்நூல்கள் சாதாரண பாமர மக்களுக்கு அறிவியல் உண்மைகளை எளிதாகப் புரிந்து கொள்ள பெருந்துணை செய்வதாக உள்ளன 'சாஸ்த்ரீய ஞானம்' (அறிவியல் அறிவு)'பதார்த் தமுலோ பரமாணவுலு' (பொருளில அணுக்கள்) 'பாவ் லோவ் பரிசோதனலு' (பாவ்லோவ் ஆராய்ச்சிகள்) முதலியன அன்றாட அறிவியலை எளிதாக விளக்கும் இவரது நூல்களுள் சிலவாகும்

இவர் மொழிபெயர்ப்புத் துறைக்கும் குறிப்பிடத்தக்க அளவு தொண்டு செய்துள்ளார் ஆங்கிலத்திலிருந்து தெலுங்கு மொழியில் மேனாட்டறிஞர்களின் தலை சிறந்த இலக்கியப் படைப்புக்கள் சிலவற்றை மொழி பெயர்த்துள்ளார் ஜான் லார்டனின் கால் 'ஆஃப்தி வைலட் கவுட்சின் டெட்சோல்ஸ் 'ஷெரிடன் எழுதிய

'ரைவல்ஸ்'' முதலிய படைப்புக்களையும் ரஷியக் கதைகள் சிலவற்றையும் தெலுங்கில் மொழி பெயர்த்துள்ளார்.

இலக்கிய நூல்களோடு அறிவியல் நூல்கள் பலவற்றையும் இவர் தெலுங்கில் பெயர்த்துள்ளார் இவரது இம் மொழிபெயர்ப்பு நூல்கள் எளிமையும் தெளிவும் கொண்டு மூலநூலைப் படிப்பது போன்ற உணர்வை உண்டாக்கும் வண்ணம் அமைந்திருப்பதைக் குறிப்பிடத்தான வேண்டும.

இவர் தொடக்க காலத்தில் பப்டாயிலுள்ள உலோகத் தொழிறகூடமொன்றில ஃபோர்மேனாகவும் பின்னர் மற்றொரு உலோக-எஃகுத் தொழிற்சாலையின் மேற்பார்வையாளராகவும் பணியாற்றியுள்ளபோதிலும் இவரது திறமையை எழுத்துலகமே முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டது.

தெலுங்கு இலக்கியவுலக வளர்ச்சிக்குப் பெருந்துணையாயமைந்த 'நவ்ய சாஹிதய பரிஷத்'தில் பெரும் பங்கு கொண்டு உழைத்த இவர் முற்போக்குத் தெலுங்கு இலக்கிய அமைப்புகள் பலவற்றில் தொடர்பு கொண்டு உழைத்து வந்துள்ளார்.

சமதர்ம சமுதாய உணர்வு படைத்த முறபோக்கு எழுத்தாளரான திரு குடுப்ப ராவ் சிறு சிறு வடிவங்களாக கதைகளை உருவாக்குற 'கல்புகா' புதிய இலக்கிய வடிவமொன்றை தெலுங்கு இலக்கிய உலகின வாசர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்ற இப்புது அமைப்பில் உருவாகும் கதைகளை இதழ்கள் பலவும் வெளியிட்டுள்ளன.

மற்ற எழுத்தாளர்களோடு ஒத்துப்போகும் தன்மை இவரிடம் சற்றுக் குறைவாகக் இருந்தபோதிலும் தனக்கென தனி வழிவகுததுக் கொண்டு இடையறாது பணியாற்றி வந்த இவரது இலக்கியத் தொண்டு தெலுங்கு இலக்கிய வரலாற்றில் என்றென்றும் போற்றப்படும் என்பது திண்ணம்.

# குர்ரம் ஜோஷ்வா

தெலுங்கு இலக்கிய உலகில் இணையற்ற கவிக் குயி லாக-கவித்திறச் சிறப்புக்காக கனகாபிஷேகம கண்ட கவி மேருவாக-சமுதாயததின் மிகமிகத் தாழ்ந்த தட்டின அடிததளத்தில் பிறநதாலும் இலக்கிய ஆற்றலால் மக்களி டையே மிக உன்னத இடததைப் பெற்று பேர் பெருமை களோடு வாழ முடியும என்பதற்கு ஏற்ற எடுத்துககாட் டாக விளங்கியவர்தெலுங்கு கவிஞர் திரு குர்ரம்ஜோஷ்வா

தெலுங்கு இலக்கிய வரலாற்றில் பல புதிய அத்தி யாயங்களை உருவாக்கி வளங்கூட்டிய அக்கவிஞர் பெரு மான தமது எழுபத்தாறாம் வயதில் மறைந்த செய்தியைக கேட்டபோது அவர் இனறைய புகழ்மிகு நிலையை எய்து வதற்கு முன்னால் இலக்கிய உலகில் போட்ட எதிர்நீச்சல களையும் மக்கள உள்ளத்தில் அவர்பால ஏறபட்ட மாறாத அனமையும் மதிப்பையும் உருவாக்கிய கவிதைப் படைப்புக்களையும் அவற்றின் வழியே அவர் மனித குலததுக்கு வழங்கிச் சென்றுளள சிந்தனை வளமிகக செய்திகளையும ஒரு கணம் எண்ணிப் பார்க்காமல் என் னால் இருக்க முடியவில்லை. அவற்றை ஒருமுறை நினைவு கூர்ந்து போறறுவதே அவர்க்கு நாம் செய்யும மிகச் சிறநத அஞ்சலியாக இருக்க முடியும்.

இலக்கிய உலகில் மேட்டுக் குடியினரின் ஆதிக்கம் சரிந்து கொண்டிருந்த காலகட்டத்தில புராண இதிகாச விஷயங்களுக்கு அப்பாலும் சமுதாயச் சிந்தனைகளின் அடிப்படையில் இலக்கியம் படைக்கலாம என்ற எண்ணம் எழுந்து அழுததமாகக் காலூன்றி வளரத் துவங்கிய தருணத்தில் தெலுங்கு இலக்கிய உலகில் காலடி எடுதது வைத்தவர் திரு ஜோஷ்வா.

திரு ஜோஷ்வா சமூகத்தில் மிகத் தாழ்ந்த-சமுதாய அந்தஸ்து எனும் ஏணியில் ஏற வாய்ப்புகளேதும் இல்லாத கிருத்துவ அரிஜனக் குடும்பமொன்றில் 1895ஆம் ஆண்டில் பிறந்தாராயினும் அவருக்கு இலக்கிய பாரம்பரியம் என்பதே அடியோடு கிடையாது எனக் கூறிவிட முடியாது. அவரது தந்தை குர்ரம் வீரய்யா 'கொல்ல கத்தலு' என்ற ஒருவகை நாடோடி இசைப்பாடலில் தேர்ச்சியும் திறமையும் மிககவராக விளங்கினார்.

எப்படியோ தட்டுத்தடுமாறி எட்டாம் வகுப்பு வரை எட்டிப் பார்த்த திரு ஜோஷ்வா அதற்கு மேல் கல்வித் துறையில் முன்னேறிச் செல்ல வசதிகளோ வாய்ப்புகளோ இல்லாத நிலையில் ஆசிரியர் பயிற்சி பெற்ற ஆரம்ப பள்ளியொன்றில் ஆசிரியரானார். இக்காலக் கட்டத்திலேயே அவர் கவனம் இலக்கியததின்பால் சென்றுவிட்டது. இயற்கையிலேயே கவித்துவ உணர்வால் பொங்கி நின்ற அவர் உள்ளம் கவிதைச் செல்வங்களை ஈன்றெடுக்கத் தொடங்கியது. திரைப்பட அரங்கில் பேசா படங்களுக்கு இடையிடையே கதையை மொழிபெயர்த்துக் கூறும் பணியை மேற்கொண்டபோதும் பின்னர் மீணடும் ஆசிரியர் பணியை மேற்கொண்டபோதும் நாடக அரங்குகளுக்குக் கதை வசனம் எழுதி வந்தபோதும் அவர் கவிதைகள் எழுதுவதை நிறுத்தாது தொடர்நது செய்து வந்தார்.

ஆசிரியர் பணியை ஆற்றிக் கொண்டே தனியாகப் படிதது ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் தெலுங்கு மொழி பண்டிதர் தேர்வில் வென்று 'உபய பாஷா ப்ரவீணா' எனும் கீழ்க்கலைப் பட்டத்தைப் பெற்று தெலுங்கு மொழி ஆசிரியரானார். இதன் பின்னர் இவர் முழுக்கவனமும் இலக்கியத்தின்பால் திரும்பிவிட்டதெனலாம். இதனிடையே பல்வேறு இதழ்களில வெளிவந்த இவரது கவிதைகள் மக்கள் உள்ளத்தில் சிறப்பிடம் பெறத தொடங்கின, புகழ்த் தென்றல் இவர்பால் திரும்பத் தொடங்கியது.

இவர் இலக்கியப் படைப்புக்களின் மூலம் புகழின் உச்சிக்குச் சென்று கொண்டிருந்த காலகட்டத்தின் இடை யிடையே போர்ப் பிரச்சாரப் பணியிலும் இறுதியாக அனைத்திந்திய வானொலியில் தெலுங்கு பேச்சு நிகழ்ச்சி களின் தயாரிப்பாளராகவும் சில காலம் பணியாற்றினார்.

இவரது கவிதைப் படைப்புகளின் பெருவெற்றிக்கு அடிப்படைக் காரணம் அவற்றில் காணும் எளிமையும் தெளிவுமாகும். எத்தகைய ஆழ்ந்த சிநதனைக் கருத்துக் களையும் அனாயசமாக மக்கள் உள்ளத்தில் படியுமாறு கூறத்தக்கவண்ணம் மொழியை லாவகமாக கையாள் வதில இவருக்குள்ள ஆற்றல் அளப்பரியதாகும் தங்கு தடையின்றி நீரொழுக்கும்போல் செல்லும் இவரது இயற் கையான கவிதை நடை, பாமர மக்களையும் தன் பால் ஈர்க்கும் தன்மையுடையதாகும் மிக உயர்ந்த படிப்பறிவு பெற்றவர்கள் மட்டுமல்லாது சமுதாயத்தின் கீழ்த்தட்டில் வாழும் சாதாரண பாமரர்களும் இவரது கவிதைகளைப் படித்து ரசித்து போற்றும் இவரது அன்பிற்குரிய வாசகர் களாக மாறியதற்கும் இதுவே காரணமாகும்.

எளிமையோடு கருத்துவளம் மிக்கவை இவரது கவி தைகள் சிறு கவிதையானாலும் நீண்ட கவிதையானாலும் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள் ஏதாவது ஒரு உருவில் இல்லாமலிருக்காது. நாட்டுப் பற்று, சமுதாய சீர்கேட் டிற்கு அடிப்படைக் காரணங்களாகிய சாதி வேற்றுமை கள், அவற்றால் சங்கிலித் தொடர்போல் விளைந்துள்ள ஏற்றத் தாழ்வுகள், இன்னல்கள், நிலையான வாழ்வுப் பிரச்சினைகளான காதல், துன்பம் ஆகியவைகளை கருப்பொருளாகக் கொண்டு தம் கவிதைகளைப் படைத் தளித்துள்ளார் இவர்.

மனித வாழ்வின் இறுதி நிலையான இறப்பைப் பற்றி இவர் பாடியுள்ள 'ஸ்மஸான வாடி' (சுடுகாடு) என்ற

கவிதைப் படைப்பு ஆங்கில நாட்டின் பெருங்கவிஞர் கிரே அவர்களின் 'இடுகாட்டு இரங்கற்பா'வைவிட ஒருபடி உயர்ந்ததாகப் போற்றப்படுகிறது.

இவரது சிறு கவிதைகள் ஐந்து தொகுப்புகளாக-ஒவ்வொன்றும பல பதிப்புகளாக-வெளிவந்துள்ளன.

இவர் சிறு காவியங்கள் பல எழுதியுள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கது 'கப்பிலமு' (வௌவால்) என்பதாகும். சிறு தொகுதிகளாக வெளிவந்துள்ள இச் சிறு காவியம் புது வகையில் அமைந்த தூது இலக்கிய வகையைச் சேர்நததாகும.

அரிஜன் ஒருவனது குடிசைக்கு வரும் வௌவாலிடம் சிவன கோயிலின இருண்ட மூலைககு மீண்டும் அது திரும்பிச் செல்லுமபோது, அங்கே குடி கொண்டிருக்கும் சிவபெருமானிடம் பூசாரி இல்லாத நேரம் பாரதது அரிஜனாக தான பிறந்து அடைந்துவரும் இன்னல்களை, அவல வாழ்வை எடுத்துக் கூறுமாறு தூதனுப்புகிறான் கீழ்க்குடி மக்களின் துயர வாழ்வை அறபுதமாகப் படம் பிடித்துக காட்டி படிப்போர் உள்ளததை உருக்கி விடுகிறார். காளிதாசரின் 'மேக தூத' பாணியில் அமைந்த இத் தூது இலக்கியம் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றதாகும்.

மற்றொரு சிறப்புமிகு காவியம், பாரசீக கவிஞர் பிர்தௌஸியின் வாழ்வைத் சித்தரிக்கும் 'பிர்தௌஸி' எனும காப்பியமாகும். 'அரசனது கைவாள் குருதியைக் கொட்டும்' கவியின் எழுதுகோல் அமுததததைப் பொழியும் அரசன் உலகத்தைததான் அரசாள முடியும். ஆனால் கவிஞனோ இம்மையையும் மறுமையையும், அரசாளும் ஆற்றல் பெற்றவன்' எனச் செங்கோல் ஏந்தும் அரச வாழ்வின் நிலையையும், எழுதுகோல் பிடிக்கும் கவிஞர்களின் உணர்வையும் சிறப்புற விளக்குகிறார்.

மாமன்னர் ஷாஜகான் மும்தாஜ் மீது கொண்டிருந்த அளப்பரிய காதலையும், அந்த அமர காதலின் விளைவாக உருவான தாஜ்மகாலையும் பற்றிக் கூறும் 'மும்தாஜ் மஹால்' காப்பியமும், காந்தியடிகளைப் பற்றிய 'பாபுஜி' என்ற நூலும், நேதாஜியின் வீர வாழ்வை எதிரொலிக்கும் 'நேதாஜ்' என்ற படைப்பும், 'ஸ்வப்ன கதா' (கனவின கதை)வும், 'நா கதா' (என் கதை) என்ற நூலின் இரு தொகுதிகளுக்கும் இவரது சிறு காப்பிய நூலகளுள் குறிப்பிடத்தக்கவைகளாகும்.

இவரது மற்றொரு குறிப்பிடத்தக்க 'அரிய படைப்பு 'க்ருஸ்து சரித்ரா' (கிருஸ்து வரலாறு) என்பதாகும். இந் நூல் சாகித்திய அக்காதெமியின் பரிசு பெற்ற நூலாகும்.

திரு. ஜோஷ்வா கிருத்துவ சமயத்தைத் தழுவிய அரிஜன வகுப்பில் பிறந்தாராயினும் இந்து சமயத்தில் காணும் சிறப்பியல்புகளையும், இந்தியப் பணபாட்டின் உயர் அம்சங்களையும் அதியற்புதமாக உணர்ச்சிப் பெருக்குடன் புகழ்ந்துள்ளார் பாரத ஒருமைப்பாட்டுணர்வை உயிர் மூச்சாகக்கொண்ட இவர். தான் சார்ந்த கிருத்துவ மக்களிடையேயும் பாதிரிமாாகளிடையேயும காணும் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டவும் தவறவில்லை,

தற்கால தெலுங்குக் கவிதை வளர்ச்சிக்குக் கணிசமான பெருந்தொண்டாற்றியுள்ள திரு. ஜோஷுவாவை அரசும் மக்களும் பல வகையிலும் போற்றிச் சிறப்பித்துள்ளனர் அவருக்கு மத்திய அரசு பத்ம விபூஷண' விருதையும் ஆந்திரப் பல்கலைக் கழகம் 'கலாப்ரபூர்ணா' பட்டத்தையும மக்கள் 'கவி கோகிலா' (கவிகுயில்), 'நவயுக கவிச் சக்ரவர்த்தி' என்ற பட்டங்களையும வழங்கியதோடு 'கனகாபிஷேக்'மும் செய்து பெருமைப் படுத்தியுள்ளனர். குணடூர் மக்கள் தங்கள் அபிமான கவிஞருக்

குச் சொந்தமாக ஒரு வீடும் சிறிதளவு நிலமும் நன் கொடையாக வழங்கித் தங்கள் நன்றிக் கடனை புலப் படுத்தியுள்ளார்கள்.

இருபதுக்கு மேற்பட்டு அரிய இலக்கிய படைப்பு களை உருவாககி இததகு புகழ்மிகு பெருநிலையை எய்த, மிகத தாழ்நத அரிஜன கிருததுவக் குடும்பத்தில் பிறந்த திரு ஜோஷ்வாவிறகு வாழ்வில் எதிர்பட்ட தடைகள் எத்தனையெத்தனையோ! புலமையெனும் பேராற்றல் கொண்டு அத்தடைகள அனைத்தையும் தகர்த்துதெலுங்கு இலக்கிய உலகின் நெஞ்சத் தாமரையாய் விளங்கி அமரத் துவ நிலையை அடைந்துளளார்.

இந்திய அரசின் உதவித் தொகை பெற்று குண்டூரில் அமைதியாக வாழ்நதுவந்த திரு. ஜோஷ்வா மூனறாண்டு களாக வாத நோயால் பாதிக்கப்பட்டு தனது இரு மகள் களையும் மூன்று புதல்விகளையும் தனியாக்கி விட்டு **26-7-71** அனறு அமர நிலையை அடைநதுவிட்டார். தன் இறுதி மூச்சு வரை தெலுங்கு இலக்கிய வளர்ச்சிக்கு இடையறாப் பணியாற்றிய அவர்தம் புகழ் தெலுங்கு மொழி உள்ளளவும் நிலைத்திருககும் என்பது திண்ணம்.

# டாக்டர் பிங்களி லட்சுமிகாந்தம்

தெலுங்கு இலக்கிய உலகுக்கு ஐம்பதாண்டுகளுக்கு மேல் இடையறா பெரும்பணியாற்றி வந்துள்ள டாக்டர், பிங்களி லட்சுமிகாந்தம் முதுபெரும் தெலுங்குக் கவிஞரா வார் எண்பதாவது வயதில் மறைந்த இவர் இளமையில் மறைந்த காட்டூரி வேங்கடேஸ்வர ராவோடு சேர்ந்து பாடிய 'ஸௌந்தர நந்தம்' கவிதைக் காவியம் தெலுங்கு இலக்கிய உலகில் புதுப் பாதை வகுத்த கவிதைப் படைப் பாகும் புதியது புனையும் ஆர்வத்திற்கும் ஆற்றலுக்கும் இளமையிலேயே கட்டியங் கூறிய இப்படைப்பு இலக்கிய வாணர்களிடையே அந்நாளிலேயே இவருக்கு மிக உயர்ந்த இடத்தைப் பெற்றுத் தந்தது. புத்திலக்கியச் சிந்தனையில் மட்டுமல்லாது இலக்கியத் திறனாய்விலும் சொல்லாற்ற லிலும் நடிப்பிலும்கூட இவர் மிகு புகழ்பெற்றவராவார்.

கிருஷ்ணா மாவட்டம சல்லபள்ள கோட்டத்திலுள்ள அர்தாமூர் கிராமத்தில் 1895இல் பிறந்த இவர் அக்காலத் தில் புகழ்பெற்ற புலமைச் செல்வராகத் திகழ்ந்தவரும் பிரிக்கப்படாத சென்னை மாநில ஆஸ்தானக் கவிஞரு மான திரு சல்லப்பிள்ளை வேங்கட சாஸதிரி அவர்களைத் தன் ஆசிரியராக அடைந்து இளமையிலேயே பெரும் புலமையைப் பெற்றார். ஆசிரியரிடம் மூன்றாண்டுகள் முனைந்து கற்று தெலுங்கு மொழியிலும் சமஸ்கிருதத் திலும் போதிய புலமை பெற்ற பின்னர் மசூலிப்பட்ட ணத்தில் உள்ள நோபிள் கல்லூரியில் பி.ஏ பட்டமும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. பட்டமும் பெற் றார் சென்னையில் படிக்கும்போது தன படிப்புச் செலவை ஈடு செய்ய இலர் அவ்வப்போது தெலுங்கு நாடகங்களில் நடிக்க வேணடியதாயிற்று.

விரைவிலே தொழில் கலைஞர்களைப்போல தானும் ஒரு பணபடட நடிகரே யென்பதை தன் அரிய நடிப்பால் நிலைநாட்டினார் 'தர்மராஜு' 'வித்யா நநதுடு' ஆகிய பாத்திரங்களிலே தோன்றி பார்ப்போர் மனதில் நிலை பெறும் வண்ணம் சிறப்பாக நடித்தார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் படிக்கும்போதே காட்டூரி வேங்கடேஸ்வர ராவோடு சேர்ந்து கவிதைகளை இயற்றி வந்தார் அவ்வாறு புனையப்பட்ட கவிதைகள் இருவர் பெயரிலும் வெளியிடப்பட்டன. இக்கவிதைப் படைப்புககளின வாயிலாக இவ்விரட்டைக் கவிஞர்களின புகழ் தெலுங்கு இலக்கியவாணர்களிடையே ஒருவித புத்துணர்வை தோற்றுவிக்கத் தொடங்கியது அவர்கள் உருவாககிய 'தொலகரி எனும உணர்ச்சிப் பாடல்களின தொகுப்பு தெலுஙகு இலககிய உலகில் இவர்களுக்கு ஒளி மயமான எதிர்காலம் உணடு எனபதைப் பறை சாற்றி யது அடுதது இவாகள் வெளியிட்ட 'ஸௌநதர நந்தம்' மிகச் சிறநத காவியமாகும் புததரின சீடனான சுந்தரிக்கு மிடையே நிகழ்நத காதல் விவகாரத்தை விரித்துரைக்கும நூலாகும் இது. மற்றுமொரு குறிப்பிடத்தக்க நூல் 'பௌலஸ்தய ஹ்ருதயம' எனபதாகும் உள்ளத்தளவில் திருமால் பகதனாக விளங்கிய இலங்கை வேநதன இரா வணன சீதையைத் தேடி இராமபிரான இலஙகையினுள் நுழைந்தபோது இராமபிரானின் வருகையை எணணி மகிழ்ந்து கொணடதாகப் படைக்கப்பட்டுள்ளதாகும் இந் நூல்.

ஆந்திரப் பல்கலைக் கழகம் வேங்கடேஸ்வரா பல் கலைக்கழகத் தெலுங்கு மொழித துறைகளின் தலை வராகப் பணியாற்றியுள்ள இவர் சிறிதுகாலம் விஜய வாடா வானொலி நிலையத்தில் தெலுஙகு பேச்சு மொழிப் பகுதி அமைப்பாளராகவும் மதத்ய சாகித்திய அககா

தெமி உறுப்பினராகவும் மற்றும் ஆந்திர மாநில மொழி இலக்கிய அமைப்புகள பலவற்றில பொறுப்பான பதவி களை வகித்தும் பெருந்தொண்டாற்றி வந்துள்ளார்.

இவர் புத்திலக்கியப் படைப்புக்களைப் பெருமளவில் எழுதிக் குவிக்கவில்லை என்றாலும் தரமான நூல்கள் சில வற்றை இவா எழுதி வெளியிட்டுள்ளார், அவற்றின் வாயிலாக புத்திலக்கிய உணர்வும காலவோட்டத்திற் கியைந்த தத்துவச சிந்தனையும் கொண்டவராக இவர் எங்ஙனம விளங்குகிறார் என்பதை நனகு உணர்ந்து கொள்ளலாம்.

இவரது நூல்களுள் குறிப்பிடத் தக்கது 'கௌதம வியாசலு' என்பதாகும. பல்வேறு தலைப்புக்களில் எழுதப் பட்ட திறனாய்வுக் கட்டுரைகளைக் கொண்ட இத் தொகுப்பு இவரது ஆராய்ச்சிப் புலமைக்குச் சான்றாகும். மற்றொரு குறிப்பிடத்தக்க நூல் 'கௌதம நிகண்டுவு' என்பதாகும். ஆங்கில-தெலுங்கு மொழிச் சொற்களஞ்சிய மான இஃது மொழிபெயர்ப்புத் துறைக்கும பேருதவி புரியவல்லதாகும 'நா ரேடியோ பிரசங்காலு' என்ற நூல் இவர் பல்வேறு சந்தர்ப்பங்களில் வானொலியில் ஆற்றிய உரைகளின் தொகுப்பாகும் ஜகந்நாத பண்டி தரின சமஸ்கிருத கவிதையின் தெலுங்கு மொழிப் பெயர்ப்பான 'மதுர பண்டித ராஜம' என்ற நூலும் 'மானவுலந்தரு சோதரலு' என்ற நூலும் மொழி பெயர்ப்பு நூல்களாகும். 'சாகித்திய சில்ப சமீக்ஷ' குமார வியாகரணம்' ஆகிய நூல்களும் குறிப்பிடத்தக்கவை

இவரது இலக்கியச் சொற்பொழிவுகள் புகழ் பெற்றவைகளாகும். சிறந்த சொல்லாற்றலும் எழுத்தாற்ற லும் கொண்ட இவரது புலமைச் சிறப்பையும், தெலுங்கு மொழி வளர்ச்சிக்கு இவர் ஆற்றியுள்ள பெரும் பணியை யும் பாராட்டு வகையில் 1970ஆம் ஆண்டில் வேங்கடேஸ்

வரா பல்கலைக் கழகம் இவருக்கு 'டாக்டர்' பட்டமளித்துச் சிறப்பித்தது.

டாக்டர் பிங்களி லட்சுமிகாந்தம் அவர்கள் தம் எண்பதாவது வயதில் உஸ்மானியா பொது மருத்துவ மனையில் காலமானார். ஐம்பதாண்டுகளுக்கு மேலாக இடையறா இலக்கியத் தொண்டாற்றி, தெலுங்கு மொழி வளர்ச்சிக்கு ஆக்கந் தேடியராவார் டாக்டர் பிங்களி லட்சுமிகாந்தம் அவர்கள்.

# சிவசங்கர சுவாமி

தெலுங்கு இலக்கியத்துறை புத்துலகப் போக்கிற்கேறப புதிய புதிய வடிவங்களில் அழுந்தக் காலூன்றி வலுவோடும் பொலிவோடும் வளரத் தொடங்கிய காலத்தில அவ்வளர்ச்சிக்கு வேகமும் விறுவிறுப்பும் ஊட்டியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் 'சிவசங்கர சுவாமி' என இன்று அழைக்கப்படும் 'நவ்ய சாஹித்ய ஆச்சார்யா' தல்லா வஜ்ஜல சிவசங்கர சாஸ்திரி ஆவார்.

மேனாட்டுப் புத்திலக்கியப் போக்கு எவ்வளவு வலுவாகத் தாக்கியபோதிலும் அதற்கு இம்மியும் அசைந்து கொடுக்காத போக்கில் அன்றைய புகழ்பெற்ற எழுத்தாளர்கள் பலரும் பழைய மரபுப் போக்கினையே உடும்பு பிடியாகப் பிடிததுக் கொண்டிருந்த காலகட்டத்தில் புத்துலக மரபுகளை அடியொற்றிய புதிய புதிய படைப்புக்களை உருவாக்க இளைய தலைமுறையினைத் தூண்டி வளர்க்கும் அருஞ்சக்தியாக விளங்கியவர் சிவசங்கர சுவாமி ஆவார்.

புத்திலக்கியப் போக்கினை விரைந்து வளர்க்க மராட்டியத்தில்தோற்றுவிக்கப்பட்ட 'ரவிகிரண மண்டல்' கர்நாடகத்தில் எழுந்த 'கௌயர கும்பு'போல் தெலுங்கு இலக்கிய உலகில் அடுத்தடுத்து இரண்டு இலக்கிய அமைப்புக்களை உருவாக்கினார் இவர் 'சாஹித்தியசமிதி' 'நவ்ய சாஹித்ய பரிஷத்' என்ற இவ்விரு அமைப்புகளும் அக்காலத் தெலுங்கு இளம் எழுத்தாளர்களிடையே இலக்கியப் புத்தார்வப் பெருக்கைப் பொங்கியெழச் செய்தனவாகும். இளைய தலைமுறையினரிடையே உருவான இவ்வார்வத்தைத் தொடர்ந்து பல இலக்கிய இதழ்களையும் ஆரம்பித்து நடத்தினார். மேற்கூறிய அமைப்புகள் மூலம்

வெளிவந்த 'சாஹிதி' 'சகி' 'பிரதிபா' என்ற இலக்கிய இதழ்கள் தெலுங்கு எழுத்தாளர்கள் பலரை புத்திலக்கியப் போக்கிற்கேற்ப படைப்புக்களை உருவாக்கத் தூண்டின. இந்த இதழ்களின் மூலம் வெளிப்பட்டவர்களே இன்றைய புத்திலக்கியத் தெலுங்கு எழுத்தாளர்களில் பலரும் எனக் கூறின் அஃது மிகையாது.

அன்றைய சூழலில் இலக்கியத் துறையில் புதுமைப் போக்குகளை விரும்பியவர்களைவிட வெறுத்து ஒதுக்கியவர்களும் புதுமைப் போக்கானது பழமைச் சிறப்பை பாழ்படுத்திவிடும் என நம்பிய பழமையை எப்பாடு பட்டேனும் முனைந்து காக்க வேண்டுமென கச்சை காட்டி நின்றவர்களுமே அதிகம். புதிய எழுத்து மரபுகளை ஏற்காததோடு அதனை எள்ளி நகையாடிய பழமை விரும்பிகளைத் திருத்த வேண்டிய நிலையில் பல்வேறு மொழி இலக்கியங்களையும் உயர் சிறப்புக்களையும அத்தகையவர்களுக்கு எடுத்துரைக்கும் இன்றியமையாக் கருவியாக பன்மொழிப் புலமையை அவர் ஏற்படுத்திக் கொண்டார். மெட்ரிக்குலேஷன் தேர்வுக்குப் பின்னர் அவர் பள்ளிப் படிப்பைத் தொடர்வதற்கு மாறாக பல்வேறு மொழிகளைத் கற்றுத் தம் மொழிப் புலமையை இலக்கியத் திறனைப் பெருமளவில் வளர்த்துக் கொண்டார்.

புத்திலக்கிய ஊற்றுக் கண்களான ஆங்கிலம், ஃபிரெஞ்சு, ஜெர்மன் லத்தீன் போன்ற மேனாட்டு மொழிகளையும சம்ஸ்கிருதம், மராத்தி, இந்தி, வங்காளம் உருது, பிராகிருதம் போன்ற வட இந்திய மொழிகளையும கன்னடம் போன்ற தென்னக மொழியையும் கற்றதன் மூலம் பெற்ற பன்மொழிப் புலமையைக் கொண்டு பழமை விரும்பிகளுக்கு தற்கால இலக்கியச் சிறப்பின் உண்மைக் கூறுபாடுகளை உணர்த்திப் புத்திலக்கியப் பேரார்வ வளர்ச்சிக்கு ஆக்கம் தேடினார். புதிய இலக்கியச் சிறப்

பின் உண்மைக் கூறுபாடுகளை உணர்த்திப் புத்திலக்கியப் பேரார்வ வளர்ச்சிக்கு ஆக்கம் தேடினார். புதிய இலக்கிய மரபுகளை அடியொற்றி ஏராளமான தெலுங்கு இலக்கியப் படைப்புக்களை முனைந்து உருவாக்கிக் குவித்தார்.

இன்றைய தெலுங்கு இலக்கியத் துறையில் புகழ் பெற்ற கவிஞர்களாக விளங்கும் விஸ்வநாத சத்திய நாராயண, ராயப்ரோலு சுப்பாராவ், கிருஷ்ண சாஸ்திரி போன்றவர்களுக்கு அன்று தெலுங்குக் கவிதைத் துறையில் புத்துணர்வூட்டும் வழிகாட்டி இலக்கியப் படைப்பாக அமைந்தது சிவசங்கர சுவாமியின், 'ஹ்ருதயேஸ்வரி எனும் கவிதைத் தொகுப்பேயாகும். ஒத்த மனமும் உணர்ச்சியும் வாய்க்கப் பெற்றவைகள் என்றுமே ஒன்றுபடுவதில் பேரார்வமுடையவர்கள் என்பதை அழகுறச் சித்தரிக்கும் கவிதை நூலாகும் இஃது.

இவரது படைப்புகளுள் குறிப்பிடத்தக்க மற்றொரு பெரும்படைப்பு 'பத்மாவதி சரண சாரண சக்ரவர்த்த' எனும் முழு நீளக் கவிதை நாடகமாகும். தெலுங்கு கவிதை நாடகங்களிலேயே தலை சிறந்ததெனக் கருதப்படும் இந்நாடகம் நாடக அரங்குகளிலும் பல முறை வெற்றி நடை போட்டு புகழை ஈட்டியுள்ளது. வரலாற்று புகழ் பெற்ற சமஸ்கிருதக் கவிஞரான ஜெயதேவாவுக்கும் நடனமங்கையான பத்மாவதிக்குமிடையே இருந்த காதலையும் அக்காதல் 'கீத கோவிந்தம்' எனும் அமர காவியத்தை உருவாக்க எவ்விதம் தூண்டுகோலாயமைந்தது என்பதையும் காவியச்சுவை நனி சொட்டச் சொட்ட வ்வரிக்கிறது இக்கவிதை நாடகம்

இவரது குறிப்பிடத்தக்க மற்றொரு நூல் 'வகுல மாலிக' (மகிழ மாலை) எனும் காவியம் ஆகும் இஃது உருவக அடிப்படையில் அமைந்த காவியம் ஆகும். தான் அழகு செய்த காதலொருவனைப் பற்றி அவன் மார்பை

அலங்கரித்த மாலை கூறும் கூற்றாக அமைந்தது இக் காவியம்

இவர் மூலப் படைப்பாகவன்றி மொழி பெயர்ப்பாக வும் பல பல நூல்களை தெலுங்கு புதஇலக்கிய உலகுக்கு அளித்துளளார் மொழி பெயர்ப்பு நூல்களுள் குறிப் பிடதக்கவை சம்ஸகிருதத்தினின்றும் பெயர்க்கப்பட்ட 'கதா சரித் சாகரம்,' பாலி மொழியிலிருந்து பெயர்க்கப் பட்ட 'புத்த ஜாதகக் கதைகள்' வங்காள மொழியினின் றும் மொழி பெயர்க்கப்பட்ட ரவீந்திரநாத் தாகூரின் 'கோரா' மற்றும் இந்தியிலிருந்தும சில புதினங்களையும் மொழி மொழி பெயர்த்துள்ளார்.

கதை, கவிதை, நாடகம் காவியம், கட்டுரை, திறனாய்வு பற்றி இருபதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள இவரது அறுபதாம் ஆண்டு நிறைவு விழா வினபோது வெளியிடப்பட்ட மலர் இவரது அரிய கட்டுரைகளையும் படைப்புகளையும் தாஙகி சிறப்புமிகு பெருமலராக வெளிவந்தது.

இலக்கியத்துறையில் தனி முத்திரை பதித்து வந்துள்ள சிவசங்கர சுவாமி விடுதலைப் போராட்டத்தில் பேரார் வத்தோடு ஈடுபட்டு உழைத்தார். அதற்கு உறுதுணை யாகத் தன் எழுத்தாற்றலையும் பயன்படுத்தினார் பல முறை சிறை வாழ்க்கையையும் மேற்கொண்டிருக்கிறார்.

எண்பது வயதை எட்டிப் பிடிக்கும் இவர் இன்றும் இளமைத் துடிப்புடனேயே இருக்கிறார். இளமை தொட்டே தர்க்கம், வேதாந்தம், அத்வைதம் போன்ற தத்துவத் துறைகளில் அதிகமான ஈடுபாடு கொண்டிருந்த இவர் தமது அறுபதாவது வயதில் சந்நியாசம் மேற் கொண்டு குண்டூருக்கருகில் உள்ள ஒங்கோலைச் சேர்ந்த வேட்பாலம் என்னுமிடத்தில் அமைநதுள்ள ஆசிரமத்தில்

தூய துறவு வாழ்வை நடத்தி வந்தார். அவரது வாழ்க்கைமுறை தத்துவ விசாரணையைச் சார்ந்ததாயினும் இலக்கியததுறைத் தொடர்பை அவர் துண்டித்துக் கொண்டாரில்லை. ஆக்க மூட்டும் இலக்கியக் கருத்துக்களை சிந்தனைகளை அவ்வப்போது இலக்கிய உலகுக்கு வழங்கும் உள்ளம் படைத்தவர். இவரளவுக்கு எழுத்துத் துறையில் இளைஞர் களை ஊக்குவிக்கும் முதிய எழுத்தாளரை தெலுங்கு இலககிய உலகில் காண்பதரிது.

அவர் ஆற்றிய அளப்பரிய இலக்கியத் தொண்டினை பாராட்டி தெலுங்கு இலக்கிய உலகம் 'நவ்ய சாஹித்ய ஆச்சார்யா' (இன்றைய இலக்கிய ஆசான்) என்ற சிறப் புப் பட்டம் வழங்கிக் கௌரவிததுள்ளது. இன்றைய பெரும் எழுத்தாளர்கள் பலரும் இளமை தொட்டே தங் களை ஊக்கி வழி நடத்தி வந்த சிவசங்கர சுவாமியை தங்களது வழிகாட்டியாக (மூத்த சகோதரன்) என அழைத்துப் பெருமைப் படுத்தி வந்தனர். சாகித்திய அக்காதெமியிலும் தேசிய புத்தக டிரஸ்டிலும் ஆலோசக ராகப் பங்கேற்றிருந்த சிவசங்கர சுவாமி தெலுங்குப் புத்திலக்கிய மறுமலர்ச்சிக்கு ஆற்றிய அருந்தொண்டு இலக்கிய வரலாற்றில் என்றென்றும் போற்றப்படும் என்பது உறுதி.

# ராயப்ரோலு சுப்பா ராவ்

காலவோட்டத்திற்கேற்ப கொழுமையோடு வளர்ந்து வரும் இன்றைய தெலுங்கு இலக்கிய உலகின பெரு வளர்ச்சிக்கு முன்னோடியாய் அமைந்தோர் பலர். அவருள முக்கியமானவர்களாகக் கருதப்படுவோர் இருவர். ஒருவர் மறைநத பேரறிஞர் குருஜாடா அப்பா ராவ் மற்றொரு வர் பெரும் எழுத்தாளர் ராயப்ரோலு சுப்பா ராவ் ஆவர் முனனவர் தெலுங்கு உரைநடை வளர்ச்சியில் புரட்சிகரமான பெரும் மாறுதலுக்கு வழிவகுத்தார் என் றால் பின்னவர் தெலுங்கு மொழிக் கதைப் பாடல்களுக் கேற்ற புதிய சொற்செறிவையும் நடையழகையும் தோற்றுவித்தவர் எனக் கூறலாம்,

குண்டூர் மாவட்டத்தைச் சேர்ந்த புலமை சான்ற அந் தணர் குடுமபமொனறில 1892ஆம் ஆண்டில் பிறந்த சுப்பா ராவ் இளமைதொடடே கவிதை இலக்கியத்தில் அளவு கடந்த ஆர்வமும் பற்றும் கொண்டார், பள்ளி மாணவனாக இருநதபோதே கவிதைகள் எழுதலானார். பதினாறாம் வயதைக் கடக்கும் முனனரே செஞ்சொற் சுவை மிக்கக் கவிதைகள் பல இயறறி பலரையும் மகிழ் வித்தார் பள்ளிப் படிப்பைத் தொடர்ந்து குண்டூர் கிறித்துவக் கல்லூரியிலும் பின்னர் நிஜாம் கல்லூரியிலும் தம் கல்வியைத் தொடாந்தார். கல்லூரி சென றாரே தவிர அவருககுக் கல்லூரிப் படிப்பில் கவனம் செல்லவில்லை. இநத வகையில் அவர் குருநாதராக வரித்துக் கொண்ட கவிஞர் தாகூரையே ஒத்திருந்தார் எனலாம்.

இளமையில் கவிதை இயற்றுவதில் பேரார்வம் இருந் தது போன்றே அவதானப் பயிற்சி செய்வதிலும் இவருக்கு ஆர்வம் இருந்தது. இதற்குக் காரணம் இவரது அம்மாமனான அவ்வாரி சுப்பிரமணிய சாஸ்திரி அக்

காலத்தில் அஷ்டாவதானம், சதாவதானம் போன்று அவ தானக் கலைகளில் தலைசிறந்து விளங்கியதேயாகும். ஆயினும் இந்நிலை அதிக நாள் நீடிக்கவில்லை நாளடை லில் அவரது முழுக் கவனமும் ஆங்கில மொழிக் கதைப் பாடல்களின் எளிமையும அழகும அவரைப் பெரிதும கவர்ந்தன. அவற்றை அடியொற்றி தெலுங்கிலும் கதைப் பாடல்களை இயற்றத் தொடங்கினார்.

முதன்முதலாகக் காமம் இல்லாத பேரின்பக் காதலை திடமாக விளக்கவல்ல 'த்ரண கங்கணம்' என்ற காதற் இயற்றினார். பசும்புல்லாலான கைவளையைத் தன் தூய காதலின் சின்னமாக காதலன காதலிக்குத் தரும் நிகழசசி யைக் கொண்ட அககாவியம் தெலுங்குக்கேயுரிய மரபு வழி நடை சொல்லமைப்பு முதலியவை இல்லாத காவியம் என தெலுங்கு புலவருக்கு குறை கூறியது மாறுபட்ட புதிய நோககில் உருவாக்கப்பட்ட அக்காதல் காவியத்தை இளங் கவிஞர்கள் பெரிதும் ஏற்றிப் போற்றினர் தற் காலத் தெலுங்கு இலககியத்தின முதல் காவியமாக அதனைப் பாராட்டியது போனறே தமது காலத்தில தனித் துவம் கொணட கவிஞர்களில் முதல்வராகவும அவரை மதித்துப் போற்றினர். அதனைத் தொடர்ந்து ராயப் ரோலு 'ஸ்வப்பன கு'மாரன்' 'லலிதா' போனற தூய காதல் காவியங்களை உருவாக்கி இலக்கிய உலகுக்கு வந் தார். இவை காதற் காவியங்களாக அமைநதபோதிலும் தெலுங்குக் காவியததுறைக்கே இயல்பாக இருந்துவந்த காமச் சுவையும் ஆபாச வர்ணனைகளும் அறவே இல் லாத மரபுவழிக் காதல காவியப் போககிலிருந்து முற்றி லும் மாறுபட்டதாக அமைந்திருந்தன என்பது குறிப் பிடத் தக்கதாகும்.

காதலின் பிரிவாற்றாமையால் பெரிதும் துன்புறும் காதலியின் துன்ப உணர்வுகளை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்ட முயலும் 'விரஹ வீதி' (பிரிவின் துயரம்)

என்ற சிறு கவிதை நம் இலக்கியத்தின்கண் காணும் அகத் திணைப் பாடல்களைப் போன்றே எளிமையும் பொரு ளாழமும் கொண்டு திகழ்கின்றது. இன்பியல் போன்றே துன்பியல் காவியங்களை இயற்றுவதிலும் கைவரப் பெற்ற கவிஞராகத் திகழ்கிறார் ராயப்ரோலு. இதற்கு ஏற்ற எடுத்துக்காட்டுகளாக 'ஸ்நேகலதா தேவி' 'கஷ்ட கமலா' என்ற இரு துன்பியல் காவியங்களைக் கூறலாம வரதட்சணைக் கொடுமையால் ஏழைப் பெற்றோர் படும் துயரத்தைத் தாளாது தற்கொலை செய் கொளளும் இளம்பெண் 'ஸ்நேகலதா தேவி'யின சோகக் கதை ராயப் ரோலு சாந்திநிகேதனில் இருந்தபோது வங்கத்தில் நடந்த உண்மை நிகழ்ச்சியொன்றை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்ட உண்மைக் கதையாகும்.

இவரது கவிதைகளின் குறிப்பிடத்தக்க மற்றோர் சிறப்பம்சம் நாட்டுப் பற்றினை ஊட்டி வளர்ப்பதாகும். அந்த வகையில் இவர் தெலுங்கு நாட்டின் தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியாராகவே மதிக்கப்படுகிறார். ஆந்திர நாட்டின் அருஞ் சிறப்புக்களையும் பாரத நாட் டின் பழம் பெருமைகளையும பறைசாற்றும் அவரது கவிதைகளின் வீறுநடை பல்லாயிரக்கணக்கான இளைஞர் களை தட்டியெழுப்பித் தலைநிமிரச் செய்து விடுதலைப் போராட்டத்தில் பேரார்வப் பெருக்கோடு ஈடுபடத் தூண்டின என்பதில் ஐயமில்லை.

தாகூரின் மயக்கும் கவிதைகளின்பால் மனதைப் பறி கொடுத்த ராயப்ரோலு ஒரு சில ஆண்டுகள் சாந்தி நிகே தனத்தில் தங்கிய பின்னர் எழுதிய 'ஜட குச்சுலு' (ஜடை குச்சுகள்) என்ற காவியத் தொகுப்பு நூல் தாகூரின் எழுத்துச் சாயலிலேயே அமைந்துள்ளது. 'ஆந்திராவளி' 'தெலுங்குதோட' (தெலுங்குப் பூங்கா) போன்ற கவிதைத் தொகுப்புகள் ஆந்திர மண்ணின அருமை பெருமைகளை

யும் தெலுங்கு மொழியின் சிறப்புக்களையும் தெளிவாக விளக்குவனவாகும்

பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் உஸ்மானியாப் பல்கலைக் கழகத்தில் தெலுங்கு மொழிப் பேராசிரியாகப் பணியாற்றிய ராயப்ரோலு ஓய்வு பெற்ற பின்னரும் வெங்கடேஸ்வராப் பலகலைக் கழகத்தில் தம் பணியைத் தொடர்ந்தார்.

தெலுங்கு இலக்கிய உலகில் பெரும் மாற்றங்கள் பலவற்றிற்கு வழிவகுத்த ராயப்ரோலு பழம்பெரும் இலக்கியங்களிலும் இலக்கிய மரபுகளிலும் நிறை புலமை பெற்றவராவார் செக்குமாட்டு உணர்வில் சென்ற புலவர்களிடையே புதிய பாதை வகுக்க முனைந்த இவர் விரைவில் புதியதோர் கதைப் பாடல் இலக்கணத்தையே வகுத்து விட்டார். 'ரம்யா லோகம்' 'மாதுரி தரிசனம்' ஆகிய இரண்டு நூல்களும் அவருடைய புதிய கொள்கைகளை விரிவாக விளக்கும் செய்யுளியல் நூல்களாகும். இந்தப் புதிய கொள்கைகளின் அடிப்படையில் இவர் இயற்றிய கவிதைகளின் தொகுப்பு 'வனமாலிய' என்பதாகும் சிந்தனையைத் தூண்டவல்ல இவரது 'ரூபநவநீதம்' என்ற நாடகம் பல்லாற்றானும் தனித் தன்மை கொண்டதாகும்.

இவர் படைப்பாசிரியர் மட்டுமன்று தலைசிறந்த மொழிபெயர்ப்பாளருமாவார் மிகச் சிறந்த முறையில் பவபூதியின் 'உத்தர ராம சரிதை'யையும் மாகவி காளிதாசரின் மேகதூது'வையும் உமர்கையாமின் 'ரூபயாத்'தையும் தாகூரின் 'ஊர்வசி'யையும் அழகுற மொழிபெயர்ததளித்துள்ளார்.

தனக்கென தனி வழி வகுத்து உணர்ச்சிக் கவிதைகளை உருவாக்கிய ராயப்ரோலு முற்போக்கு தெலுங்கு எழுத்தாளர்களின் அமைப்பான 'நவ்ய

சாஹித்ய பரிஷத்தின்' தலைவராகவும் இந்திய சாகிந்திய அக்காதெமியின் ஆலோசகராக வும், ஆத்திரப் பிரதேச சாகித்திய அக்காதெமியின் செயற்குழு உறுப்பினராகவும் பணிய ாற்றியுள்ள இவரது இலக்கியத் தொண்டை போற்றும் வகையில பல விருதுகளை தெலுங்கு இலக்கிய உலகு வழங்கி பாராட்டி யுள்ளது. 1924ஆம் ஆணடிலேயே விஜய நகர ஆராய்ச் சிப் பல்கலைக் கழகம் 'கவிபூஷணா' எனற பட்டத்தையும் 1938இல் த்ரிலிங்க வித்யா மஹாபீடம் 'சாகித்ய ஸ்தாபக' என்ற விருதையும் அளித்து கௌரவித்துள்ளது. சுமார் முப்பதுக்கு மேற்பட்ட நூல்களை தெலுங்கில் வடித் துள்ள இவர் பங்கேற்காத தெலுங்கு இலக்கிய அமைப்பு களே இலலை எனலாம். 'மிஸ்ரமஞ்சரி' என்ற இவரது உணர்ச்சிப் பாடல் கவிதை தொகுப்புக்கு 1966ஆம் ஆண்டு சாகித்திய அககாதெமி பரிசளித்துப் பாராட்டி யுள்ளது.

# அனந்தகிருஷ்ண சர்மா

இன்றைய தெலுங்கு இலக்கியத் திறனாய்வுத் துறை வளர்ச்சிக்குக் கடந்த கால் நூற்றாண்டுகாலமாக அமைதியாக, ஆனால் அழுத்தமாக தொண்டாற்றியவர் திரு. ராள்ளபல்லி அனந்தகிருஷ்ண சர்மா அவர்களாவார். மிகச் சிறந்த இலக்கியப் பெரும் புலவராக மதிக்கப்படும் திரு. சர்மா அவர்கள் பழைய தெலுங்கு மரபுவழி தம் இலக்கிய வாழ்வை நிரல்பட நடத்தி வந்துள்ளவர். மிகச் சிறந்த இசைப் புலவராகவும் இசைப் பாடலாசிரியராக விளங்கும் இவர் கற்பனை வளமிக்கக் கவிஞருமாவர்..

தெலுங்கு இலக்கிய உலகில் எந்த அளவுக்கு மக்களால் மதித்துப் போற்றப்படுகின்றாரோ அந்த அளவுக்குக் கன்னட மக்களிடையேயும் பெரும்புகழ் பெற்றவராகவும் திகழ்கின்றார்.

அனந்தப்பூர் மாவட்டத்தில் உள்ள ராள்ளபல்லி எனும கிராமததில் 1893 ஆம் ஆண்டில் பிறந்த திரு. சர்மா தொடக்க சமஸ்கிருதக் கல்வியைத் தம் தந்தையிடம பெற்றார். பின் தொடர்ந்து தன கல்வியை மைசூர் கிருஷ்ண ப்ரம்ம தந்தர பரகால யதீந்திர சுவாமி அவர்களிடம் பெற்றார் இக்காலத்திலேயே சம்ஸ்கிருத மொழியில் பாடல்கள் இயற்றும் முயற்சியை மேற்கொண்டு அதில் வெற்றியும் பெற்றார்.

இளம் வயதிலேயே வியக்கத்தக்க அளவுக்கு நினைவாற்றல் பெற்றவராகத் திகழ்ந்தார். ஒருமுறை கேட்டவற்றை அடி பிறழாமல் அப்படியே திரும்ப ஒப்புவிக்கும் பேராற்றல் இவரிடம் இயல்பாகவே படிந்திருந்தது. இஃது விரைவாக நிறை புலமையடைய பெருந்துணை புரிந்ததெனலாம். பத்து வயது நிறைவுறுவதற்கு முன்

னரே இவர் மீராபாய், தாராபாய் ஆகிய இருவரையும் பற்றி இரு காவியங்களை தெலுங்கில் இயற்றி விட்டார் என்றால் அவர் இளமையில் பெற்றிருந்த பெரும் புலமையைப் புரிந்து கொள்ளலாம்.

மைசூர் அரசர் கல்லூரிப் பேராசிரியரான திரு சி. இராமலிங்கா ரெட்டி அவர்களின் நட்பு இவரது வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. அவரது துணையின் விளைவாக இருபது வயது நிரம்புவதற்கு முன்னரே அரசர் கல்லூரியில் தெலுங்கு மொழிப் புலவராகப் பணியாற்றத் தொடங்கினார். இதிலிருந்துதான் இவரது முறையான இலக்கியப் பணி தொடங்கியது. அதற்குப் பெருந்துணையாகவும் தூண்டுகோலாகவும் இருந்தவர் திரு. சி. இராமலிங்கா ரெட்டி அவர்களே ஆவார் அக்காலத்தில் புகழ் பெற்ற புதுமை வேட்கையாளராகவும், தெலுங்கு இலக்கியத்தில் நிறை புலமை பெற்றவராகவும், தலைசிறநத கல்வித துறையாளராகவும் மட்டுமின்றி, இவர் போற்றத்தக்க திறனாய்வாளராகவும் விளங்கினார். தெலுங்கு இலக்கிய உலகின அழுததமான இலக்கிய வளர்சசிக்கு உயரிய உரைகல்லாக மட்டுமின்றி அச்சாணியாகவும் எதிர்காலததில் அமையத்தக்கது திறனாய்வுத் துறை என்பதில் மிக அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்தார். அதன விளைவாகத் தன் தோழர்களின் சிந்தனையும் அக்கரையும் எப்போதும் திறனாய்வுத் துறையின்பால் திருப்ப இவர் தவறியதேயில்லை. அவ்வுணர்ச்சிகள் திரு. சர்மா அவர்களிடமும நாளடைவில் செல்வாக்கு பெற்றதில் வியப்பேதும் இல்லை.

இப்போக்கின் விளைவாக திரு. சர்மா எதையும் ஆய்வுக் கண்ணோட்டத்துடனேயே கண்டு மற்றவர்க்கு உணர்த்தலானார். வேமனாவைப்பற்றிய இவரது நீண்ட ஆய்வுரை அக்காலத்தில் புகழ் பெற்ற ஒன்றாக அமைந்தது. கடந்த கால இலக்கியப் படைப்புக்களை ஆய்வதோடு தறகால

இலக்கியப் படைப்புகளையும் ஆய்வுக் கண்ணோட்டத்தோடு பிறர்கரு உணர்ததிக் காடடுவதில பெரிதும் அக்கரை காட்டினார் என்பதற்கு இவர் ஆற்றிய தற்கால இலக்கியத்தைப் பற்றிய ஆய்வுச் சொறபொழிவுகளே தக்க சானறாக உள்ளது. மற்றும 'சாரஸ்வதாலோகம' (இலக்கியததைப் புரிந்து கொள்ளல்), 'ராயலராடி ரசிகதா,' போனற திறனாய்வுக் கட்டுரைகள் இவரது விமரிசன அறிவுக்கும் புலமைக்கும ஏற்ற எடுத்துக்காட்டுக்களாகும. காய்தல் உவத்தல் இன்றி ஒரு பொருட்கண் ஆயதலறிவோடு அமையும் இவரது திறனாய்வுகளும் கருத்துககளும இன்றைய தினம மற்றவர்களால் பின் பறறத்தக்க ராஜபாட்டையாக உள்ளத்தெனத் துணிந்து கூறலாம்.

தெலுங்கு இலக்கிய உலகின பெருந் திறனாய்வாளர் என்ற மகுடததை இவருக்குச் சூட்டியது தெலுங்கு இலக்கியததில் நாசன சோமனாவின் இடம்' என்ற கட்டுரையே யாகும். இக்கட்டுரை வெளியானபோது இவருக்குக் கிடைத்த பாராட்டுகளைவிட வசைமொழிகளே அதிகமாக இருந்தன இக்கால இலககிய வல்லுநர்களை திகைக்க வைத்த இககட்டுரை மீது வீசப்பட்ட கண்டனக் கணைகளையெல்லாம் லாவகமாக முறியடித்தார். திரு சி. ஆர். ரெட்டி போன்றோரின் ஆதரவும் புகழ்மொழியும இவரது வெறறிக்குப் பெருநதுணை புரிந்தது இவ்வாறு கசப்பான உண்மைகளையும் நடுநிலைமை நோக்கில் ஆய்ந்து ஏற்கும் பக்குவமான திறனாய்வுப் போக்கை வலுவானதாக தெலுங்கு இலககிய உலகில் காலூன்ற வழி வகுத்தார் திரு. சர்மா,

திறனாயவு என்ற போர்வையின் கீழ் எத்தகைய செல்வாக்குப் படைத்தவர்கள் தவறு செய்தாலும், அதனைத் தாக்கித் தகர்தது நேர்வழியில், திறனாய்வு

நடை போட உதவுவதற்கு இவர் அஞ்சியதோ பின் வாங்கியதோ இல்லை என்பதற்கு எத்தனையோ உதார ணங்களை அடுக்கடுக்காகக் கூறமுடியும். ஒரு சமயம் திரு சாமா தன் குருவாகவும் தலைசிறந்த தனது ஆதர வாளராகவும் மதித்து வந்த சி ஆர் ரெட்டி அவர்கள் ரங்கநாத ராமாயண' ஆசிரியர் பற்றிக் கூறியிருந்த திறனாய்வுக் கருத்துக்கள் தவறுடையதாகவும் ஏற்கத் தகாததாகவும் உண்மையை மூடி மறைப்பதாகவும் இருந்தது ஆந்திரப் பல்கலைக் கழகத் துணைத் தலை வராகவும் பெரும செல்வாக்குப் பெற்ற பெரும் புள்ளி யாகவும் விளங்கிய திரு ரெட்டியின் தவறான கருத்துக் களை மறுத்துரைக்கும் துணிவு யாருக்கும் வரவில்லை ஆனால், தவறறைத் தவறென்று கூறத் தயங்காத நடு நிலைத திறனாய்வு உணர்ச்சி படைதத திரு சர்மா அவர்கள் தமது குருவாக மதித்து வந்த திரு ரெட்டியின் கருத்தைத வன்மையாக எதிர்த்து முழக்கமிட்டார்

திறனாய்வு பற்றி இவர் கூறியுள்ள கருத்துக்கள் சிந்தனையைக கிளறுவதாக அமைந்துள்ளன 'வாழ்க்கை யைப் பிரதிபலிககும முறையிலேயே கலை அமைய வேணடும் எனற கட்டாயமில்லை அப்படி இருகக வேண்டும என்று வற்புறுததும் திறனாய்வாளன மேற போக்கானவன ஆவான, 'என்ன இருக்கிறது' என்பதைக் காட்டும் இலக்கியத்தைவிட 'என்ன இருக்கலாம்' என்று விளக்கும் இலக்கியம சற்று மேலானது ஆனால் 'என்ன இருக்க வேண்டும்' என்று உருவகித்துக் காட்டும் இலக்கி யமே மிகச சிறநதது ஓர் இலககியத்தைக் எடுததுக் கொண்டால், நீதி, சமூகம், (தர்மம்) இதயம் ஈர்க்கும தன்மை ஆகியவற்றை எந்த அளவிறகுக் கொண்டுள்ளது என்பதை நாமெ ஆராய்ந்து பார்க்கிறேன நீதிகளை இயம்பும் இலக்கியம உணமை நிலையைச் சித்தரிக்கும் இலக்கியம் இலட்சிய நிலை இலக்கியம் ஆகியவற்றை

முறையே படிப்படியாக உயர்ந்தனவாக நான் கருது கிறேன்.

எழுத்துப் படைப்பாளி எத்தகையவனாக இருக்க வேண்டும் என்பதை விளக்கும்போது இலக்கியம் எழுத்தாளனின் வாழ்க்கையுடன நெருங்கிப் பிணைந் துள்ளது தன்னுடைய குறைகளை உணர்ந்து அவற்றைத் திருத்திக் கொள்ள உணமையில் முயற்சிக்காதவன் பிறருக்கு எதை எடுத்துச் சொல்லும உரிமையற்றவனா வான் என்பதைச் சற்று அழுததமாகவே கூறுகிறார்

அவர் கல்லூரியில் ஆசிரியப் பணியாற்றிய போதிலும் கல்லூரிப் பட்டங்கள் ஏதும் பெற்றவரில்லை. ஆயினும் தற்கால இலக்கியப் போக்குகளைத் துல்லியமாக மதிப் பிட்டறியும் கூர்த்தமதி படைத்தவராக விளங்குகிறார்.

இளமையிலேயே சமஸ்கிருதத்தில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்த திரு சர்மா பல வடமொழிப் படைப்புக்களை தெலுங்கில பெயர்ததாா. அவற்றுள் சிறந்தனவாகக் கருதப்படுபவை 'ஹாலாவின் காதா சப்த சதி' கவிதைகள் காளிதாசரின் 'ரகு வம்சம்' பாசாவின 'ஸ்வபன வாச வதததா' அணமையில வெளிவந்த வேதாந்த தேசிகரின் 'அபீதிஸ்தவா' போனறவைகளாகும்.

இளமை முதலே இசையுணர்வு நிரம்பப் பெற்ற இவர் புகழ்பெற்ற இசை வல்லுநர் திரு பீடாரம் கிருஷ்ணப்பா விடம் இசையை முறையாகப் பயின்று தேர்ச்சி பெற்றாா. புரந்தரதாசரின் சமகால இசைப் புலவரான அணணமாச் சாரியாரின் நூறு பாடல்களுக்கு இசையமைத்தார். அவை இன்று இசை மேடைகளில் முழங்கி வருகின்றன. இவர் இயற்றிய 'பெனுகொண்ட கொண்ட' (பெனுகொண்டா மலை) என்ற அரிய பாடல் தெலுங்குக் கவிதைகளில தலைசிறந்த கதைப் பாடல் நூலாக விளங்குகிறது.

இவர் தெலுங்கைப் போலவே கன்னட மொழியிலும் நிறை புலமை பெற்றுள்ளதால் கன்னட மொழியிலும் ''ஜீவன மத்துகலே'' (வாழ்க்கையும் கலையும்) ''கான மாலே'' (இசைக் கலை) முதலிய தலைசிறந்த உரைநடை நூல்களை கன்னடத்தில் எழுதியுள்ளார்.

இவர் தெலுங்கிலும் கன்னடத்திலும் இசைத் துறைக்கும் இலக்கிய திறனாய்வுத் துறைக்கும ஆற்றியுள்ள பெரும் பணியைப் பாராட்டி 1960இல் ஆந்திரா லலித்கலா அக்காதெமி 'கான்கலா பரிபூர்ணா' என்ற விருதையும், கன்னட இசை மாநாடு 'கான கலா இந்து' (சமுத்திரம் என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தன சென்னை மியூசிக் அக்காதெமி அவருக்கு வரவேற்புத் தந்து பாராட்டியது. கன்னட ஆந்திர மாநிலங்களில் பல்வேறு இலக்கிய இசை அமைப்புகளில் பொறுப்பான பதவிகளில் அங்கம் பெற்ற அவர் முதுமையிலும் இலக்கிய இசை ஆராய்ச்சியிலும் ஆழ்ந்த சிந்தனையிலும் தம் பொழுதை செலவிடலானார்.

# காசி கிருஷ்ணாச்சாரியா

இக்காலத் தெலுங்கு எழுத்தாளர்களுள் மரபொழுங்கு வழுவா பண்டித-கவிகள் ஒரு சிலரேயுண்டு. அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் திரு காசி கிருஷ்ணாச்சாரியா அவர்கள் ஆந்திர மாநில 'அரசவைக் கவிஞர்' என்ற சிறப்புக்குரிய இவர் தெலுங்கு இலக்கிய உலகில் ஒரு சிறந்த யோகியராகப் போற்றப்படுகிறார்,

பழங்கால முனிவர்களிடத்தே காணப்பட்ட அத்தனை சிறப்பம்சங்களும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் வழி வந்த முனிபுங்கவராக-கவிச் செல்வராக கற்றோரால் மதிக்கப்படும் இவர் இக்கால யோசியாராகப் போற்றப்படுவதில் வியப்பேதும் இல்லை.

இவர் ஆந்திர மாநிலத்தில் உள்ள மசூலிப்பட்டணத்தில் 1872ஆம ஆண்டில பிறந்தார் பழைய பாரம்பரியப் படி இவர் இளமையிலேயே தெலுங்கிலும் தமிழிலும் வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றார் இதன் விளைவாக இவர் பத்து வயதிலேயே கவிதைகளை இயற்றத் தொடங்கி விட்டார்

சிறு வயது முதலே நுணமான் நுழைபுலம் மிக்கவராகத் திகழ்ந்த கிருஷ்ணாச்சாரியா ஒரே சமயத்தில் பல செயல்களைச் செய்யும் ஆற்றல் உள்ளவராக இருந்தார். இவ்வாறு ஒரே சமயத்தில பல செயல்களைச் செய்வதை 'அவதானம்' எனக் கூறுவர், ஒரே சமயத்தில் எட்டுக் காரியங்கள் செய்பவரை 'அஷ்டாவதானி' என்றும் நூறு காரியங்களைச் செய்யும் ஆற்றல் பெற்றவர்களை 'சதாவதானி' என்றும் கூறுவர். அண்மைக் காலத்தில் வாழ்ந்து மறைந்த மகாமதி செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள்

தமிழ்நாட்டின் மிகச் சிறந்த சதாவதனியாகத் திகந்தவ ராவார்

இத்தகைய அவதானத் திறமை இயல்பாக வாய்க்கப் பெற்றவர் கிருணாச்சாரியா. இவர் தமது முதல் அவதா னததை தம பத்தொன்பதாம் வயதில் குண்டூரில் குழுமி யிருந்த அறிஞாகள் மததியிலே செய்து காட்டித் தம் ஆற்றலைப் பலரறியச் செய்தார் இந்த அவதானத்தின் தமக்குள்ள அபார நினைவாற்றல் காவியப் புலமை மொழித்திறன கூரிய நுண்ணறிவு நொடி யில் கவிதை இயறறும் ஆற்றல் ஆகிவற்றைப் புலப்படுத்தி குழுமியிருந்தோரை வியப்பிலாழ்த்தினார் குழு மியிருந்தோர் விடுத்த வினாக்களுக் கெல்லாம் விநாடியில் தக்க விடை கூறி ஆச்சரியததில மூழ்கடித்தார். இதன்மூலம் இவரது புகழ் எங்குமபரவத தொடங்கியது.

குண்டூர் அவதானத்திற்கு அடுத்தபடியாக மசூலிப் பட்டணத்தில் 'சதாவதான' சாதனையைச் செய்து காடடினார் தேர்ந்தெடுத்த கவிகளும எழுத்தாளர்களு மாக நூறு அறிஞர்கள் விடுத்த வெவ்வேறு வகையான நூறு கேள்விகட்கு வினாதொடுதத வினாடியே தக்க விடை கூறி 'சதாவதானி' எனற பட்டத்தைப் பெற்று தம் புகழை நாடெங்கும் பரவச் செயதார். தெலுங்கு நாட்டி லேயே மிக இளய வயதில் 'சதாவதானி' பட்டம பெற்ற வர் இவரே எண்ணற்ற பரிககளோடு 'அவதான சிரோன மணி' என்ற பட்டத்தையும் மக்கள் இவருக்களித்துச் சிறப்பிததனர்.

தான் பிறந்த சொந்த ஊரில் பேரறிஞர்கள் குழுமிய கூட்டத்தில் தான் பெறற சிறப்புகளை எண்ணிப் பூரித் தார் பல்வேறு இடங்களிலிருந்துவந்த அழைப்புகளை ஏற்று நாடெங்கும் சுற்றுப் பயணம் செய்து தம அவ தானத திறமையை நாடறியச் செய்தார். மணிக்கு இரு நூறு கவிதைகள் இயற்றித் தம் கவிபாடும் பேராற்றலை

வெளிப்படுத்தினார். எவ்வித முன்னேற்பாடோ ஆயத்த மோ இன்றி எண்ணிய மாத்திரத்தில் கடல்மடை திறந் தாற் போன்று பொழியும் கவிதைகளை சுருக்கெழுத்தாள ரால் கூட குறிக்க முடியவில்லை என்றால் இவரது கவி பாடும் ஆற்றலுக்கு வேறு என்ன உவமை கூற முடியும்? இக்காலத்தில் இவர் மகாமகோபாத்தியாயா வித்யா வாரிதி பௌராணிகா ரத்னம் என்பன போன்ற எண் ணற்ற பட்டங்களைப் பெற்றார். இவரளவுக்கு அவ தானத் திறமையும் இம்மென்னும் முன்னே எழுநூறு எண்ணூறு என்று பாடும் பேராற்றல் பெற்ற வேறு கவிஞர்களை தெலுங்கு இலக்கிய உலகில் காண்பது அரி தாகும்.

இலக்கியத்தில் மட்டுமல்லாது வேதாந்தம் தருக்கம் கணிதம் என்பன போன்ற பல்வேறு துறைகளிலும் நிறை யறிவு பெற்றவராகத் திகழ்ந்தார் ஆங்கிலத்தையும் வேறு பல இந்திய மொழிகளையும ஆசிரியர் உதவியின்றியே கற்றறிந்தவர் இசையிலும் நல்ல தேர்ச்சியும் புலமையும் உள்ளவராகத் திகழ்ந்தார. வீணை வயலின் தபேலா போன்ற இசைக் கருவிகளை இசைப்பதிலும் இவர் திறமை பெற்றவராக விளங்கினார் இதுமட்டுமா? தச்சு வேலை மண்பாண்டம் செய்தல் நெசவு ஆகிய தொழில் களையும் தமக்கு விருப்பமான வேலைகளாகச் செய்வது இவர் வழக்கம் மேலும் இளமை முதலே மல்யுத்தம் குச்சி விளையாட்டுகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார் இவ்வாறு பல்வேறு துறைகளிலும் திறமை பெற்ற பல்கலைச் செல் வராகத் திகழ்ந்தவர் காசி கிருஷ்ணாச்சாரியா.

இவர் சிறிது காலம் குண்டூரில உள்ள கல்லூரியொன் றில் தெலுங்கும வடமொழியும் பயிற்றுவிக்கும் ஆசிரிய ராகப் பணியாற்றினார். தனக்கு விடுப்புக் கொடுப்பதில் நிர்வாகம் காட்டிய அசட்டையின் காரணமாகப் பதவி யை விட்டு விலகித தனக்குப் பிடித்தமான சுற்றுப் பயணங்களை மேற்கொண்டு நாடெங்கும் சமஸ்கிருத

இலக்கியச் சிறப்பைப் புலப்படுத்துவதில் தீவிரமாக ஈடு பட்டார்.

இவரது பாரதீயக் கலைப் புலமையையும் இலக்கியப் பேரறிவையும் பாராட்டி குடியாட்சித் தலைவர் பரிசளித்துப் பாராட்டினார் ஆந்திர மாநில அரசும் அவரைத் தமது ஆஸ்தானக் கவிஞராக நியமித்துப் பெருமை பெற்றது

இவர் தம் வாழ்நாளில் பெரும் பகுதியை வடமொழி இலக்கியச் சிறப்பைப் பிறரறியச் செய்வதிலேயே செல விட்டார் அதன பொருட்டு எளிதாக வடமொழி பயிலத் துணையாயமைய வல்ல பாட நூல்கள பலவற்றையும் எழுதித் தத்துள்ளார் 'கிரியா தர்சம்' வால்மீகி ஜீவ சரித்திரம்' 'சமஸ்கிருத சம்வாதம்' போன்ற நூல்கள் புதிதாக வடமொழி பயில்வோருக்குப் பெரிதும பயனபடத்தக்க துணை நூல்களாகும் இவ்வகையில் இவர் தயாரித்து வெளியிட்ட மற்றொரு பெரு நூல் 'ஆந்திர—சமஸ்கிருத' அகராதியாகும்

கிருஷ்ணாச்சாரியருடைய 'பதரீநாத சுப்ரபாதம்' என்ற வட மொழி நூல் பக்தர்கள் பெரிதும் போற்றி நாடோறும் இறை வணக்கத்திற்குப் பயன்படுத்தும் நூலாகும.

ஆந்திராவில் மட்டுமல்லாது கர்நாடகம் தமிழ்நாடு உட்பட தென்னகமெங்கும் பயணம் செய்து தமக்குள்ள கலையறிவை இலக்கியப் புலமையை அவதானத் திறமையை கவிச்சிறப்பைம் புலப்படுத்தியுள்ள இவர் ஆந்திர அவதான வரலாற்றில் மட்டுமல்லாது இந்தியக் கலைகளின் நிறையறிவுப் பெட்டகமாகத் திகழ்ந்து இலக்கிய வரலாற்றில் சிறப்புமிகு இடததைப் பெற்றுளளார் எனில் அது மிகையன்று.

# முப்பாள ரங்கநாயகம்ம

1920ஆம்ஆண்டுமுதல் துரிதமாக வளர்ச்சிபெறத் தொடங்கிய நவீன தெலுங்கு இலக்கிய வளர்ச்சிப் பாதையில் அதிக அளவில ஆண் எழுத்தாளர்களே பெரும்பங்குபெற்று வந்தார்கள். இந்நிலையே, தமிழ், மலையாள, கன்னட மொழி இலக்கியப் பகுதிகளிலும் நீடித்தது எனலாம். அங்கொருவர் இங்கொருவராகப் பெணகள் இலக்கியப் பணியாற்றியபோதிலும் அஃது மக்களின கலனத்தைப் பெரும் அளவில் கவருவதாக இருந்ததில்லை.

ஆயினும் தெலுங்கு இலக்கியத் துறையைப் பொறுத்தவரை 1920ஆம் ஆண்டிற்குப் பிறகு தெலுங்கு இலக்கியவுலகில் அசுர வேகத்தில் தலை தூக்கியவர்கள் பெண் எழுத்தாளர்கள் என்பது மறுக்க முடியாத உண்மை.

அவர்களது இலக்கிய ஆதிக்கம் இன்றுவரை சரியாமல் நிலைகுத்தி நிற்பது வியப்புகுரிய ஒன்று. அதற்கான பெரும்பங்கு முப்பாள ரங்கநாயகியம்ம, த்விவேதுல விசாலாட்சி. ஜானகி ராணி, லதா, வாசிரெட்டி சீதா தேவி, பரிமளா சோமேஸ்வர், யத்தனபூடி சுலோசனா ராணி' ஸ்ரீதேவி, துரகா ஜானகி ராணி, சாரதா போன்றவர்களையே சாரும்.

ஆண் எழுத்தாளர்கள் பெண்களின் பெயரை புனை பெயராகக் கொண்டு எழுத்துப் படைப்புக்களை வெளியிடுவதுதான் எங்கும் காணும் முறையாக உள்ளது. ஆனால், தெலுங்கு இலக்கிய உலகில் இதற்கு மாறான போக்கு ஏற்பட்டிருப்பது விந்தையானதாகும். அங்கே பல பெண் எழுத்தாளர்கள் ஆண்களுக்குரிய பெயர்களை புனை பெயராக வைத்துக் கொண்டு இலக்கியம் படைத்து வருகிறார்கள்.

தெலுங்கு பெண் படைப்பாளிகளுள் குறிப்பிடத்தக்க வராக இன்று விளங்குபவர் முப்பாள ரங்கநாயகியம்ம ஆவார்.

பதினைந்தாவது வயதிலேயே இலக்கியப்பணியை மேற்கொண்ட இவர், பகுத்தறிவுச் சிந்தனையின் அடிப் படையில் தன் எழுது கோலை இலக்கியப் பணிக்கென மிகத் திறமையுடன் கையாண்டு வருகிறார்.

பெண்களின் உள்மன உணர்வுகளை உளவியல் அடிப் படையில அற்புதமாகச் சித்தரிக்கும் கலையில கைதேர்ந்த வராக விளங்கும் முப்பாள ரங்கநாயகியம்ம, குடும்பச் சூழலில் ஏறபடும் மேடு பளளங்களுக்கிடையே கணவனும் மனைவியும எதிர்கொள்ளும் எத்தனையோ பிரச்சினை களை உள்ளங்கை நெல்லிக்கனி எனத் தெள்ளிதின் எடுதது விளக்குகிறார்.

பழமை பாசி படர்ந்த குடுப்பத்தில் புதுமை உண்ர் வும் சுதந்திரச் சிநதனையும உள்ள பெணகள் படும் தொல்லைகளை—போராட்டங்களை அற்புதமாகச் சித் தரிக்கும்வண்ணம் பாத்திரங்களைப் படைத்துத் தன் நாவல்களில் உலவ விடுகிறார்.

பழமைப் போக்குகளை விமர்சிப்பதிலும்கூட தனக்கென ஒரு தனி பாணியை வகுத்து தன் பேனாவை ஓட வைத்துக் கொணடிருப்பவர் முப்பாள ரங்கநாயகியம்ம என்று சொன்னால்கூட மிகையாகாது. சுருங்கச் சொன்னால் இராமயணாப் பாத்திரங்களையே நேரிடையாகவும்மறை முகமாகவும் பகுத்தறிவு அடிப்படையில் விமர்சிக்கும் வகையில் தன் படைப்பிலக்கியங்களில் கதாபாத்திரங் களைப் பாங்கோடு கையாண்டு வாசகர்களை வலுவாகச் சிந்திக்கத் தூண்டிவரும் மறுமலர்ச்சி எழுத்தாளரே ரங்க

நாயகியம்ம சமூகக் கோணல் நிலைகளை, சமூகத்தில் புரையோடிக்கிடக்கும் பத்தாம்பசலித்தனமான பழமைப் போக்குகளை, அறியாமைச் சேற்றில் உழன்று கொண்டு பழமைக்கும் புதுமைக்கும் இடையே நடைபெறும் போராட்டங்களைச் சித்தரிப்பதிலும் வாசகர்களைச் சிந்திக்கத் தூண்டுவதிலும தனி ஆற்றல் பெற்ற எழுத்தாளராக விளங்கி வருகிறார்.

பெண்ணுலகப் பிரச்சினைகளைத் தன் கழுகுக் கண்களால் கண்டுணர்ந்து, அவற்றைத் தன் எழுதுகோலால் விண்டுரைக்கும் இவரது எழுத்துக்களுக்கு ஏராளமான பெண் வாசகர்களும் பெண்ணுலகின் பிறபோக்கிலே கழிவிரக்கம் கொண்ட ஆண் வாசகர்களும் நிறைய உள்ளனர்.

இவரது படைப்புக்களில் பல தெலுங்கு மொழி இலக்கிய இதழ்களில் தொடராக வந்து பின்னர் நூலுருப் பெற்றவைகளே அதிகம்.

சமூக வாழ்வின் அந்தரங்கங்களை—குறிப்பாக பெண்களின் உள்மன உணர்வுகளைத் துல்லியமாகத் எழுதத் தெரிந்தவர்கள் பெண்களே என்றாலும், அதனை இதமான முறையில் இனிய சொல்லாட்சியோடு படிப்போர் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியச் செய்வதில் முப்பாள ரங்கநாயகியம்மாவுக்குக் கிடைத்த வெற்றி மற்ற பெண் எழுத்தாளர்களுக்கு இதுவரை கிடைத்துள்ளதா என்பது கேள்விக் குறியாகவே உள்ளது.

இவரது முதல் படைப்பு 'கிருஷ்ணவேணி' என்ற புதினமாகும் இதில் கன்னிப் பருவத்தில் காதலித்த கதாநாயகி சந்தர்ப்ப சூழ்நிலையால் மற்றொருவனை மணக்க நேர்கிறது அவளது இளமைக்கால காதல் விவகாரங்கள்

கணவனுக்குத் தெரியவே இருவரும் பிரிய நேர்கின்றது கதையின இறுதியில் மீண்டும இருவரும் ஒன்றுகூடி வாழ்வதாக அமைததுள்ளார் ஆனால் அவரது ரசிகர்கள் அவ்வின்பவியல் முடிவை விரும்பாததால் கணவனைக் கொடுமைக்காரனாக அமைதது இறுதி முடிவை துன்பியலாக மாற்றி அமைத்து விட்டார்.

அவரது படைப்புக்களில் மிகச் சிறந்த ஒன்றாகத் திறனாய்வாளர்களால் மதிக்கப்படுவது 'பலி பீடம்' என்ற புதினமாகும் 1965ஆம் ஆணடில் ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காதெமியின் பரிசு பெறற இப்புதினம் கலப்பு மணப் பிரச்சினையை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டதாகும்.

இலட்சிய உணர்வுகட்கும் பிரத்தியட்ச நடைமுறைகளுக்கும் இடையே இருக்கும் இடைவெளியை அருமையாகச் சித்தரிப்பது இப்புதினம.

இதன்பின் வெளிவந்த படைப்பு 'ரசயித்ரி' (பெண எழுந்தாளி) எனும் கலைத் திறன்மிக்க புதினமாகும் புகழ்பெற்ற எழுத்தாளி ஒருத்தி தன குடும்பச் சூழலில் சந்திக்கும் பல்வேறு கசப்பான உண்மைகளை பிரததியட்ச அடிப்படையில் சித்தரிப்பது இப்புதினம் எழுததால் புகழ்பெற்ற ஒரு பெண் எழுத்தாளி பல்வேறு ஆண்களைச் சந்தித்து அளவளாவ நேரிடுவதும் அதனால் கணவன மனக் கசப்படைவதும் அது அவர்கள் மகிழ்ச்சிகரமான மண வாழ்வுக்குப் பேரிடியாக அமைவதும் சிறப்பாகச் சித்தரிக்கப்படுகிறது இப்புதினம் வாயிலாக இவ்வெழுத்தாளியின் உண்மை மன உணர்வுகளை நம்மால் ஓரளவு நன்றாகவே புரிந்து கொள்ள முடிகிறது பெண்ணிற்குள்ள சுதந்தர உணர்வு அவளுக்குள்ள சமூகப் பொறுப்பு எழுத்தில்

அவளது கடமை படைப்பு லட்சியம் ஆகியவைபற்றியெல்லாம் ஆசிரியை ஆங்காங்கே அழுத்தமாகக் குறித்துச் செல்வதைக் காணும்போது இப்புதினம் இவரது வாழ்க்கையை அடியொற்றி எழுந்ததோ என்றுகூட நம்மை நினைக்கத் தூண்டுகிறது.

இவரது மற்றொரு இரட்டை நாவல் 'ஸ்வீட் ஹோம்' (இனப இல்லம்) எனபதாகும் இந்நூல் பெண்களிடையே பெரும் வரவேறபைப் பெற்றதாகும் குடும்பத்தின் இன்பச் சூழலுக்குக் கணவன் எவ்வாறு மையமாக அமைய முடியும என்பதை வலியுறுத்தும் அதே நேரத்தில் அத்தகைய இனியச சூழல உருவாக இடையூறாக உள்ள பொருளற்ற சமுக மரபு பழக்க வழக்க ஒழுக்கங்களையும் கடுமையாகச் சாடத தவறவில்லை.

காதலில் தோல்வி கண்ட பெணணொருத்தி இறுதியில் துறவு பூணடொழுகுவதைச் சித்தரிப்பது இவரது மற்றொரு புதினப் படைப்பு 'ஸ்திரி' (பெண்) எனபதாகும மற்றும் 'கூலின கோட லு' (சரிந்த சுவர்கள்) போனற புதினங்கள் குடும்பப் பிரச்சினைகளை அடித்தளமாகக் கொண்டு பினனப்பட்டவைகளாகும்.

இவரது படைப்புக்களில் குறிப்பிடத்தக்க மற்றொரு புதினம் 'பேக்க மேட லு' (காகித மாளிகை) என்பதாகும் பெண்ணுள்ளத்தில் எழும புதுப்புதுச் சிந்தனைகளுக்கு கட்டியங்கூறும் இப்புதினம் சுதந்திரப் போக்குள்ள பானுமதி சந்தர்ப்ப சூழ்நிலைகளின் தன்மையைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் இருந்தும் அவற்றோடு ஒத்துப் போகும் மன இயல்பு இல்லாததால் எழும் விளைவுகளையும் இளமையில் நெஞசத்தில் தேக்கி வைத்திருந்த நம்பிக்கை சுதந்திர உணர்வு இவையெல்லாம் உண்மை வாழ்வில் தவிடு பொடியாவதையும் கண்டு மிரளுவதையும் இறுதி

யில் கட்டுகளால் உருவாக்கப்பட்ட குடும்பச் சூழலுக்குள் தன்னை அடைக்கலமாக்கிக் கொள்வதையும் அழகுறச் சித்தரிப்பது இப்புதினம்.

ஆரம்ப நாட்களில் இவரது நாவல்களில் காணப் பட்ட புரட்சிக் கனல்கள் பிற்காலப் படைப்புகளில் சூடு குறைந்ததாகக் காணப்படுவது இவரது அனுபவம் கற்றுத் தந்தப் பாடம் இவரது எழுத்தில மிதவாதப் ஃபாக்கை ஏற்படுத்தி விட்டதோ என எண்ணத் தோனறுகிறது. அனுபவததின் ஆழம் எழுத்தில இதமடையும எனபதற்கு இவரது அண்மைக்கால எழுத்துக்களே சான்று.

இவரது படைப்புகளில் பலவும் குடும்பத் தோல்வியை இறுதி முடிவாகக கொண்டுளள போதிலும் இன்றைய பாரதப் பெண்களின பழமை-புதுமைப் போக்குகளுக் கிடையே அவள் சந்திக்கும் பல்வேறு இடர்களை, படிப்போர் உள்ளததைத தொடும வணணம் பாத்திரங்களைப் படைப்பதிலும், நிரல் நிறையாகக் கதையைச் சொல்லி செல்வதிலும்தான் உணர்தத வந்த கருத்தை அழகும் தெளிவும் ஒருசேர பாத்திரங்கள வாயிலாக வெளிப்படுத்துவதிலும் இவருக்கு நிகர் இவரே எனனுமளவுக்கு திறமபட்ட படைப்பாளி யாக விளஙகி வருகிறார்.

புதினப் படைப்புகளோடு 'சோவன ராத்திரி' போன்ற கதைத் தொகுதி இவரது சிறுகதை ஆற்றலுக்கும் கட்டியங் கூறுகின்றன.

தெலுங்கு இலக்கிய உலகில் தனக்கென தனி அத்தியா யம் படைததுக் கொண்டுள்ள மறுமலர்ச்சி எழுததாளி முப்பாள ரங்கநாயகியமம இநதிய பெண எழுததாளர் களிலேயே தனியிடம் பெறத்தக்கவர் எனபதில் ஐயமில்லை

# டாக்டர் சி. ஆர். சர்மா

---

தமிழ் இலக்கியக் கூட்டம். ஏராளமான தமிழ் இலக்கிய ரசிகர்கள் குழுமியுள்ளனர். ஒளியுமிழ் கண்களும் சிந்தனை தேங்கிய பரந்த நெற்றியும் அமைதி தவழும் முகமும கொண்ட நடுத்தர வயதுடைய சொற்பொழிவாளர் மடை திறந்தாற் போலறு தங்கு தடையின்றி அழகு தமிழிலே அருமையாக சொல் மாரி பொழிந்து கொணடிருக்கிறார். பேச்சினிடையே ரங்கநாதா ராமாயணத் தெலுங்குப் பாடல்களும் கம்ப ராமாயணத் தமிழ் பாடலகளும் சராமாரியாக மாறி மாறி ஒலிககின்றன இனிய இசையோடு உணர்ச்சி பாவம் ததும்ப கணீரெனப் பாடல்களை இசைக்குமபோது ரசிகாகள் அககவிதைகளோடு உளளம தோய ஒன்றிவிடுவதை ரசிகர்களின முகத்திலே அலைபாயும மகிழ்ச்சிப் பெருக்கிலிருநது நம்மால் உணர முடிகிறது தெலுஙகுப் பாடலகளின பொருள்கள முழுமையாகப் புரியாவிட்டாலும பாடலகளை இசைக்கும முறையினால் கவிஞனின் உள்ளுணாச்சி எததகையது என்பதை ஓரளவு புரிநது ரசிக்க முடிகிறது தெலுங்கு மொழியை 'களி தெலுங்கு' எனத் தமிழக் கவிஞன் பாராட்டியது எத்துணை பொருத்தமென எண்ணி மகிழ்நது கொணடிருக்கும்போது "கவிதையை வாய் விட்டு படிப்பதென்றால் இப்படித்தான் படிக்கவேண்டும' என தன்னை மறந்த நிலையில வாய்விட்டுப் பாராட்டுகிறார் ரசிகர் ஒருவர்.

ஆமாம்! தெலுங்கிலும் தமிழிலும் இனிமைச் சுவை நனி சொட்டச் சொட்ட கணீரென முழங்கும் இவர் தமிழறிந்த தெலுங்கரா அல்லது தெலுங்கறிந்த தமிழரா? என ஒரு கணம நமக்குத் திகைப்பேற்படுகிறது இவ்வாறு

மொழியால் இனம் பிரித்து அறிய முடியாத அளவுக்கு இரு மொழிப் புலவராகத் திகழும் இவர் யார்? இவர்தான் சாகித்திய அக்காதெமியின் தென் பிராந்தியச் செயலாள ராக மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தெலுங்குப் பேராசிரியராகவும் விளங்கிய டாக்டர் சல்லா இராதா கிருஷ்ண சர்மா அவர்கள்.

தன் இரு விழிகளாக தமிழையும் தெலுங்கையும் போற்றும் இத்தெலுங்கு மொழிப் புலமையாளர் 'டாக்டர் சி.ஆர். சர்மா' என்ற சுருக்கப் பெயராலேயே செல்லமாக எல்லோராலும் அழைக்கப்படுகிறார். தெலுங்கு இலக்கிய உலகிலும் தமிழ் இலக்கிய வட்டாரத் திலும் நன்கு அறிமுகமாகியுள்ள இவரது தெலுங்கு மொழிப் புலமையால் தமிழும் தமிழறிவால் தெலுங்கு இலக்கியமும் சிறப்படைந்து வருகின்றது.

தமிழ் தெலுங்கு ஆகிய இருமொழி மக்களிடையே இலக்கியத்துறை வாயிலாக இணக்கமான நெருக்கத்துக்கு ஏற்றதோர் கருவியாகப் பயன்பட்டுவரும் இவர் இன் றைய தெலுங்கு இலக்கிய உலகின் சிறந்த கவிஞராக கட்டுரையாளராக திறனாய்வாளராக மொழியியல் வல் லுநராக திறமிக்க மொழிப் பெயர்ப்பாளராக குழந்தை எழுத்தாளராகத் திகழ்ந்து வருகிறார் பன்மொழிப் புலவ ரான தம் தந்தையார் திரு இலட்சுமி நாராயண சாஸ்திரி யாரைப் போன்றே இவரும் பல மொழி வல்லுநராகவும் மொழியியலாளராகவும் விளங்கி வருகிறார்.

ஆந்திராவிலுள்ள கிருஷ்ணா மாவட்டத்தைச் சேர்ந்த சிற்றூரொன்றில் 1929ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் ஆறாம் நாள் பிறந்த இவர் தம் இளமைக் கல்வி யை செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள பொன்னேரி உயர் நிலைப் பள்ளியோடு முடித்துக் கொண்டார் இப்பள்ளி யில் படிக்கும்போதுதான் இவருக்குத் தமிழோடு உற

வேற்பட்டது. தமிழிலும் தெலுங்கிலும் புலவரான திரு. பாலகிருஷ்ணன் எனும் ஆசிரியரின நெருக்கமான உறவே தான பெறற தமிழறிவுக்குக் காரணம என நன்றி யறிதலோடு இன்று நினைவு கூர்கிறார் டாக்டர் சர்மா

தெலுங்கு இலக்கியத்தில் எம். ஏ பட்டம் பெற்ற இவர், தமது உயர் ஆராய்ச்சிப் பட்டங்களையெல்லாம் தமிழ் தெலுங்கு இலக்கிய உறவுகளை அடித்தளமாகக் கொண்ட ஆராய்ச்சிகளுக்காகவே பெற்றுள்ளார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும. "தெலுங்கு இலக்கியங் களில் அமைந்துள்ள தமிழ் மூலக்கூறுகள்'' என்ற ஆய்வுக் காக எம்.லிட், பட்டமும், பினனர் தெலுங்கு பேரிலக்கிய மான ரெங்கநாதா ராமாயணத்திற்கும் கம்பராமாயணத் திற்குமிடையே ஒப்பீட்டாய்வு'' செய்ததற்காக டாக்டர் பட்டத்தையும் சென்னைப் பலகலைக் கழகத்திலிருந்து பெற்றார். இதிலிருந்து இவரது சிந்தனையும் செயலும், தமிழ், தெலுங்கு ஆகிய இருமொழி உறவைச் சுற்றியே அமைந்துளளது எனபதை இனிதுணரலாம்.

சென்னை சர். தியாகராசர் கல்லூரியில் ஆறாண்டுக் காலம் தெலுங்கு விரிவுரையாளராகப் பணியாற்றிய இவர் 1957ஆம் ஆண்டில் சாகித்திய அக்காதெமி அலு வலகத்தில் மொழியாளராகப் பணியாற்றினார். தன் திறமையான பணியின் காரணமாக இன்று அதன் தென் பிராந்திய அலுவலகத்தின்செயலாளராக உயர்ந்துள்ளார்

டாக்டர் சர்மா அவர்கள் இதுவரை நாற்பதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார் ஆரம்ப நூல்களில் 'தெனுகுவிந்து' (தெலுங்கு விருந்து) என்பது குறிப்பிடத் தக்க நூலாகும் தெலுங்கு மொழியின் சிறப்பை இனிமை யை அழகுற விளக்கும் கட்டுரைகளும், தமிழ் இலக்கியத்

தில் தெலுங்கு மொழிக்குள்ள தொடர்புகளை விளக்கும் கட்டுரைகளும், தெலுங்கு மொழி வளர்ச்சிக்கு சென்ற நூற்றாண்டில் இடையறாது உழைத்த மேனாட்டு அறிஞர்களான எல்லிஸ், மாரிஸ், ஷுல்ஜி போன்றோர் களின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் கட்டுரைகளும் அடங் கிய தொகுப்பாகும இது.

இவரது கவிதைத் திறனுக்குக் கட்டியம் கூறும் நூல் 'ஜயிஞ்சின ஜனத ' (வென்ற மக்கள் சமுதாயம்) என்னும் கவிதைத் தொகுப்பு நூலாகும. ஆழ்ந்த சிந்தனையும் அழுததமான கருத்துக்களும் உணர்ச்சிப் பிரவாகத்தோடு துளளியெழுந்து குதிபோடும் இத்தொகுப்பில் சாந்திப் பறவை, சமபள நாள் மே தினம், மரணம், புத்தாண்டு, தேர்தல் வாக்குறுதிகள் இப்படி பல தலைப்புகளில் கவிதைகள் உணர்ச்சி கொப்பளிக்க இவரது பேனா முனையிலிருந்து வெடித்துக் கிளம்புகின்றன. கவிதை மரபு காக்கும் காவலாளிபோல் வறட்டுத்தனமான அசை போடும கவிதைகள் எழுதாது, மனித சமுதாயத்தின் அன்றாடப் பிரச்சினைகளைக் கருவாக அமைத்து, அக் கவிதைகளின் மூலம் சமுதாய விழிப்புக்கு உணர்வும், உரு வமும் தர முயல்கிறார். இவரது கவிதைகளில் காணும் மற்றொரு சிறப்பம்சம் அவற்றுள் நீக்கமற நிறைந்திருக் கும் சந்தமாகும். படிக்கும் போதே ஒருவித உணர்வுக் கிளர்ச்சியைத தூண்டும் தன்மை ஓசை வடிவில் அமைந் திருப்பது படிப்போரை இவரது கருத்தின்பால ஈர்த்து விடுகிறது. மரபுக கவிதைகளில் ஊறித் திளைத்த இவர் இன்றைய புதுக் கவிதைத் துறையிலும் ஊக்கமுடன் ஈடு பட்டு புதுக கவிதைகள் பலவற்றை படைத்து வருகிறார்.

'பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல, கால வகையினானே''

என்ற நன்னூலின் நனமொழிக்கேற்ப காலவோட்டத்திற் கிணங்க புதிய உத்திகளும் முறைகளும் சிந்தனைகளும

இலக்கியத்துறையில் மாற்றங்களை விளைவிக்க வேண்டும் இதுவே வளர்சசியாகும் பழைய போக்கையே மாறுத லேதுமின்றி உடும்புப் பிடியாகப் பின் பற்ற முனைவது வளர்ச்சிக்குத் தடைக்கல்லாக முடியும் எனபதில் அழுத்தமான நம்பிக்கை கொண்ட டாக்டர் சி.ஆர் சர்மா அவர்கள் புதியன புனைவதில் பேரார்வம் காட்டுவதோடு அத்தகு சிந்தனையுடையோரைப் போற்றிப் பாராட்டவும் தயங்குவதில்லை

தெலுங்குப் புதுக் கவிதை உலகில் கருத்தோட்டத் திற்கு முக்கியத்துவம அளித்து எழுந்த எழுச்சிக் கவிதை களை 'திகம்பர கவிதை' (நிர்வாணக் கவிதை) என அழைக்க முனைந்தபோது அதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த ஆரம்பப் புலமையாளர்களில் குறிப்பிடத்தக்கவ ராக விளங்கியவர் இவர்.

''திறம்பட கவிதைகளை இலக்கிய மேடைகளில் முழங்கிய புதிய கோணத்தில் விளக்க உரை தநது ஆதர வளித்தனர் இதன்மூலம் இலக்கிய எழுச்சி கொண்ட இளைஞருலகு இவர் மீது பற்றுதல் கொண்டதில் வியப் பில்லை.

அதுமட்டுமா? இவரது கவித்துவ உள்ளத்திலிருந்து பீரிட்டெழுந்து வெளிப்போந்த கவிதைத் துளிகள் இவரது மறுமலர்ச்சி இலக்கிய சிந்தனைக்குக் கட்டியங் கூறுவன வாகும்.

டாக்டர் சர்மா அவர்களின் கவிதை உலைக்களத்தில் பட்டுத் தெரித்த கவிதைப் பொறியொன்றுக்கு 'வேற்று மை' எனப் பெயரிட்டு அவர் பாடுகிறார்.

நடுத்தெருவில் நின்று
வாதாடுகின்றனர்
நாட்டுப்புறத்தவர்

மாடி அறையில் உட்கார்ந்து
கொண்டு வாதாடுகின்றனர்
பட்டினத்தவர்
ஏன் இந்த வேற்றுமை?
நாட்டுபுறத்தின் சாக்கடை
தரைமீது ஓடுகின்றது
பட்டினத்தின் சாக்கடை
தரையின்கீழ் ஓடுகின்றது.

இக்கவிதையின் எளிமையும் கருத்துச் செறிவும் நம் சிந்தையைக் கவர்கின்றன.

இவரது மொழியியற் புலமைக்குச் சான்று 'மதராஸு தெலுகு' என்னும் கட்டுரைத் தொகுப்பு நூலாகும். பதினான்கு கட்டுரைகள் அடங்கிய இந்நூலில் சென்னை நகரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் வாழும் தெலுங்கு மக்களின் பேச்சு வழக்குச் சொற்களையெல்லாம் திரட்டி அவற்றை நகைச்சுவை ததும்ப மொழியியல் அடிப்படையில் விவரிக்கிறார் விடுதலைக்குப் பின்னர் இலக்கியத் துறையில் விளைத்துள்ள பல்வேறு மாற்றங்களை அழகுற விளக்கிப் படிப்போரைச் சிந்திக்கத் தூண்டுகிறார்.

இவர் வரலாற்றுக் கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார். இனிய நடையில் அமைந்துள்ள இக்கட்டுரைகள் "வியாஸ மஞ்சூஷ" எனும் தலைப்பில் நூல் வடிவமாக வெளிவந்துள்ளது. இக்கட்டுரைகளுள் தெலுங்கு மொழி சம்பந்தப்பட்ட பழைய கையெழுத்துச் சுவடிகளையும் வரலாற்றுப் பட்டயங்களையும் அரும்பாடுபட்டுச் சேகரித்துத் தொகுத்து கொடுத்த ஆங்கிலேய அறிஞர் மெக்கன்ஜி துரை தென்னிந்திய வரலாற்றைத் தொகுப்பதற்குப் பேருதவி செய்த காவலி சகோதரர்கள் மதுரை நாய்க்க மன்னர்களின் தொண்டு ஆகியவற்றை விளக்கும் கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவைகளாகும்.

இவரது தமிழ்ப் பணிகளுள் தலையாயதாக விளங்கு வது அமரகவி சுப்பிரமணிய பாரதியாரை உரிய முறை யில் இடையறாது கட்டுரை கவிதை திறனாய்வு ஆகிய வற்றின் வாயிலாகத் தெலுங்கு மக்களுக்கு உணர்த்தி வரு வதாகும். பாரதியாரின வாழ்க்கை வரலாற்றை விளக்கும் ''சுப்பிரமணிய பாரதி'' எனும் நூல் குறிப்பிட த்தக்க தாகும இதில உள்ள ஏழு அத்தியாயங்களில் பாரதியாரின வாழ்க்கை வரலாற்றோடு அவரது எழுத்தாற்றல் சிந தனைச் சிறப்ப ஆகியவைகளை அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். பாரதியின் கவிதைகளோடு புகழ் பெற்ற தெலுங்கு மகாகவி குரஜாடா அப்பாராவ் அவர் களின அமரத்துவக் கவிதைப் படைப்புக்களை ஒப்பிட்டு ஆராய்ந்து பாரதியின பேராற்றலை விதந்தோதுகிறாா.

இவைகளன்னியில் பாரதியாரின் கட்டுரைகள் சில வற்றையும் 'ஊழிக்கூத்து' போன்ற கவிதைகளையும் தெலுங்கில் மொழிபெயர்த்துள்ளார். பாரதியாரைப் பற்றி தெலுங்கு மொழி பேசும் மக்களுக்கு முழுமையாக விளக்கிக் கூறும் அரிய பணியைப் பதினைந்து ஆண்டு களுக்கும மேலாகத் தொடர்ந்து செய்து வருகிறார். இவரது பாரதி புகழ் பரப்பும் பணியைப் பாராட்டி 1965ஆம ஆணடில் சென்னை பாரதி சங்கம் இவருக்குக் கேடயமளித்துச் சிறப்பித்தது இவரது 'சுப்பிரமணிய பாரதி, எனும் தெலுங்கு நூலுக்கு 1970ஆம் ஆண்டில் தமிழ்நாடு அரசு பரிசளித்துப பாராட்டியது.

தமிழிலுள்ள ஐம்பெருங் காப்பியக் கதைகளைக் கூறும் ''தமிழ் பஞ்ச காவ்ய கதலு'' (தமிழ் ஐம்பெருங் காப்பியக் கதைகள்) என்ற நூலைத் தெலுங்கில் வெளி யிட்டார். திருவள்ளுவரின் வாழ்க்கை வரலாற்றினை விளக்கும் 'தமிழ் வேதமு'' (தமிழ் மறை) என்ற நூலை 1954ஆம் ஆண்டில் எழுதினார். 1887ஆம் ஆண்டிலேயே வெங்கட்ராம வித்யானந்தர் போன்றோர் திருக்குறளைத்

தெலுங்கில் முழுமையாக மொழி பெயர்த்திருந்தபோதி லும் வள்ளுவப்பெருமானின் வாழ்க்கை வரலாற்றை விவரிக்கும் நூல்கள் எதுவும் தெலுங்கு மொழியில் எழுதப் படவில்லை. அந்தக் குறையை நீக்கிய பெருமை டாக்டர் சர்மா அவர்களையே யாரும்.

'மணி மஞ்சீரமும்' (சிலப்பதிகாரக் கதை), 'தமிள சாஹித்ய சரித்திர'(தமிழ் இலக்கிய வரலாறு), 'தர தரால தமிள கவித (தமிழ்க் கவிதை) ஆகிய தொகுப்பு நூல்களும் இவரது கைவண்ணத்தால் உருவானவைகளாகும்

மொழிபெயர்ப்புத் துறையிலும் இவரது பங்கும் பணி யும் மகத்தானதாக அமைந்துள்ளது. தேசிய புஸ்தக டிரஸ்டுக்காக இருபது சிறு கதைகளை மொழி பெயர்த் தளித்துள்ள இவர் ராஜாஜியின் 'ஆத்ம சிந்தனை' வள்ளி யப்பாவின் சிறுவர் நூல்களையும் நீல பத்மநாபனின் 'பள்ளிகொண்டபுரம்' போன்ற புதினங்களையும் தெலுங் கில் மொழி பெயர்த்துள்ளார்.

வானொலிக்காக நாடகங்கள் பலவற்றை மொழி பெயர்ததுள்ளதோடு கலை, இலக்கியம் பற்றி வானொலி உரைகளை நிகழ்த்தியுள்ளார்.

'ஸ்ரீ விஜயம்' என்ற ஓரங்க நாடகத்தையும் 'வான குரிஸிநதி' (மழை பெய்தது) ''சந்தமாமா'' போன்ற சிறுவர் பாட நூல்களையும் எழுதியுள்ள இவர், ஆங்கில, தெலுங்கு அகராதியொன்றையும் தொகுதது வெளியிட் டுள்ளார். இரண்டு பதிப்புகளைக் கடந்துள்ள இந்த அகராதி மாணவர்கள் மத்தியில் பெரும் செல்வாக்குப் பெற்ற ஒன்றாகும்.

இவர் இதுவரை சுமார் பதினைந்து நூல்களை தெலுங்கில் மொழி பெயர்த்துள்ளார். இவற்றுள் பெரும் பாலானவை தமிழிலிருந்து பெயர்க்கப்பட்ட இலக்கியங்

களாகும். இவர் "மந்திர வித்தை" எனும் தமிழ் நூலை 'கடுகுலோ காரடி" என்ற தலைப்பில் தெலுங்கில் மொழி பெயர்த்தார். இந்நூல் மொழி பெயர்பபுச் சிறப்பினைப் பாராட்டி ஆந்திர மாநில அரசு இவருக்கு தனிப பரி சளித்து பாராட்டியது. இந்நிகழ்ச்சியொன்றே இவரது மொழிப் பெயர்ப்புத் திறனுக்குத் தக்க சான்றாகும்.

பிற மொழியினின்றும் தாய்மொழிக்குப் பெயர்ப்பது அவ்வளவு கடினமானதன்று, எளிதுங்கூட. ஆனால் தாய் மொழியிலிருந்து, பிற மொழிகளில் பெயாப்பது மிக மிகக் கடினம என்பது அனுபவ உண்மை. ஆனால் இதற் கும் டாக்டர் சர்மா விதி விலககாக உள்ளார். தெலுங்கு எழுத்தாளர்களில் சாம்ராட்டாக விளங்கிய திரு விஸ்வ நாத சத்தியநாரயணாவின் "வேயி படகலு" எனனும் ஆயிரம பக்கங்களுள்ள புதினத்தை சிறிய வடிவில் மூலச் சுவை சிறிதும் குன்றாது "ஆயிரம் தலை நாகம்" என்ற பெயரிலேயே தமிழில் மொழி பெயர்த்துள்ளார். மொழி பெயர்ப்பு என்ற உணர்வு சிறிதும் உணடாகவாறு மூல நூல போன்றே இஃது அமைந்திருப்பது இவரது தமிழ் எழுத்தாற்றலைப் புலப்படுத்துவாக உள்ளது.

தமிழிலுள்ள இலக்கிய வளத்தை தெலுங்கு நாட்டிற்கு அறிமுகப்படுத்துவதையும் தாய்மொழியான தெலுங்கில் இலக்கியச் செல்வங்களை தமிழிலே எடுத்துச் சொல்வதை யும் ஒரு தொண்டாகக் கருதி பணியாற்றும் இவரது முயற்சிகளைப் பாராட்டி 1960இல் நடைபெற்ற எட்டா வது தமிழ் எழுத்தாளர் மாநாடு இவருக்கு கேடயமளித் துச் சிறப்பித்தது.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போன்ற பணியை கடந்த சில மாதங்களாக ஆற்றி வருகிறார். மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை தொடங்கி கல்கி ஈராக 25-க்கு மேற்பட்ட தமிழ் சான்றோர்களின் இலக்

கிய த் தொண்டை வரலாற்று வழியே தெலுங்கு மொழி யில் புகழ்பெற்ற தெலுங்கு இலக்கிய இதழில எழுதி வரு கிறார். இப்பணியின் மூலம் தமிழ், தெலுங்கு இலக்கியப் பாலமாகத் தன்னை நிலையாக்கிக் கொண்டுள்ளார் எனக் கூறலாம்

இலக்கிய பணியோடு சோவியத் நாடு, நேரு பரிசுக் குழு, சென்னை நூல்இலக்கியக் கழகம் போன்ற அமைப்பு களில் உறுப்பினராகப் பணியாற்றும வாய்ப்பைப் பெற்ற டாக்டர் சர்மா இலக்கியங்களை வெவ்வேறு மொழிகளில் பெயர்த்துக் கொடுப்பதன் மூலமே உள்ளார்ந்த ஒருமைப் பாட்டுணர்வை மக்களிடையே பொங்கியெழச் செய்ய முடியும் என்று முழு மனதோடு நம்புகிறார்.

# மகாகவி ஜி. சங்கர குறுப்பு

'ஜி' என்ற சிறப்புப் பெயரால் இந்தியாவெங்கும் நன்கு அறிமுகமாகியுள்ள மகாகவி ஜி. சங்கர குறுப்பு இன்றைய மலையாளக கவிஞர்களிடையே குறிப்பிடத்தக்க சிறப்பிடத்தைப் பெற்றுத் திகழும் பெருங் கவிஞராவார்.

இயற்கை வளங்கொழிக்கும் காலடிக்கருகிலுள்ள கிராமமொன்றில 1901ஆம ஆணடு பிறந்த சங்கர குறுப்பு இளமை முதலே இயற்கையின வயப்பட்டவராக-இயற்கையின் இரகசியங்களை அறியும முயறசியுடையவராக-ஆரம்ப நாட்களில் இயற்கையின் பேரெழிலை படைப்பு இரகசியங்களை அடிததளதாகக் கொண்ட கவிதைகளைப் புனைந்தார். வெறும் இயற்கை நலம பாராட்டும் கவிஞராகவே தாம் அமைந்து விடாது, இயற்கையின் தன்மைகளை வாழ்க்கையின் ஆத்துமப் பிரச்சினைகளோடு இணைந்துப் பாடும் தத்துவக் கவிஞராகப் பின்னர் மலர்ந்தார்.

மலையாள மொழியில் வித்துவான் பட்டம் பெற்று ஆசிரியத் தொழிலை மேற்கொண்ட கவிஞர் ஆங்கில மொழியையும் தாமே படித்து விரைவில் புலமை பெற்றார். அதன் விளைவாக அவரது கவிதையாற்றல் பன்மடங்கு விரைந்தது மேனாட்டுக் கவிஞர்களில்ஷெல்லியின் செல்வாக்கும் இந்தியக் கவிஞர்களில் தாகூரின் செல்வாக்கும் பிற்காலததில் இவர் கவிதைகளில் பெரிதும் எதிரொலிக்கத் தொடங்கின. கற்பனையே கவிதைககு அடித்தளம் என்ற நிலைமாறி, கருத்தும் சிந்தனையுமே கவிதையின் உயிர்நாடி என்ற அடிப்படையில் இவரது கவிதைப் படைப்புகள் வெளிவரலாயின. இயற்கைத் தத்துவங்களை இம்முறையில் வெளிப்படுதத முயலும் சங்கர குறுப்பு மிகச் சிறந்த 'மிஸ்டிக்' கவிஞராவார். இவர் 'மிஸ்டிக்

கவிஞராகப் பரிணமிக்க காரணமாயமைந்தவைகளில் மிக முக்கியமானது தாகூரின் கவிதைப் படைப்புகளாகும் 'அன்வேஷணம்' (தேடுதல்) 'மங்கள கீதம்' 'சாக்ஷாத் காரம்' முதலிய கவிதைப் படைப்புகள் இதற்குத் தக்க சான்றுகளாகும்.

மாலையில் எழும் நிலவு உதய நட்சத்திரம், செக்கர் வானம், வைகறைப் பொழுது, மேகங்கள், கடல், மலை ஆகிய அனைத்தையும் தம் கவிதைகளில் குறிப்புப் பொருள் களாக—மனிதனின் ஆத்மாவோடு தொடர்பு கொண்ட குறியீடுகளாக இவர் தம் கவிதைகளில் திறம்பட வெளிப் படுத்துவதன் மூலம் சிறந்த 'ஸிம்பாலிக்' (உருவக) கவி ஞராகவும் உள்ளார்.

இந்தியக் கவிஞர்களிலேயே ஒரு யுகக் கவிஞர்களாக தாகூரையும கவி சுப்பிரமணிய பாரதியாரையும் கருதும் சங்கர குறுப்பு தாகூரின் கீதாஞ்சலியை மூலத்திலிருநது நேரடியாக மொழி பெயர்கக எணணித் தமது 55ஆம் வயதில் வங்கமொழி பயினறு 'கீதாஞசலி'யை மலை யாளத்தில் பெயர்த்தார். இவரது புகழ்பெற்ற மலையாள மொழி பெயர்ப்புக் கவிதை நூல்களில் குறிப்பிடத் தக்க வை உமர்கய்யாமின சிறநத கவிதைகளின மொழி பெயர்ப்பான 'விலாச லஹரி'யும் காளிதாசனின் 'மேக தூத'த்தின ம று உருவான 'மேக சந்தேச'மும் ஆகும்.

இவர் வெறும் தத்துவக் கவிஞர் மட்டுமல்லர் நாட்டுப்பற்றில் இமயம்போல் விளங்கும் இவர் சமுதாயக் கோணல் நிலைகளைத் தம் கவிதைகளில் சாடத் தவறி யதேயில்லை. இவரது படைப்புகளில் பொதுவுடைமை உணர்வும் விஞ்ஞான உணர்வும் பொங்கி நிற்பதைக் காணலாம். 'அம்மாமன் ஆசீர்வதிக்குந்நு' (மாமன் ஆசீர் வதிக்கிறார்) என்ற படைப்பில் இரு பாத்திரங்களான உலகமும் சந்திரனும் விஞ்ஞான விளைவுகளைக் குறித்து

விஞ்ஞான மொழியில் பேசுவது சுவையானதாகும் மற்றும் 'ஸாஹித்ய கௌதுகம்', 'சூரிய காந்தி', 'நிமிஷம்' 'வனநாயகன்', 'செங்கதிர்கள்', 'பதிகன்டே பாட்டு' (வழிப்போக்கன் பாடல்) 'ஓடக்குழல்', 'அந்தர்ஹாம்' (உள்ளத்து வேட்கை) 'வெள்ளிப் பறவை', 'பாதேயம்' (வழிச் சோறு) முதலிய கவிதைத் தொகுப்புகளை வழங்கியுள்ளார்.

இருளினு ம்ப்பு' (இருளுக்கு முன்பு) 'ஆகஸ்ட் 15' 'சந்த்ய (மாலைப்போது) ஆகிய நாடகங்களும், 'கத்யோபஹாரம்' 'லேக மாலா' 'முத்துச் சிப்பி' 'ராக் குயில்கள்' ஆகிய தலைப்புகளில் வெளிவந்துள்ள கட்டுரைத் தொகுப்புகளும் 'இராதா ராணி' 'ராஜ நநதினி' ஆகிய இரண்டு கதைத் தொகுதிகளும் குறிப்பிடத்தக்க படைப்புகளாகும்.

இவற்றுள் 'ஓடக்குழல்' கவிதைத் தொகுப்பு 1966-ஆம் ஆணடு பாரதீய ஞான பீடத்தின் ஒரு இலட்சம் ரூபாய் சிறப்புப் பரிசைப் பெற்றது.

ஆசிரியத் தொழிலை மேற்கொண்டிருந்த காலத்தில் இவர் எழுதிய பாட நூல்கள் மிகவும் புகழ் பெற்றவைகளாகும். அவை இன்றும் கேரளப் பள்ளிகளில் பாடப் புத்தகங்களாக மாணவர் கரங்களில் தவழ்ந்து அறிவுச் சுடர் கொளுத்தி வருகின்றன.

உணர்ச்சி பொங்க நீண்ட நேரம் சொல்லாட வல்ல நாவலரான இவரது தலைமையின்கீழ் 'ஸாஹித்ய பரிஷத்' எனும் இலக்கிய அமைப்பு பெரும் பயன் ஈட்டியது எனலாம். நீண்ட காலம் ஆசிரியத் தொண்டும், குறுகிய காலம் அனைத்திந்திய வானொலியிலும் பணியாற்றி ஓய்வு பெற்ற சங்கர குறுப்பு மாநிலங்களவை உறுப்பினராகவும் பல்வேறு இலக்கிய அமைப்புகளில் தொடர்பு கொண்டும் பணியாற்றியுள்ளார்.

மலையாளக் கவிதை இலக்கிய உலகில் ஆசானுக்கும் வள்ளத் தோளுக்கும் அடுத்த இடத்தைப் பெறும் மகாகவி ஜி. சங்கர குறுப்பு இந்தியா முழுமைக்குமான மறுமலர்ச் சிப் பெருங் கவிஞரெனில் அஃது மிகையன்று.

# தகழி சிவசங்கரப் பிள்ளை

மகாகவி வள்ளத்தோலுக்குப் பிறகு இந்தியாவில் மட்டுமல்லாது வெளிநாடுகள் பலவற்றிலும் அறிமுகமாகி ஓங்கு புகழ் எய்தியுள்ள மலையாள எழுத்தாளர் தகழி சிவசங்கரப்பிள்ளையே யாவார். மொழி, நாடு என்ற முறையிலேயே எழுத்துலகில் பெரிதும் மதித்துப் போற்றப் படுகிறார்.

பிறந்த ஊரின் 'தகழி' என்ற சிறப்புப் பெயராலேயே அழைக்கப்படும் சிவசங்கரப்பிள்ளை கேரளாவிலுள்ள அம்பலப்புழாவிற்கருகிலுள்ள 'தகமி' கிராமத்தில் வேளாளர் குலத்தைச் சார்ந்த சங்கரக் குறுப்பிற்கும் பார்வதியம்மாளுக்கும் 1912ஆம் ஆண்டு ஏப்ரல் 17ஆம் தேதி பிறந்தார்.

தகழி, அம்பலப்புழா, கருவாட்டா ஆகிய இடங்களில் தம் இளமைக் கல்வியை முடித்துக் கொண்ட அவர், பின்னர் திருவனந்தபுரத்திலுள்ள சட்டக் கல்லூரியில் பயின்று வழக்கறைஞர் (Pleader) பட்டம் பெற்று அம் புலப்பழாவில் வழக்குரைஞராகத் தொழிலைத் தொடங்கி னார். 1960ஆம் ஆண்டிற்குப் பின் அப்பணியைக் கை விட்ட அவர் இன்று எழுத்துப் பணியையும் உழவுப் பணி யையும் தன் இரு கண்களாகக் கொண்டு திறம்பட ஆற்றி வருகிறார்.

இளமையிலேயே கவிதை புனையத் தொடங்கிய தகழியின கலையார்வம் சிறுகதைகளையும் பின்னர் புதினங்களையும் எழுதத் தூண்டியது. இயற்கை யிலேயே கற்பனை வளமும் எழுததுத் திறமை யும் வாய்க்கப் பெற்ற தகழியின் படைப்பாற்றலை ஒருமுகப்படுத்தி பூரணமாகப் பரிணமிககச் செய்தவர்

களில் மிக முக்கியமானவர்கள் அககால இலக்கிய உலகில் பெரும்புகழ் பெற்றுத திகழ்ந்த கேசரி ஏ. பாலகிருஷ்ணப் பிள்ளையும கைனிக்கர குமாரப் பிள்ளையும் ஈ வி. கிருஷ் ணப்பிள்ளையுமாவர்.

காலங் காலமாகச் சமுதாயத்தில் புரையோடிப்போன மூட நமபிக்கைகளையும் போலிக் கொள்கைகளையும் தகர்த்தெறிவதோடு சமூக முன்னேற்றத்தைத் தடுத்து வரும் அநீதிகள் அனைத்தையும் களைந்தெறிந்து புதிய உணர்வுகளையும் கொள்கைகளையும் மக்களிடையே ஊட்டி சமுதாய புத்தெழுச்சிக்கு வித்திடும் விசைக் கருவி யெனத் தம் எழுத்தையும் பேச்சையும் பயன்படுத்தி வநத அன்றைய இலக்கிய உலகின விடிவெள்ளியான கேசரி ஏ. பாலகிருஷ்ணப் பிள்ளையின நெருக்கமான அணைப் பில் வளர்ந்துவந்த தகழி தன் ஆசானின் வழியில் சமு தாயக் கோணல் நிலைகளை அப்பட்டமாகச் சித்தரிக்கும் கதைகளைப் புனையத் தொடங்கி அத்துறையில விரைவி லேயே மிக வேகமாக பீடு நடை போட்டு மலையாளக் கதையிலக்கியத் துறையில் ஒரு புதிய மாற்றத்திற்கு வழி வகுத்தார்.

அவர் எழுதத் தொடங்கிய காலத்தில் சமுதாயத்தில் ஆட்சி செலுததி வந்த சமூக அநீதிகள், ஏழை எளியவர் களின் இன்னலகள் சமயப் போர்வையில் நடக்கும் ஊழல் கள் பணம் படைத்தோர் தரும் தொல்லைகள் துன்பங்கள் தூய காதலுக்கு இடப்படும் தடைகள் ஒடுக்கப்பட்ட மக் களிடையே காணப்பட்ட துன்ப துயரங்கள் ஆகியவை களைக் கருவாகக் கொணட கதைகளைப் புனைந்து தன் படைப்புகளை உருவாக்கி உலவவிட்டார் தகழி.

தகழியின் படைப்புக்களின் உயிர்நாடியாக விளங்கும் தனிப் பெரும் அம்சம் வாழ்க்கையை அப்பட்டமாக உணர்ச்சிபூர்வமாகப் பிரதிபலிப்பதேயாகும்.

பிரத்தியட்ச சமூகப் புதினத்தை இலக்கிய அளவுக்கு உயர்த்திய தகழியின வழியைப் பின்பற்றி இலக்கியப் படைப்புகளை உருவாக்கும் இளம் எழுத்தாளர் பரம்பரை யொன்றே இன்று இலக்கிய உலகில தோன்றிக கொண்டிருக்கிறது என துணிந்து கூறலாம.

தகழியின் தொடக்க காலப் புதினப் படைப்பான 'தோட்டியுடே மகன' (தோட்டியின் மகன) என்ற படைப்பில் தோட்டிகளின் துயர வாழ்க்கையை உள்ளத்தைத் தொடும் வண்ணம் உருக்கமாகச் சித்தரிக்கிறாா. 'ரெண்டிடங் கழி' (இரணடு படி) என்ற புதினததின் வாயிலாக நிலமில்லாத உழவனொருவன ஆலப் புழைக அருகிலுள்ள சதுப்பு நிலஙகளில் படும் துயரங்களை நெஞ்சை உலுக்கும வகையில படம் பிடித்துக் காட்டுகிறார். சிறந்த பாத்திரங்களைப் படைதது திறம்படக் கையாண்டு கதை புனையும் ஆற்றலில தகழி எவ்வாறு இமயம்போல் விளங்குகிறார் எனபதறகுக கட்டியங கூறும் புதினமே 'செமமீன' (எறா—கடல் வாழ் மீன்களில் ஒரு வகை) ஆகும் ஆலப்புழையை அடுததுள்ள கடற்கரைப் பகுதிகளில் வாழும மீனவப் பெண்ணொருத்திக்கும் முஸ்லிம் இளைஞனொருவனுக்கும இடையே தோன்றி வளர்ந்த காதல் கதையைச சித்தரிக்கிறது இது. இயற்கையான வர்ணனைகளுடன காதலின் திறதலைத விளக்கியுரைக்கும் இப்புதினம் 1956ஆம் ஆண்டிற்கான சாகிததிய அக்காதெமிப் பரிசைப் பெற்றதோடு இநதிய மொழிகள் அனைத்திலும் உலக மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது அண்மையில் திரைப்படமாக்கப்பட்ட இப்புதினக் கதை குடியரசுத் தலைவரின் தங்கப் பதக்கப் பரிசையும் பெற்று வெற்றிக் கொடி நாட்டியது அனைவரும் அறிந்ததே. இவரது மற்றொரு சிறந்த படைப்பான 'ஏணிப்படிகள்' என்ற புதினத்திறகு 1964ஆம் ஆண்டிற்கான கேரள சாகிததிய அக்காதெமியின பரிசு கிடைத்துள்ளது.

கருத்தாழம் இயற்கையான நடை தெளிவு போன்ற சிறப்புக்கள் பலவும் ஒருசேரக் கொண்டு திகழும இவரது கதைப் படைப்புக்கள் மக்களிடையே பெருஞ் செல்வாக்கையும புகழையும் பெற்றுள்ளன

கவர்ச்சி மிக்க எளிய நடையின் மூலம் எத்தகைய கருத்துககளையும் நேரடியாகவும தெளிவாகவும் சுருக்க மாகவும் மனதில் பதியும் வணணம் லாவகமாகக் கூறுதல் இவரது நடைக்குள்ள தனிச் சிறப்பாகும்.

வழக்கரைஞராகப் பணியாற்றிய காலத்தில் இவரது வாழ்வில ஏற்பட்ட சுவையான சம்பவங்களை 'எனடே வக்கீல் ஜீவிதம்' (என்னுடைய வழக்குரைஞர் வாழ்க்கை) என்ற தனது வாழ்ககை வரலாற்று நூலின் மூலமாகச் சுவைபட எடுத்துக் கூறுகிறார் தகழி.

அமெரிக்கா, ரஷியா, இங்கிலாந்து, மலேசியா, ஜப்பான், தாய்லாந்து போன்ற பல்வேறு நாடுகளில் சுற்றுப்பயணம் சென்று திரும்பிய தகழி தமது பயண அனுபவங்களைக் கூறும் பயண நூல் ஒன்றையும் எழுதியுள்ளார்.

கவர்ச்சியறற தோற்றமுடைய இவர் எளிமையின் உருவமாக வாழ்ந்து வருகிறார். ஓயாது படிக்கும் பழக்க முடைய இவர் தனது படைப்புகளை எழுதத் தொடங்கி விட்டால் ஒரு [சில நாட்களுக்குள்ளாகவே தொடர்ந்து எழுதி முடித்து விடுகிறார். எழுதுவதற்கு அமைதியான சூழ்நிலையை விரும்பும் இவர் எப்போதும் அதிகாலை நேரங்களையே எழுதத் தகுந்த நேரமாகக் கொண்டுள் ளார்.

சொல்லேருழவரான தகழி தமது வேளாளர் குல மரபுக்கேற்ப வேளாண்மைத் தொழிலில் மிக அதிகமான

ஆர்வமும் அக்கறையுமுடையவராக இருக்கிறார். படிக்கும் நேரமும் எழுதும் நேரமும் போக மீதமுள்ள காலத்தின் பெரும்பகுதியை வேளாண்மைத் தொழிலுக்கெனவே ஒதுக்கிக் கொண்டு ஒரு உண்மை உழவராக வாழ்ந்து வருகிறார் தகழி.

# கேசவ தேவ்

இன்று மலையாள படைப்பிலக்கியங்களின்பால் இந்தியா ஏன் வெளிநாட்டு இலக்கியவாணர்களின் பார்வையே திருப்பிக் கொண்டிருக்கிறதெனில் அஃது மிகையன்று இந்திய மொழி இலக்கியங்களிலேயே ரியலிச மறுமலர்ச்சிப் போக்கு இன்று மலையாள மொழி இலக்கியங்களில் விரைவாவும் வலுவாகவும் காலூன்றி வளர்ந்து வருவதே இதற்கு அடிபபடைக் காரணம் ஆகும். அத்தகைய மறுமலர்ச்சிப் போக்குக்கு வேகமும் விறுவிறுப்பும் ஊட்டிவரும் மலையாள எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவராகத் திகழ்பவர் திரு பி கேசவ தேவ் அவர்கள் ஆவார்.

மற்றவர்களினின்றும் சற்று மாறுபட்ட போக்குடையவராகத தோன்றும் கேசவ தேவ் தம் எழுத்துப் பணியைப் பற்றிக் கூறும்போது "இலக்கிய ஆசிரியன ஆக வேண்டும் என்றோ இலககியத்துக்கு ஆற்ற வேண்டிய கடமைகளுக்காகவோ தத்துவ சாத்திரங்களைப் பரப்புவதற்காகவோ நான் எழுதவில்லை ஆனால் நான் எழுதிக் கொண்டே போகிறேன்! எழுதவோ பேசவோ மறுதது நிறுததி விட்டால் என் வாழ்வில் ஏதோ ஓர் உக்கிரம் புகுந்துக் கொள்கிறது என்னை நான்கு புறங்களிலிருந்தும மோதி உள்ளிருந்து முட்டுகிறது. அது ஒரு வீராவேசம் நான எழுதி விடுகின்றேன்" என தன எழுததுணர்வை வார்த்தைகளால் வடித்துக் காட்டுகிறார் இன்றைய மலையாள இலக்கிய உலகில் எழுததாற்றலிலும சொல்லாற்றலிலும் சிறந்து விளங்கும் கேசவ தேவ் புதினம் சிறுகதைத் துறைகளின வளர்ச்சிக்கு மட்டுமல்லாது நாடகத் துறையின் மறுமலர்சசிக்கும் தொடர்ந்து பெருந் தொண்டாற்றி வருகிறார்.

எத்தகைய படைப்பாயினும் அதில் பாலுணர்ச்சி ஊட்டவல்ல காதலெனும கரு மையமாக இல்லையெனில அது இலக்கியம் எனும தகுதியைப் பெற இயலாது என்ற எண்ணத்தைப் போக்கும முயற்சியில ஏ பாலகிருஷ்ணப் பிள்ளை போன்றவர்கள் முனைந்து நின்ற காலகட்டத் தில தம் எழுத்துப் பணியை மேற்கொணடவர் கேசவ தேவ். இலக்கியக் கண்ணோட்டத்தை காலவோட்டத்திற கேற்ப புதிய திசையில் திருப்பப் பெருந்துணையாயமைந் தன கேசவ தேவின் படைப்புக்கள் அவர் இதுவரை இருபதுக்கு மேறபட்ட புதினங்களையும் பதினைந்திற்கு மேல் சிறுகதைத் தொகுப்புக்களையும் பனிரணடு நாடகங்களையும் ஓரங்க வானொலி நாடகங்கள் பல வற்றையும சில புதுக் கவிதைகளையும திறனாய்வுக் கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

கேரளத்திலுள்ள வடபரவூர் நாயர் குடும்பமொன்றில் 1904ஆம் ஆணடு பிறந்த தேவ் எட்டாம் வகுப்போடு பள்ளிப் படிப்புக்குப் புள்ளி வைத்துவிட்டார் வறுமை யெனும் உலைக் களததில் இளமை முதலே வார்த்தெடுக் கப்பட்ட தேவ சிறு வயது முதலே சமுதாயக் 'கோணல் போக்குகளையும் அதற்குத் துணையாயமைந்துள்ள சாதி மத வேறுபாடுகளையும் பொருளற்ற பழக்க வழக்கங் களையும் துணிவாக எதிர்த்துப் போராடும் போக்கைத தன்னுள் வளர்த்து வந்துள்ளார் எனபதை 'திருச்சு நோட்டம்' (திரும்பிப் பார்த்தல்) 'எதிர்ப்பு' போன்ற சுய வரலாற்று நூல்களின் மூலம் நாம் நன்கு அறிய முடிகிறது.

இவர் பேனா பிடித்து எழுதிய முதல் படைப்பான கட்டுரையே புரட்சிக் கனலைக் கக்குவதாயமைந்தது. 'மதத்தை விலககாது சாதியை ஒழிக்க முடியாதா?' என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அவர் எழுதிய கட்டுரை தான் முதன்முதலில அச்சு வாகனமேறி வெளிவந்த

எழுத்துப் படைப்பு 'மஹிளா மந்திரம்' என்ற இதழில் வெளிவந்த 'நளினியும் லீலாவும்' என்ற கதையே இவரது முதல் சிறுகதைப் படைப்பு.

இளமை முதலே தன்னைச் சுற்றியுள்ள சமுதாயத்தின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையும் சமூகப் பிளவு களையும் கண்டு ஆவேச உணர்ச்சி கொண்டிருந்த அவரை ஆக்கச் சிந்தனை வழியில் திருப்ப விவேகானந் தரின் 'என் குரு' எனற நூலும் சுவாமி பிரம்மரதாவின் சொற்பொழிவும் பெருந்துணை புரிந்தன பதினெட்டாம் வயதில் அவர் பண்டிட் ரிஷிராம் என்பவரின் முன்னிலை யில் 'ஆர்ய சமாஜ'த்தில் சேர்ந்தார். அப்போதுதான் 'கேசவ பிள்ளை' என்ற அவரது இயற்பெயர் பண்டிட் ரிஷிராமால் 'கேசவ தேவ்' என மாற்றப்பட்டது அன்றி லிருந்து இப்பெயரிலேயே இவர் இலக்கிய உலகில் உலா வருகிறார்.

பல்வேறு துறைகளில் அனுபவ நிறைகுடமாக விளங் கும் தேவ் 'பஜே பாரதம் 'சகோதரன்' 'ஸ்வதேசாபி மானி' 'மலையாள ராஜ்யம்' போன்ற பல்வேறு பத்திரிகை களில் பணியாற்றியதோடு தொழிலாளர் இயக்கத்திலும் நீண்ட காலம் பணியாற்றியுள்ளார் பலவேறு நாடக கம்பெனிகளிலும் பணியாற்றி நல்ல அனுபவம் பெற்றுள ளார். இவ்வாறு மக்களோடு நெருங்கிய தொடர்புடைய பல்வேறு துறைகளில் பணியாற்றியதன் மூலம் மக்களைப் பற்றியும் சமூகத்தைப் பற்றியும் ஒரு தெளிவான கண ணோட்டமுடை யவராகத் தம் இலக்கியங்களை உருவாக்கி வருகிறார்

சமுதாயத்தில் காணும் குறைபாடுகளே மனித முன் னேற்றத்தைத் தடுக்கும் தடைக்கற்கள் என அழுத்தமாகக் கருதும் கேசவ தேவ் சமுதாயததின் அடித்தளத்தில் வாழும் சாதாரண மக்களையே தம் படைப்புக்களின் கதா

நாயகர்களாகத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலம் தான் கொண்டுள்ள வாழ்க்கை மதிப்பீடுகளை அழகுற விளக்கு கிறார். அன்றாட வாழ்விலிருந்தே அவர் தம் பாத்திரங் களையும் விஷயங்களையும் தேர்ந்தெடுத்துக் கொண்ட போதிலும் எந்தச் சமயத்திலும் குறிப்பிட்ட இன, சாதி, சமயங்களைப் பிரதிபலிக்காமல் வெளிப்படையாகவே அப்பாத்திரத்தை இயக்கிச் செல்வது இவரிடத்தில் காணப் படும் தனிச் சிறப்பாகும்.

குறுகிய சாதி, மத எல்லைகளுக்கெல்லாம் அப்பாற் பட்ட நிலையில் மனிதத்துவ உயர் பண்புகளை சித்தரித் துக் காட்டுவதிலேயே இவர் அதிக நாட்டமுடையவராக உள்ளார் என்பதை இவரது படைப்புக்கள் பறை சாற்று கின்றன. இத்தகைய மனிதத்துவப் பண்புக் கூறுகளை மாட மாளிகைகளில் மட்டுமே தேடியலையாது மண் ணிலே புரளும் சாதாரண ஏழைத் தொழிலாளிகளிடத்தி லும் வறுமைப் பேயின் கொடுங்கரங்களிலே சிக்கித் தின ரும் ஏழை எளியவர்களிடத்திலும் கண்டு அதனைத் தம் எழுத்து வழி உணர்த்தி விடுகின்றார் இவரது பேனா முனையினின்றும் உருவான 'ஓடையில் நின்னு' (சாக்கடை யிலிருந்து) என்ற குறுநாவல் இதற்குத் தக்க எடுத்துக் காட்டாகும். வாழ்க்கைத் தட்டின் கடைப் பகுதியில் நின்று வாழ்க்கையோடு போராடும் சாதாரண ஏழையி டமும் தியாகமும் அன்பும் அரும்பி மணம் பரப்ப முடியும் என்ற உண்மையை அழகுறப் படம் பிடித்துக் காட்டு கிறார்.

அன்பும் பரிவும் அசாதாரண தியாக உணர்வும் அடக் கினாலும் அடங்காத சுதந்திர மனப்பான்மையும், எந் நிலையிலும் யாருக்காகவும் இம்மியும் விட்டுக் கொடுக் காத சுயமரியாதைப் பண்பும் கொண்ட ரிக்ஷாக் காரன் பப்பு எனும் பாத்திரத்தின் மூலமாக சமுதாயத்தின் அடித்தளத்தில் வாழும் ஏழைகளின்

வாழ்வை அவர்கள் உள்ளத்தின் அடித்தளத்தில் உறங்கிக் கிடக்கும் உயர் பண்புகளை உள்ளமுருகும் வண்ணம் படம் பிடித்துக் காட்டிப் படிப்போரைக் கண்ணீர் சிந்த வைத்து சிந்திக்கத் தூண்டுகிறார். சமுதாயத்தின் எங்கோ ஒரு மூலையில் கிடக்கும் ரிக்ஷாக்காரன் பப்புவை கதா நாயகனாக்கியதன் மூலம் மலையாள இலக்கிய மரபுக்கே புது வழி வகுத்ததோடு காதலெனும் கருவை மையமாகக் கொள்ளாவிடில் அது இலக்கியமெனும் தகுதியைப் பெறாது என்ற எண்ணத்தையும் நிலை குலையச் செய்து விட்டார்.

சாதாரண மக்களின் வாழ்க்கையைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருக்கும் வறுமை, அறியாமை, வாழ்க்கைப் போராட்டம் அதினின்றும் எளிதில் விடுபட அவர்கள் கடைப்பிடிக்கும் குறுக்கு வழித் தீயுணர்வுகள் ஆகியவற்றையெல்லாம் மீறி மனித உள்ளத்தின் உயர் பண்புகளை ஒளிக்கற்றைகளாக வெளிக்கொணர்ந்து விளக்கி விடுகிறார். அதே சமயத்தில் ஒழுக்க வரம்பை மரபாக் கொண்டிருந்த மலையாள இலக்கிய உலகின் போக்கில் அதிருப்தி நிறைந்தவராகவும் தோற்றமளிக்கிறார். ஏனெனில் 'ஒழுக்கம்' பற்றி வேறுபட்ட எண்ணம் கொண்டவர் கேசவ தேவ். 'நல்லொழுக்கம்' என்பது மறைவாக மேற்கொள்ளும் தீயொழுக்கம்தானே என்பது அவரது கருத்து. எனவே தம் படைப்புகளின் வாயிலாக பொய்யையும் மாய்மாலத்தையும் அறவே வெறுப்பதோடு ஒழுக்கம் என்ற பெயரில் கடைப்பிடிக்கப்படும் கபடப் போக்குகளையும் வேடதாரிப் பித்தலாட்டங்களையும் உரமாகக் கண்டிக்கிறார்.

சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கும் போலி உணர்வுகளையும் சமூகச் சீர்கேடுகளையும் களைவதைத் தன் தலையாய கொள்கைகளாகக் கொண்டுள்ள தேவ்

தமது சமூக சீர்திருத்த உணர்வுகளை 'ப்ரநதாலயம்' (பைத்தியககார விடுதி) எனற புதினத்தின் மூலம் நன்கு தெளிவுபடுததுகிறார். சமயவெறி நாட்டை எந்த அளவுக்கு நிலை தடுமாறச் செய்து சீரழிததிருக்கிறது எஃபதையும் தனிபபட்ட மனிதர்கள் மட்டுமல்லாது இந்தச் சமுதாயமே எவ்வாறு சமயவெறிககாளாகிப் பித்துப்பிடிதது அலைகிறது என்பதையும் அழகாகவும தெளிவாகவும விளக்கி விடுகிறார்.

சமுதாயத்தைப் பிடித்துள்ள இததகைய தீமைகளை போக்க வன்முறைப் புரட்சி எனற பெயரில கொலை முறைதான சிறந்தது எனற நமபிக்கைப்போக்கில போய்க் கொண்டிருக்கும இன்றைய சமுதாயததைத் தடுத்து நிறுத்தி,வனமுறையறற வழியிலே சமுதாயததைத திருத்தி மாற்றி மறுகோலம் புனையச் செய்ய வேணடும் எனக் கூறி அககோணத்தில் வாசகர்களைச் சிந்திக்கத தூணடு கிறார். இககருததை இலைமறை காயாக உணர்ததுவதே ''கொல்லறது அனிய கொலலறது'' (கொலலாதே தம்பி கொல்லாதே) எனற சிறுகதை.

இவர் தொழிலாளர்களோடு கொண்டிருந்த தொடர்பும் தொழிற சஙக இயக்கத்தில் பெற்ற நீண்ட நாள் அனுபவமும் பல படைப்புக்களை உருவாக்கத துணை புரிந்துள்ளன. தொழிலாளரின வாழ்க்கையை மன உணர்வுகளை இவரளவுக்குப் புரிந்து கொண்டு எதிரொலிக்கும் படைப்பாசிரியர்களைக் காணபது அரிது உழைக்கும் பாட்டாளி வர்க்கத்திடையே பொங்கி நிற்கும் புரட்சியுணர்வை ''உலக்க'' (உலக்கை) என்ற படைப்பின மூலம எதிரொலிக்கிறார்.

வாழ்க்கையின் ஆழ்ந்த இரகசியங்களையும் மனநிலைகளையும் உளவியல் அடிப்படையில் ''ஆர்க்கு வேண்டி'' (யாருக்காக) என்ற புதினத்தின் மூலம் எடுத்துக் கூறும்

கேசவ தேவின் சொந்த வாழ்க்கையின் அனுபவச் சாயலை 'நடி'' (நடிகை) என்ற படைப்பின மூலம் நாம் அறிந் துணர முடிகிறது நாடகத் துறையோடு நீண்ட கால நெருக்கம் கொண்டிருந்த தேவ் அத்துறையிற் காணும் தீமைகளையெல்லாம் தம் சொந்த அனுபவ முத்திரை யோடு வாசகர்களுக்கு உணர்த்துகிறார். கலைத்துறை யினர் பின்பற்றும தவறான மரபுகளாலும் மாற்றத்தை வெறுப்பதனால் அத்துறை படும் அல்லலகளையும பணத தாசை கொணட நாடகக கம்பெனி முதலாளிகள் பணம பண்ணும் கருவியாகக் கலையை மாற்றுவதன மூலம் கலையின் தரத்தையே தாழ்த்தி நாசமாக்குவதையும அருமையாக விளக்குகிறார்

வாழ்க்கைச் சுழற்சியில் மின்னல வெட்டுப்போல் பட்டுத் தெறிக்கும் வாழ்க்கையின் சிறு சிறு அசைவுகளும் கூட கேசவ தேவின் எழுததுருவில் ஜீவ களையோடு வெளிப்பட்டு இலக்கியத் தகுதியைப் பெற்றுவிடுகின்றன. வெறும் 'ரொமாண்டிக்' போக்கில் கதைக கருவை அமைக் காது 'ரியலிச'ப் போக்கிலேயே கதையை நடத்திச் செல்வ தின மூலம் ''ஓடையில் நினறு'' போன்ற படைப்புக்கள புதினத்திற்குத தேவையான எல்லா அம்சங்களையும் பெறாமற்போனபோதிலும் தேவ் கூறவந்த செய்திகளை முழுமையாக சித்தரிக்கத் தவறவில்லை.

கதையமைப்பில் காட்டும் கவனத்தைவிட அக்கதை வழி உணர்த்த வேண்டிய எண்ணங்களிலும் உணர்ச்சிகளி லுமே அதிக சிரத்தை காட்டுகிறார் எனறு கூடக் கூற லாம் ஏனெனில் அவரது படைப்புக்கள் இலக்கியத் தகுதி ஒன்றினை மட்டுமே வேண்டி உருவானவைகளல்ல என் பதை அவரே ஒரு சமயம் ''நான் எழுதுவதெல்லாம் இலக்கியமாகி விடவேணடும் என்று எணணிக் கொண்டு எழுதுவதிலலை ஒரு எழுத்தாளன் ஆக வேண்டும் என்றும் நான் ஆசைப்பட்டதில்லை', நான் எழுதுவது இலக்கியம்

என்று என் வாசகர்கள் கூறுகிறார்கள். நான் அதை எதிர்க்கவில்லை. வாசகர்கள் விருப்பப்பட்டால, தொடர்ந்து வாசிப்பார்களேயானால்—நான் எழுதுவது இலக்கியம இல்லை என்றாலும கூடதான மிகவும் திருப்தி யடைவேன். ஏனென்றால் என் சிந்தையையும் செயலை யும் கற்பனையுடன வாசகர்களுக்குக் கைமாற்றம் செய்து தருகிறேன என்பதில்தான் என திருப்தி, ஆசை, ஆர்வம் எல்லாமே இருககிறது' எனக் கூறியுள்ளார்.

கேசவ தேவ் புதினப் படைப்புகளைப் போன்றே சிறு கதை இலக்கியத் துறையிலும் தன் தனி முத்திரையைப் பதித்துள்ளார் எனலாம். கட்டுக் கோப்பான நிகழ்ச்சித் தொடர்களின் அமைப்பும் கதையை வளர்த்து விரித்துச் சொல்லும் போக்கும் முடிவும் பொருத்தமும் இவரது படைப்பாற்றல் திறனுக்குக் கட்டியங் கூறுபவைகள என லாம். உயிரோட்டமும் அழகும் ஒருங்கே கொண்ட இவரது சிறுகதைப் படைப்புகளுள் 'ப்ரவாகம்' 'உஷஸ்' 'சித்திர கால' அனைத்தே நாடகம்' (அன்றைய நாடகம்) 'ஜீவித சக்கரம் பாவி வரன' (எதிர்கால மாப்பிள்ளை) முதலிய சிறுகதைத் தொகுப்புகள் சிறநதவைகளாகும்.

நாடகத் துறைக்கு இவர் ஆற்றியுள்ள பெரும்பணியை எக்காரணம் கொணடும் நாம் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது நீண்டகாலமாக நாடகக் குழுக்களில் பணி யாற்றியதனால் பெற்ற அனுபவங்களைக் கொண்டு புதிய புதிய உத்திகளைக் கையாண்டு நாடகங்கள் பலவற்றைப் படைத்து வெற்றி கணடுள்ளார் இவரது நாடகங்களுள் 'முன்னோட்டு' (முன்னேற்றப் பாதையில்) மத்ய பானி' (குடிகாரன்) 'ப்ரதான மந்திரி' (பிரதம மந்திரி) போன்ற வைகள் குறிப்பிடத்தக்கனவாகும் மற்றும் ஓரங்க வானொலி நாடகங்கள் பலவற்றையும் எழுதியுள்ளார்.

திறனாய்வுத் துறை வளர்ச்சிக்கும் இவர் கணிசமான அளவு தொண்டாற்றியுள்ளார். திறனாய்வு நூல்கள் இரண்டும தம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் நூல்கள் இரண்டும் இவர் எழுதியுள்ளார.

இவரது 'அயல்கார்' என்ற புதினம் 1964ஆம் ஆண்டிற்கான சாகித்திய அககாதெமிப் பரிசைப் பெற்று பலவேறு இந்திய மொழிகளிலும மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. 'ஓடையில நின்னு' என்ற புதினக கதையும் 'ரெளடி' என்ற கதையும் திரைப்படங்களாக எடுக்கப் பட்டுள்ளன.

சிறுகதைக்குரிய கருவையே சில சமயம் புதினமாக விரிந்துப் படைககும் கேசவ தேவின் பாத்திரங்கள் வாசகர்கள் அன்றாட வாழ்வில் காணும சாதாரண மக் களாகவே அமைகிறார்கள். மிகை என்றோ நம்ப முடி யாதவை என்றோ வாசகர்கள் எண்ணும்படி கதையோ வர்ணனைகளோ அமையாது மிகவும் தத்ரூபப் போக்கில் இருப்பது குறிப்பிடத்தக்க மற்றொரு சிறப்பு அம்சமாகும் இவரது படைப்புக்களில் காணும் காட்சிகள் பாத்திரங் கள் நிகழ்ச்சிகள் அனைத்துமே வாசகர்களுக்கு மிகவும பழக்கப்பட்ட சூழலில் அமைவதால் படிப்போர் அவற் றின் மீது எளிதாகக் கவர்ச்சியும் ஈடுபாடும் கொண்டு விடு கின்றனர். இவரது எழுத்து வெற்றிக்கு இது ஒரு முக்கிய காரணம் ஆகும. இவரிடம் இயல்பாக அமைந்துள்ள இவரது சொல்லாட்சித் திறன் படிப்போரை உணர்ச்சிப் பெருக்குடன் கதையோடு ஒன்றிவிடச் செய்கின்றன இவர் தமது படைப்புக்களில் வெறும் காதல் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் தராது அன்றாட வாழ்வில இழையோடி நிற்கும் புதிரான பிரச்சினைகளுக்கு முக்கியத்துவம் தந்து விவாதிக்கிறார். இதனால் இவரது படைப்புக்கள் இலக் கியத் தரத்தை முழுமையாகப் பெறத் தவறி விடுகின்றன என்று ஒரு சில திறனாய்வாளர்கள் குற்றம் சாட்டுகின்ற

னர். காதல்—விலக்கு இலக்கிய ஊழி மலையாள இலக்கியப் படைப்பாளர்களின முன்னோடி எழுத்தாளர் கேசவ தேவ் என்ற உணமையை இவர்கள் உணர்வார்களேயானால் இந்தக் குற்றச்சாட்டு ஏற்படுவதற்கே வழியில்லாமல் போயவிடும்.

# பேராசிரியர் ஜோசஃப் முண்டசேரி

வளரும் இலக்கியத் துறைக்கு தரமான வளர்ச்சி வேகம் ஊட்ட வல்ல விசைக்கருவி திறனாய்வுத் துறை யாகும். அத்துறையின் வளர்ச்சியினை அளவைப் பொருத்தே புத்திலக்கியத்தின் தரமே கணிக்கப்படுகிறது. அம்முறை யில் இன்று இந்த புத்திலக்கிய அரங்கில மலையாளப் படைப்புக்கள் பெற்றுவரும் சிறப்பு மிகு பெருமையில் பெரும் பகுதி மலையாளத் திறனாய்வுத் துறையையே சாரும் எனக் கூறினால் அதில் தவறிருக்க முடியாது. அந்த அளவுக்கு மலையாள இலக்கிய உலகில் திறனாய்வுத் துறையை செழுமைமிக்கப் பெருந்துறையாக வளர்த்து வருகிற திறனாய்வாளர்களுள் குறிப்டத்தக்க ஒருவராக இன்றைய மலையாள இலக்கிய உலகில மதித்துப் போற் றப்படுபவர் 'சாகித்திய குசலன்' பேராசிரியர் ஜோசஃப் முண்டசேரி அவர்கள் ஆவர்.

பழைய இலக்கியங்களில் ஆழ்ந்த புலமையுள்ளவர் களுக்கு தற்கால மனப்பாங்கு முழுமையாக இருப்பதில்லை தற்கால மனப்போக்கு உள்ளவர்களுக்கு பழம்பெரும் இலக்கியங்களில் ஆழ்ந்த புலமை இருப்பதில்லை. ஆனால் விதிவிலக்காக இவ்விரு தன்மைகளும் ஒருசேரக் கொண்ட வராக மலையாள இலக்கிய உலகில் கருதப்படுபவர் பேராசிரியர் முண்டசேரி ஆவார்.

பழைய மரபுவழிப் புலமைக்கும் தற்கால எழுத்துப் போக்குக்குமிடையே இணையற்ற இணைப்புப் பாலமாக விளங்கும் முண்டசேரி அவர்கள் அறுபத்தெட்டு வயது நிறையப்பெற்ற அனுபவ நிறை குடமானவர் 1902ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 17ஆம் நாளன்று திருச்சூரில் பிறந்த அவர், சென்னைப் பல்கலைக் கழக எப்.ஏ. பட்ட

தாரியாகி திருச்சூர் செயின்ட் தாமஸ் கல்லூரி மலை யாள மொழிப் பேராசிரியராக நீண்டகாலம் பணி யாற்றியதோடு, 1957-59ஆம் ஆண்டுகளில் அரசோச்சிய கம்யூனிஸ்ட் கட்சி அமைச்சரவையிலும் கல்வியமைச்சராக அமர்ந்து அரும் பணியாற்றியுள்ளார். முற்போக்கு எழுந் தாளர் குழுவின் தலைவரான அவர் சாகித்திய அக்கா தெமியின் உறுப்பினராகவும் பணியாற்றி வருகின்றார்.

பேராசிரியர் முண்டசேரியின் இலக்கிய வாழ்வு மலர்ப் படுக்கையாக அமைந்ததன்று. கலலையும் முல்லை யும் கடந்து வநத போராட்ட வாழ்வாகும். அவருக்குக் கிடைத்த பாராட்டுக்களைவிட சந்தித்த எதிர்ப்புக்களே ஏராளம் காய்தல் உவத்தல் இனறி நடுநிலைமையில் தன உள்ளத்திற்குச் சரியெனததோனறிய கருத்துக்களைத் துணிவாக வெளியிடும் இவரது போக்கே இதற்குக் காரணமாகும்.

பழமை என்பதற்காகவே எதையும் குறைவாக மதிப் பிடுவதோ அல்லது புதுமை என்பதற்காகவே எதையும் ஆகா! ஊஹூ! எனக் கண்மூடித்தனமாக வானளாவப் போற்றிப் புகழ்வதோ இவரிடம் காணமுடியாத ஒன்று. எதிலும் குறைநிறை கணடு துணிவாக அதனை மக்கள் மன்றததில்—அறிஞர் முன்வைக்கும் இயல்பு கொணடவர்.

இத்தகைய போக்கும் போராட்ட வாழ்வும் இவர் கல்லூரிப் போரசிரியராகப் பொறுப்பேற்ற நாளி லிருந்தே தொடங்கிவிட்டதெனலாம். இக்கால கட்டத்தில் இவர் ஆங்கிலத்திலும் சமஸ்கிருதத்திலும் நிறை புலமை பெற்றார். இதன் மூலம் பழமை புதுமை இரணடின் அடித்தளத்தையும் துல்லியமாக மதிப்பிட்டறியும ஆற்றல் ஏற்படஏதுவாயிற்றுசமய, சமூக எல்லை கடந்த நிலையில் தம் சிந்தனையையும் கருத்துக்களையும் துணிவுடன் முன

வைக்கும் மனப் பக்குவம் பெற்றார். தவறு என்று தம் மனத்திற்குப்பட்டவைகளைத் தயக்கம் இன்றி எடுத்துக் கூறினார். இதனால் சமூகத்திலும இலககியத துறையிலும் செல்வாக்குப் பெற்ற வைதீக மனப்பான்மையுள்ள பல பெரிய மனிதர்களின எதிர்ப்பையும் சமாளிககவேண்டி வந்தது. ஊக்கம் குன றாமல் உறுதி தளராமல் இன்று வரை அத்தகைய பிற்போக்காளர்களை எதிர்தது முழகக மிட்டபடியே தன் இலக்கிய வாழ்வை நடத்திக்கொண்டு வருவதோடு இலக்கிய உலகில் வலியும் வனப்புமிக்க பெருந்துறையாகக கட்டுககோப்போடு வளர்தது வந்துள்ளார்.

மலையாள இலக்கியத் திறனாய்வுத் துறையின வளர்ச்சிக்கு 'வித்யா விநோதினி' ஆசிரியர் அச்சுதமேனன் அடியெடுததுக் கொடுக்க, ஏ. பாலகிருஷ்ண பிள்ளை தள மிட அதனமீது வலிவும் பொலிவுமிக்க அழகுமிழும் மாளி கையாகத் திறனாய்வுத துறையைக் கட்டி முடித்த பெரி யார்களுள் முதல் இடததைப் பெறுபவர் பேராசிரியர் முண்டசேரி என்பதில் ஐயமில்லை.

வளர்ந்துவரும் மேனாட்டு இலக்கியத் திறனாய்வுத் துறையின முனைப்புகளுக்கும் மலையாள இலக்கியத் திறனாய்வின் அடிப்படை போக்குகளுக்கும் தொடர்பு காணும் பேராசிரியர் முண்டசேரி, ஆழ்ந்த அனுபவத்தி லிருந்துதான் உயர்ந்த இலக்கியம தோன்றுகிறதென்றும் அந்த அனுபவத்துக்கும் சமூகத்துக்கும் எந்த அளவு தொடர்புணடோ அந்த அளவுதான் அந்த இலக்கியத் துக்கு மதிப்பும் சிறப்பும் உண்டென று நம்புகிறார். இம் முறையில இவர் திறனாய்வுத் துறையின் வளர்ச்சிக்குப் பேருதவி அளிக்கும் வண்ணம் 'மாற்றொலி' (எதிரொலி) 'அந்தரீட்சம்' (காற்று மண்டலம) 'மானதணடம்' (அளவுகோல்) 'ரூப பதரத' (உருவமைதி) 'ப்ரயாணம்'

(பயணம்) 'வாயன சாலையில்' (வாசக சாலையில்) போன்ற நூல்களை எழுதியுள்ளார்.

கல்லூரிப் பேராசிரியர் பணி, அவரது வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க பல மாற்றங்களையும் விளைவுகளையும் உண்டாக்கியதெனலாம் அப்பணியில் அவர் பெற்ற அனுபவங்கள் எழுததுருவில் வெளிவந்து அத்துறை பற்றிய கசப்பான உண்மைகள் பலவற்றை எதிரொலித்து மக்களைச் சிந்திக்கத தூண்டின இவ்வகையில் குறிப்பிடத்தக்க படைப்பு 'ப்ரொஃபஸர்' (பேராசிரியர்) எனும புதினமாகும் இதில் சிறப்புமிகு ஆசிரியர் பணிக்கும் உயாந்த அந்தஸ்திற்குமிடையே அகபபட்டுத் தததளித்து அல்லலுறும கல்லூரி ஆசிரியரின வாழ்க்கையை திறம்படச் சித்தரிதது்க் கட்டியுள்ளார். அதோடு இன்றைய கல்விமுறையின் அவல நிலைகளையும் அவைகளைப் பயன்தரும் வகையில் திருதநி மாற்றி அமைபபதன்மூலம் ஆசிரியரின் துயரங்களைக் களைவதோடு சீர்குலைநதுள்ள இன்றைய சமூகத்தின் கோணல நிலைகளை எப்படியெல்லாம் செப்பனிட இயலும எனபதைப் பற்றியும ஆழ்ந்து சிந்தித்துள்ளார் என்பதை "சோத்ய சீலமோ அனுசரண சீலமோ" (வினாவுவது நல்ல பழக்கமா கீழ்ப்படுவது நல்ல பழக்கமா?) "காலேஜ் வித்யாப்பியாசம் ப்ரயோஜனகரமாகணுமெங்கில்?' (கல்லூரிப் படிப்புப் பயனபட வேண்டுமானல்) முதலிய கட்டுரைகளிலிருந்தும் 'அத்யாபகரோடும்—வித்யார்த்திகளோடும்'' (ஆசிரியர்க்கும்—மாணவர்க்கும்) என்ற நூலின் மூலமும் நாம நன்கு அறிந்துணர முடிகிறது.

இவரது கவனம் முழுவதும் திறனாய்வுத் துறையைச் சுற்றியே படர்ந்திருப்பதால் படைப்பிலக்கியங்களை இவர் அதிகமாக உருவாக்கவில்லை. "ப்ரொஃபஸர்," (பேராசிரியர்) என்ற புதின மன்னியில் "கொததயில் நின்னு குரிசிலேக்கு'' (ஜெபமாலையிலிருந்து சிலுவைக்கு)

என்ற பெயரில் மற்றுமோர் புதினத்தையும் எழுதியுள்ளார் ஏழைக் கிருஸ்துவ மக்களின் வாழ்க்கையும் அவர்கள் மீது தேவாலயத் திருச்சபைக்குள்ள செல்வாக்கையும் விளக்குகிறது இப்புதினம. இவர் சிறுகதைகள் பலவற்றையும் எழுதியுள்ளார். அவைகள் மூன்று தொகுதிகளாக வெளிவந்துள்ளன. மாக்ஸிம் கார்க்கியின வாழ்க்கை வரலாற்றையும் ரஷ்ய நாட்டின் வரலாற்றையும் எழுதியுள்ளார். "ஒட்ட. தோட்டத்தில்" (ஒரே பார்வையில்) என்ற சுவை நிறைந்த பயண நூலையும் "சீனா முன்னோட்டு" (சீனாவின் முனனேற்றம்) "மதம் அவிடேயும் இவிடேயும்" (சமயம் அங்கும் இங்கும்) போன்ற நூல்கள் இவரது அயல்நாட்டு அனுபவங்களை அழகுற விளக்குகின்றன. தமது சொந்த வாழ்க்கை அனுபவங்களையும் சுவையாக விளக்கும் நூல்கள் சிலவற்றையும் எழுதியுள்ளார் அவைகளுள் குறிப்பிடத்தக்கன "கொழிஞ்ச இலைகள்" (உதிர்ந்த இலைகள்) "மங்காத ஓர்மகள" (மங்காத நினைவுகள்) ஆகியனவாகும்.

பேராசிரியர் முண்டசேரி எழுதிய நூல்கள் அனைத்திலும் அவருக்கு நிலையான புகழைத் தேடித் தருபவை அவர் திறனாய்வு பற்றி எழுதியுள்ள பத்திற்கு மேற்பட்ட நூல்களேயாகும்.

கல்வித்துறை நிபுணர் சமூகவியலாளர் சீர்திருத்தவாதி முற்போக்கு எழுத்தாளர் அரசியல்வாதி என்ற பல்வேறு துறைகளிலும் இவரது பணி பரவிக் கிடந்தபோதிலும் ஒட்டுமொத்தமான நிலையில் இவர் மலையாள இலக்கிய உலகில் தலைசிறந்த ஓர் இலக்கியத் திறனாய்வாளர் என்ற மகுடததாலேயே மதித்துப் போற்றப்படுகின்றார் இவரது வாழ்க்கை முழுவதும் நிழல்போல் தொடர்ந்து கொண்டிருப்பது இவரது திறனாய்வுணர்வே என்பதை வாழ்க்கை வரலாறே நன்கு விளக்குகிறது.

இவரது வாழ்கசையின் வளர்ச்சி மலையாள இலக்கியத் திறனாய்வுத் துறையின் வளர்ச்சியாகவே அமைநதுளளது

தொடக்க காலததில் இவர் கல்லூரி ஆசிரியப் பணி யில் கால் வைதத காலமே திறனாயவுத துறையின மாபெரும் மாற்றத்திற்கு வழிகோலிய காலமாக அமைந் தது அதுவரை அத்துறையின வளர்ச்சிக்கு உறுதுணையா யமைந்து பணியாற்றி வந்த "ஜீவத் சாகித்திய சமிதி" (இயற்கை இலககியப் படைப்பாளர் சங்கம்) இவரது முனைப்பினால 1934இல் 'புரோகமன சாகித்திய சமிதி'. (முற்போக்கு எழுத்தாளர் சங்கம) என மாற்றமடைநது புதிய திக்கில் தனது பணியைத தொடர்ந்தது. ஆனால் புதுமை எனும் போதையில் மயங்கிய சிலர் முற்போக்கு என்பதையே தவறாகப புரிநது கொணடு தவறான பாதையில் தலைதெறிக்கும் வேகத்தில் ஓடத் தொடங்கி னர். இத்தகைய அழிவுப் போக்கிலிருந்து முற்போக்கு உணாவையும எழுததுலகையும் திறனாய்வுத துறையை யும் சிதையாமல் கட்டிக் காகக பேராசிரியர் முணடசேரி யைத தலைமையாகக் கொண்ட திறனாய்வாளர்கள் "ரூப பத்ர வாதம" (சரியான அமைப்புக் கொளகை) எனற ஓர் அமைப்பைக் கணடு திறனாய்வுலகை சரியானப் பாதைக்குத் திருப்பினர். பினனர் இப்புது முறைக்கு இலக்கணமாக அமையவல்ல "ரூப பத்ரத" (உருவமைதி) எனற நூலையும் எழுதி வெளியிட்டார்.

புகழ்பெற்ற மேனாட்டுத திறனாய்வாளர்களான அபர் கராம்பி, ஐ ஏ. ரிசசர்ட் போன்றவர்களின் கருத்துக் களால் பெரிதும் ஈர்க்கப்பட்டிருந்த பேராசிரியர் முண்ட சேரி காலப்போக்கில் இலக்கியத்தில் சமுதாயத்தின் முக் கியத்துவமும் படைப்பிலக்கிய எழுத்தாளனை சமூகம் பாதிக்கும் முறையும் இவரது சிந்தனையில் அழுத்தமான முத்திரைகளைப் பதிததன இதன் விளைவாக இவர்

தொடக்க காலத்தில் திறனாய்வு பற்றிக் கொண்டிருந்த கருத்துககளையும கண்ணோட்டதகதையுமே மாற்றிக் கொண்டார் எனலாம் இதன் பினனர் இவர் நுண ணுணர்வுத திறனாய்வு (Impressionistic Criticism) போக்கைக் கைவிட்டு வரலாற்றுப் போக்கில் அல்லது சமூகக் கணணோடடததில திறனாய்வை மேற்கொள்ள லானார் பின்னா இவ்விரண்டு போக்குகளையும் இணைததுப் புதுமுறையை உருவாக்கியுள்ளார் "நாட காந்தப் கவித்துவம்" (கவிதையின் முடிவு நாடகம்) என்ற திறனாய்வு நூல் இபமுறைக்குச் சிறந்ததொரு திறனாய்வு இலக்கண நூலாகவே அமைந்துள்ள தெனலாம்.

கூர்த்த ஆராய்ச்சி நுணணோக்கும் உணர்ச்சிகளைச் சொல்லோவியமாக வடிதது உணர்த்திக் காட்டும் எழுத்து வனமையும் கொண்ட பேராசிரியர் முணடசேரி எழுத் தாளனின நாடியைப் பிடித்துப் பார்ப்பதில் தன்னிகரறற வராக—திறனாய்வுலகின் விடிவெள்ளியாக விளங்குவதற்கு அடிப்படைக் காரணம் அவர் எழுத்தாளனையும் அவன் எழுததையும நன்கு புரிந்து கொண்ட பின்னரே திறனாய்நது தெளிவதையும தன் இயல்பாகக் கொண் டிருப்பதேயாகும்

இளமை முதலே எழுத்தாற்றலும் சொல்லாற்றலும் இனிது வாய்க்கப்பெறற இவர் தனது வன்மைமிகு எழுத் தாலும சொல்லாலும் இடையறாது திறனாய்வுத் துறைக் குச் சிறப்பேறறி வருவதோடு ஆற்றல கொணட இளம் பரம்பரையொன்றையே இன்று வளர்த்து விடடிருக் கிறார் எனக் கூறின் அஃது மிகையன்று.

# பி.சி.குட்டிகிருஷ்ணன் (உரூப்)

'உரூப்' எனும் புனைபெயரில் மலையாள இலக்கிய உலகில் பெரும் புகழ் பெற்று விளங்கும் பி. சி. குட்டி கிருஷ்ணன், மலையாள மக்களில் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் வாழ்க்கையை அப்பட்டமாகத் தோலு ரித்துக் காட்டுவதிலும், அவர்களது வாழ்க்கைப் பிரச் சனைகளை அதியற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுவதி லும் சிறந்து விளங்குபவராவார். நடுத்தர வகுப்பு மக்களின் வாழ்க்கையில் இழையோடும் சிறப்பான அம்சங் களைத் தன் படைப்புக்களின் கருவாக அமைத்து அவர் தம் வாழ்க்கைச் சூழலையும், நிகழ்ச்சிப் போக்குகளையும் நகைச்சுவை நனி சொட்டச் சொட்ட கேலியும் கிண்டலு மாக விளக்குவதற்கு இவர் கையாளும் பாணி குறிப்பிடத் தக்க தனிச் சிறப்புடையதாகும்.

இவரது படைப்புக்களில் காணும் மற்றொரு சிறப்பம் சம், இவர் கதைக் கருவைத் தேடி செம்மையாக அமைப் பதில் எவ்வளவு தீவிர கவனம் செலுத்துகிறாரோ, அதற் குச் சிறிதும் குறையாத அளவுக்குப் பாத்திரங்களை உரு வாக்குவதிலும் காட்டுகிறார். கைதேர்ந்த சிற்பியின் செதுக்குதலைப் போன்று இவரது பாத்திரங்களை அழ கோவியங்களாக உருவாக்கி நடமாட விடுகின்றார். அவை தங்களுக்கே உரிய இயல்பான போக்கினின்றும் சிறிதும் மாறுபடுவதில்லை. இதனால் செயற்கைத்தன்மை எதையும் இவரது கதையிலோ பாத்திரப் படைப்பிலோ நாம் காணமுடிவதில்லை.

பாத்திரங்கள் உரையாடுவதாக அமைக்கப்படும் சொல்லமைப்புகளின் மூலம் அவற்றின் தன்மைகளை முழுமையாக வெளிப்படுத்துவதில் வல்லவர் உரூப். இதன

மூலம் கதாபாத்திரங்களின் உள்ளுணர்வுகளை மட்டு மல்லாது, அவர்களின் வாழ்க்கைச் சூழலையும் அடியிற் காணும் உருவம போனறு அறிந்துணர முடிகின்றது. இதனால் இயலபாக புனனேறும கதைப் போக்கில் பாத் திரங்கள் அனாயாசமாக உருவாகின்றன என்ற மன உணர்வை வாசகர்களிடையே ஏற்படுத்தி விடுகிறார். இஃது இவரது வெற்றிகரமான படைப்பு இரகசியங்களில் ஒன்றாகும.

இவர் முஸ்லிம மக்களின் வாழ்க்கையைச் சித்தரிப் பதில் தனித்திறமை பெறறவர். முஸ்லிம் எழுத்தாளர்களே மூக்கின் மேல் விரலை வைத்து வியக்கும் வண்ணம முஸ் களின் பழக்க வழக்க பேச்சு நடைகளையும் மன உணர்வு களையும் சமயச் சார்பான சடங்கு முறைகளையும் அற் புதமாக வரைந்து காட்டுவதில் அருந்திறமை பெற்றவர் என்பதற்கு எடுத்துக்காட்டு மலபார் முஸ்லிம்களின சமூக வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் இவரது 'உம் மாச்சு' எனும் புதினம்.

1956இல் கேரள சாகித்திய அக்காதெமியின் பரிசு பெற்ற இபபுதினம 'மாத்ரு பூமி' வார இதழில் தொடர் கதையாக வந்து பின் நூல் வடிவம் பெற்றதாகும். உம் மாச்சு என்ற பெணமணியை மையமாக வைத்துப் பின னப்பட்ட இபபுதினம் அவள் வாழ்க்கையில ஏற்பட்ட பல்வேறு பிரச்னைகளை திறம்பட விளக்குவதாகும். இப் புதினததில் நடமாடும பாததிரததின் புறப்போக்குகளைக் காட்டிலும் அக உணர்வுகளை மனோதததுவ அடிப்படை யில் விளக்குவதிலேயே ஆசிரியர் திறமை காட்டியுள்ளார். பாத்திரங்களின் சிந்தனைப் போக்குகளையும உணர்ச்சி களையும் விளக்குவது போனறே முஸ்லிம இனத்தின் பண் பாட்டுத் திறத்தையும் அற்புதமாக வரைந்து காட்டிய இவர். ஒரு முஸ்லிம் அல்லாத எழுத்தாளர் என்ற உண்மை யை அறிந்தபோது வாசகர்கள் அடைந்த வியப்புக்கு

அளவே இல்லை, அந்த அளவுக்கு முஸ்லிமகளின வாழ்க் கையைச சிததரிப்பதில வல்லவராக விளங்குகிறார் இவர். முஸ்லிம் மக்கள் பெரும்பான்மையினராக வாழும் பொன னாணி பகுதியைச் சார்ந்தவர் இவர் எனபது ஒரு காரணம் ஆகும்.

'உம்மாச்சு' புதினத்தைவிட இவருக்குப் பெரும் புகழ் தேடித் தந்த புதினம் 'சுந்தரிகளும் சுந்தரன்மாரும்' என்ப தாகும். முதல் உலகப் போர் தொடங்கி இரண்டாம் உலகப்போர் முடிய இருபததைந்தாண்டுகளில் கேரளா வில் நடைபெறற புரட்சிகர மாறுதல்களை எடுத்தியம்பு கிறது இப்படைப்பு. குறிப்பிட்ட இக்காலப் பகுதியில் முதல் உலகப் போரின் பின விளைவுகளும் 'கிலாஃபத்' கிளர்ச்சிகளும் இரண்டாம் உலகப் போரின் விளைவுகளும் மலபாரை பெரிதும் உலுக்கிய நிகழ்ச்சிகளாகும். இநதச் சூழலின அடிததளத்தில் அரசியல் பொருளாதார சமூக குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதல்களைச் சுவை பட விளக்கும் இப்புதினத்தில் முப்பதுக்கு மேற்பட்ட பாத திரப் படைப்புகள் இருந்தபோதிலும் குழப்பமினறி அவா களை கதையோட்டத்தில் இயக்குகிறார் ஆசிரியர். இஃது ஒரு வரலாற்றுப் புதினமாக இருந்தபோதிலும் மக்களின உணர்ச்சிப் போக்குகளைச் செம்மையாக வெளிப்படுத்தத் தவறவில்லை இப்புதினத்தின் சிறப்புணர்ந்த சாகித்திய அக்காதெமி 1961ஆம் ஆண்டில் பரிசளித்துப் பாராட்டி யது.

இவர் சிறந்த புதினப் படைப்பாளர் என்று புகழ் பெற்று இருப்பது போன்றே சிறுகதையாசிரியராகவும் பெரிதும் மதிக்கப்படுகின்றார். இவர் கவிஞராக இலக்கிய உலகில் அடியெடுத்து வைத்து பினனர் சிறுகதை ஆசிரிய ராக மலர்ந்து பிறகு புதினப் படைப்பாளராக மணம் பரப்பினார் இவர் நாடகாசிரியரும் குழந்தை இலக்கியப் படைப்பாளரும் கூட ஆவார்.

இவாது சிறுகதைகள் மின்னல் வெட்டுப் போன்ற மனித உணர்வுகளுக்கு உருவம் தருபவைகளாகும் இவரது சிறுகதைகள் பலவும் தொகுப்பு நூல்களாக வெளியிடப் பட்டுள்ளன அவைகளுள் குறிப்பிடத் தக்கவை 'தேன் முள்ளுகள்' 'நீர்ச்சாலுகள்' (நீர்க்கால்கள்) 'நவோன மேஷம்' (புது எழுச்சி) நீல வெளிச்சம்' 'துறந்நிட்ட ஜாலகம்' (திறந்து கிடக்கிற பலகணி) 'கதிர்க் கற்றகள்' முதலியனவாகும்.

சிறுகதைத் துறையிலிருந்து புதினத் துறைக்குத் தன் எழுத்துப் பணியை விரிவாக்குவதற்கு இடைப்பட்ட காலததில் சிறுகதையினின றும் சற்று நீண்ட குறுநாவல் கள் பலவற்றைப் படைத்துள்ளார். இவை சிறுகதையி லிருநது புதினத்திற்கு மாறுவதற்கான இடைக்கால வளர்ச்சியைச் சுட்டிக்காட்டும சானறுகளாக விளங்கு கின்றன அவைகளுள் 'ஆமீனா' மிணடாப் பெண்ணு' (அமைதியாகத் தொல்லை தரும் பெண) 'மௌலவியும் சங்காதிமாரும்' (மௌலவியும் தோழர்களும்) 'குஞ்சம்மை யும கூட்டுசாரும்) முதலியன குறிப்பிடத்தக்கவைகளாகும்

இவர் 'மிஸ் சின்னுவும் லேடி ஜானும்' 'மண்ணும் பெணணும்' 'தீ கொணடு களிக்கறது' (தீயுடன் விளை யாடதே) போனற நாடகங்களையும் 'பிறநநாள்' (பிறந்த நாள்) எனற கவிதைத தொகுப்பையும மல்லனும் மரண மும்' (மல்லனும் இறப்பும) என்ற சிறுவர் இலக்கியத்தை யும் படைத்துள்ளார்.

இவர் தன தாய் மொழியான மலையாள மொழி யோடு ஆங்கிலம் சமஸ்கிருதம் தமிழ் ஆகிய பிற மொழி களையம் நன்கு அறிவார் இவர் தனது 'குஞ்சம்மையும் கூடடுகாரும்' என்ற குறுநாவலை 'வெறும் மனிதன்' என்ற தலைப்பில் தானே தமிழில் மொழி பெயர்தது வெளியிட்டுள்ளார். இவரது இலக்கியப் படைப்புகள் சில

வற்றிற்குப் பிரிக்கப்படாத அன்றைய சென்னை அரசாங்கப் பரிசுகளும கிடைத்துள்ளன.

மக்களின வாழ்க்கை நிலைகளை, ஆழ நீளங்களை அற்புதமாகப் படமபிடித்துக் காட்டவல்ல ஆற்றலை இவர் பெற்றிருப்பதற்குக் காரணம, சுதந்திரப் போராட்டத்தில் இளமையிலேயே தீவிரமாக ஈடுபட்டு அதன் காரணமாக கிராமம் கிராமமாகச் சுற்றியலைந்து, பல்வேறு வகைப்பட்ட மக்களோடு நெருக்கமாகக் கலந்துற வாடிப் பெற்ற அனுபவமே ஆகும். அரசாங்கப் பணியிலும், பின்னர் 'மங்களோதயம்' இலக்கிய இதழின் ஆசிரியப் பொறுப்பிலும், பிறகு தொடர்ந்து வானொலியிலும பணியாற்றிய இவரது படைப்புக்கள் பலவும் இலக்கிய இதழ்களில வெளிவந்து நூல்வடிவம் பெற்றவைகளே யாகும்.

பதினைந்தாம் வயதில் கவிதை இயற்றியதோடு தொடங்கிய இவரது எழுத்துப்பணி நாற்பது ஆண்டுகளாகத தொடர்ந்து நடந்து வருகிறது. இவர் தேர்ந்தெடுக்கும் கதைக கருவும், பாத்திரச் சிறப்பும், கதை சொல்லும் பாணியும் எதார்த்தப் போக்கும், உயர்தர நகைச்சுவை கொண்ட எழுத்தும் வாசகர்களின் மத்தியில் இவருக்கு நிலையான இடத்தைப் பெற்றுத் தந்துள்ள தோடு, இன்றைய மலையாள இலக்கிய உலகில விரல் விட்டு எணணத்தக்க ஒரு சில உயர்ந்த படைப்பாசிரியர் களில இவரும் ஒருவர் என்ற புகழ்மிகு நிலையையும் உருவாக்கியுள்ளன.

இவரது எழுத்துக்கள் பலவும் 'உரூப்' என்ற புனை பெயரிலேயே வெளிவந்துள்ளன 'உரூப்' என்றால் 'அந்திப் பொழுது' என்பது பொருளாகும். எனினும் உரூபின் எழுத்துக்கள் இருண்ட பகுதிகளுக்கு வெளிச்ச மூட்டுவ தாகவே அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை.

# வைக்கம் முஹம்மத் பஷீர்

மனித உள்ளத்தின் நுட்பமான தந்திகளை மீட்டு வதன் மூலம் எழும் இதய ஓசைகளை சொல்லோவிய மாகத் தீட்டிக் காட்டுவதிலே தனனிகாற்று விளங்கும் வைக்கம் முஹம்மத் பஷீர். சமூகத்தில் புரையோடிப் போயிருக்கும பழமைப் போக்குகளை மட்டும் தகர்த்தெறி யும் மனப்போக்குப் படைத்த எழுததுச் சிற்பியல்ல; மொழியின் இலக்கணக் கட்டுக் கோபபுகளையெல்லாம உதறித் தள்ளிவிட்டு எண்ணத்தை எடுத்துச் சொல்ல உதவும் கருவி எனற அளவில் மட்டுமே மொழியைக் கையாளும் புதுமைப் போக்குடையவருமாவார்.

ஏனெனில் மொழிச் செம்மையில் காட்டும் அக்கறை யைவிட மிகுதியாக அவரது பேனா முனை மனித உள்ளங் களை ஆழ்ந்து நோக்கி எதிரொலிப்பதிலேயே அதிகக் கவனம் செலுத்திகிறது எனக் கூறினும் பொருந்தும்.

சிறுகதைக்குரிய கருவையே புதினமாக தீட்டிப் படைக்கும் தனித்திறமை படைத்த பஷீர் ஒருவகையில தான் படைக்கும் பாத்திரங்களின் மூலம் தன்னைப் பற்றியே சொற்பொழிவாற்றுகிறாரோ எனறு எணணத் தோன்றுகிறது அவரது பாத்திரப் படைப்புகள் பேசும் முறையும் மொழியும் அவ்வகையில்தான் அமைந்துள்ளன. அந்த அளவுக்கு அவர் வாழ்க்கையில் எத்தனை தட்டுகள உண்டோ அவை அனைத்தின் சாயலாக, அனுபவ நிறை குடமாக விளங்குகிறார் எனலாம். எனவே, அவர் தம் நூல் களின் மூலம் நேரிடையாக நம்மோடு பேசினால் அது சுவையானதாகவும் ரசிக்கும்படியாகவுமே இருக்கிறது.

கேரள மாநிலத்திலுள்ள வைக்கததைச் சார்ந்த தலைபோலப் பரம்பு என்ற ஊரில் இஸ்லாமியக் குடும்ப

மொன்றில் பிறந்த பஷீர் தன இளமைக் கல்வியை ஐந்தாம் படிவத்தோடு நிறுத்திக கொண்டு அக்காலத்தில் புயலென வீசிக் கொணடிருநத அரசியல் போராட்டத்தில் தீவிர மாய்க் குதித்து நாடெங்கும் சுற்றினார். அப்போது வங் காளத்தில உருவான பயங்கர அரசியல் போக்கு அவரது புரட்சியுள்ளததை வேகமாக ஈர்தது தனனோடு ஐக்கியப் படுத்திக் கொணடுவிட்டது விளைவு இருமுறை காராக் கிரகத்தில் வாழ நேர்ந்தது அவரை இறுக்கமாகப் பிணைத்திருந்த அரசியல் ஆவேச உணர்வு நாளடைவில் நெகிழ்ச்சியடையவே அவர் அரசியல்வாதி என்ற நிலையி லிருந்து எழுத்தாளர் நிலைக்கு மாறினார். கடந்த முப்பது ஆண்டுகளாக பல்வேறு இடங்களிலும சுற்றித் திரிந்து பல்வேறு தரத்திலுள்ள மக்களோடு நெருங்கிப் பழகி அவர்களின நாடி ஒட்டகங்களையெல்லாம் நன்கறிந்த அனுபவச் செல்வராகத் தன் எழுத்துப் பணியைத் தொடர்நது கொணடிருக்கிறார்.

அவர் சமுதாய அரங்கில் குறிப்பாக தனது இஸ் லாமிய சமூகத்தில் தான் நேரிடையாக காண்பவற்றை— அனுபவிததவற்றையுமே தன படைப்புகளின் கருப்பொரு ளாக அமைக்கிறார். அவரது படைப்புகள் ஒவ்வொன்றி லும் ஏதேனுமொரு பகுதியில் அவரது சொந்த வாழ் வின சோகச் சாயை படிந்திருப்பதைக் காணலாம் அவலக் குரல் எழுப்புப்போக்கில் அவரது படைப்புகள் உருவாகி யிருந்தபோதிலும், வாழ்வை வெறுதது ஒதுக்கத் தூண்டு வதற்கு மாறாக 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்ற உயர் சித்தாந்தத்தை இலைமறை காயாகப் போதிக்கும் முறை யிலே அவை அமைந்திருக்கின்றன எனத் துணிந்து கூற லாம் மேலும் அவற்றின் உயிரோட்டமாக ஆங்காங்கே நகைச்சுவையுணர்வு இழையோடிக் கொணடிருப்பது குறிப்பிடத்தக்க மறறொரு சிறப்பு அம்சமாகும்

வாழ்வின் பிற்போக்குத் தன்மைகளையும் வாழ்வின்

உண்மைப் பொருளையும் விளக்கும வகையில் அவர் சம் பவங்களைப பின்னி கதை வடிவில் சிறப்புடன் தந்து சிந்திக்கத் தூண்டுகிறார். வாழ்வின் ஒவ்வொரு அசைவு களையும் கூட நுணுக்கமாக ஆய்நது கூறும தனிததனமை வாய்ந்தவைகளாக அவரது சிறுகதைகள் விளங்குகின்றன. அவரது சிறுகதைகள பல்வேறு தொகுப்புகளாக வெளி வந்துள்ளன. அவற்றுள் குறிப்பிடததக்கவை, 'ஜனம் தினம' (பிறந்த நாள்), 'விட்டிகளுடெ ஸ்வர்க்கம்' (முட்டாள்களின் சொர்க்கம்), 'முச் சீட்டுக்களிக்கா ரென்றமகள,' (மூனறு சீட்டாட்டல்காரனின் மகள), 'பாவப்பட்டவருடெ வேஸ்ய' (ஏழைகளின் வேசி)' 'ஓர்மக் குறிபபு' (நினைவுக் குறிப்பு), விஸ்வ வியக்யாத மாய மூக்கு' (உலகப் புகழ் பெறற மூக்கு). 'விசப்பு' (பசி) முதலிய சிறுகதைத் தொகுப்புளாகும

இவரது புதினப் படைப்புகளுள் மிகச் சிறந்தவை களாக இலக்கியவாணர்களால் போறறப்படுபவை பால்ய கால சகி' (இளம் பருவத்துத் தோழி) என்ற புதினமும் என்றுப்பாப்பாய்க் கொரானேண்டார்ந்நு' (உன் தாத் தாவுககு ஒரு யானை இருந்தது) என்ற புதினமாகும்.

இளைஞன் மஜீதுக்கும் இளம் |பெண் சுஹ்ராவுக்கு மிடையே மலரும் காதலை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்ட 'பால்ய மலரும் காதலை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்ட 'பால்ய கால சகி'யின் கதை நெஞ்சை நெக்குருகச் செய்யும் வண்ணம் அவலததின உச்ச கட்டததில் முடிவதாலும, தெளிவாக சிக்கலின்றி நேரடியாகவே ஆசிரியர் கதை சொல்லிச் செல்லும் உத்தி யாலும் மலையாளப் புதின இலக்கிய உலகின் அமரத்து வப் படைப்பாகப் போற்றப்படுகிறது

பழமை-புதுமைப் போக்குகளிடையே போராடிக் கொணடிருக்கும் மலையாள முஸ்லிம குடுமபங்களின்

நிலைமைகளை அப்பட்டமாகச் சித்தரிக்கும் புதினமே 'ன்றுப்பாப்பாய்ச் கொரானேண்டார்ந்நு' (உன் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது) என்ற புதினப் படைப்பு. பழமைப் போக்கால் நலிந்து வரும் குடும்பமொன்றின் படப்பிடிப்பான இப்புதினத்தில், பிரத்தியட்ச நிலைமைகளை சிந்தையிலிருத்தாது பொய்யான பழம் பெருமைகளைப் பேசிக்கொண்டிருப்பதால் மேலும் நலிவே உண்டாகும் என்ற உண்மையை சிந்தைகொள் வழியில் சிறப்புற உணர்த்துகிறார் பஷீர். ஆனமக்காரரின் செல்வ மகளான உம்மா எப்போதும் தான கொடிய வறுமையில் உழலும்போதுமகூட பழைய 'ஆனமக்கார் குடும்பப் பெருமைகளைச் சப்புக் கொட்டிக் கொணடே கற்பனையுலகில் காலங் கடத்துகிறாள். தனது மகள் பாத்துமாவையும் அவ்வாறே பழம் பெருமை யுணர்ச்சியோடு வாழத் தூண்டுவதன் மூலம் அவள் வாழ்வையும் பாழடிகக முனைகிறாள். இதற்கு நேர்மாறான நிலையில் பண்பாடும் தூய்மையும கல்வியும் நிறைந்த நிஸ்ஸார் அகமது வின குடும்பத்தைப் படைத்து இரணடுக்குமிடையே உறவை உணடாக்கி பணபாடும் நாகரிகமும் குறைந்த குடும்பத்தை நாகரிகம் மிகுந்த நிஸ்ஸார் அகமது குடும்பம் பண்படுத்துவதாகக் கதைப் போக்கை அமைக்கிறார் ஆசிரியர் பஷீர், பழமைக்கும் புதுமைக்கும் இடையேயுண்டாகும் மோதல்களை அழகுறப் படம் பிடித்துக் காட்டுகிறார். எளிமையின உருவமான பாத்துமா என்ற பாத்திரம் அற்புதப் படைப்பாக இப்புதினத்தில் அமைந்துள்ளது.

பஷீரின் குறிப்பிடத்தக்க மற்றொரு படைப்பு 'கதா பீஜம்' (கதை விதது) என்பதாகும. இப்படைப்பு ஒரு எழுத்தாளனின் வாழ்க்கையை அடித்தளமாகக் கொண்டு பின்னப்பட்டதாகும இதன் கதாநாயகன பஷீரின் வாழ்க்கையையே முழுமையாகப் பிரதிபலிப்பதைப் போன்றே 'பாத்துமையுடெ ஆடு (பாத்துமாவின் ஆடு) என்ற

புதினமும் அவரது வாழ்க்கையின் மறுபதிப்பாக அமைந்துள்ளது.

இவரது படைப்புக்களில் திறனாய்வாளர்களின கடுமையான தாக்குதலுக்கு இரையான கதையம்சங்களை கொண்ட புதினங்கள 'சப்தங்கள்' 'மரணத்திண்டே நிழலில்' (மரணத்தின நிழலில்) ஆகிய இரண்டுமாகும. படிப்போர்க்கு அருவருப்பூட்டும வாழ்க்கை நிகழ்ச்சிகள பல இவற்றில் இடம பெறறுள்ளதே இதற்குக் காரணம். அதிலும் மிக மோசமான, கீழ்த்தர உணர்ச்சியூட்டும அருவருப்பு இலக்கியம் என்று சிலரால் வர்ணிக்கப்படும புதினமான 'சப்தங்கள்' மனித வாழ்க்கையை மூடி மறைத்திருக்கும் தீயுணர்வுகளின் முகத்தி திரையை துணிவோடு கிழித்தெறிந்து உண்மையை உள்ளபடி உணர்த்தும வகையில் இப்புதினம் படைக்கப்பட்டுள்ளது. தீய உணர்ச்சிகளின் முனைப்பால் சீர்கேடடைந்து வரும ஒரு தலைமுறையின் உண்மை வரலாறாகவே அது அமைந்துள்ளது

மலையாள இலக்கிய உலகில் முதன் முதலாக வார ஏடுகளில் தொடர்கதை எழுதிய பெருமை பஷீர் அவர்களையே சாரும் 'ஆனைவாரியும பொன் குரிசும்' 'ஸ்தலத்தே ப்ரதான திவ்யன்' (ஊரூரா பெரியமனிதன்) 'அம்மா' ப்ரேம லேகனம் (காதல் கடிதம்) முதலியவைகள் இவற்றுள குறிப்பிடத் தக்கவைகளாகும ஒரு சில கதாபாத்திரங்களைக் கொண்ட இக்கதைகளை இயக்குவது மற்றொரு குறிப்பிடத்தக்க சிறப்பு அம்சமாகும் இரண்டே கதாபாத்திரங்களைக் கொண்டு சுவைபடப் பின்னப்பட்ட குறுநாவலாகும் பால்ய கால சகி'.

முதிய தலைமுறையின் முன மொழியறியா தருதலையாகவும் புரியாத புதிராகவும இளம் சந்ததியினரிடையே எழுத்துலக முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் திகழும் பஷீர் மலையாள புத்திலக்கிய வரலாற்றில் ஒளிமயமான அத்தியாயங்களை உருவாக்கியவர் என்பது மட்டும் மறுக்க முடியாத உணமையாகும்.

# எம். டி. வாசுதேவன் நாயர்

நாட்டு விடுதலைக்கு முனனர் இநதிய இலக்கிய உல கின் பார்வை வங்க நாட்டின் இலக்கிய உலகை நோக்கிக் குவிந்திருந்தது போனறு இனறு மலையாள இலக்கிய உலகின் மீது குவிந்திருக்கிறது என்றால் இது மிகையான கணிப்பு அனறு விடுதலை வேட்கை உணர்வை ஊட்டும் இலக்கியப் படைப்புகள அனறு வங்கப புரட்சி எழுத் தாளர்களால உருவாக்கப்பட்டது போன்று இன்று மறு மலர்ச்சி இலக்கியப் படைப்புக்கள எதார்த்தவாத அடிப் படையில் உருவாகும் இலக்கியங்களுககு வளமிக்க விளை நிலமாக இன்று கேரளப் விளங்குகிறது இதற்குக் காரணம் என்ன?

எத்தனையோ விஷயங்களை இதற்குக் காரணமாகக் காட்டலாம் என்றாலும எழுச்சிமிகு உணர்ச்சி கொண்ட இளைய தலைமுறையின் வீறு கொணட எழுததுக்கள் இலக்கிய வடிவம் பெற ஆககமூட்டும சூழ்நிலை அங்கு உருவாகி இருப்பதே இதற்கு ஏற்ற காரணமெனலாம் இத்தகைய வீறார்ந்த இளம் தலைமுறைக்கு முன்னு தாரணமாக விளங்குபவர்தான் திரு எம்.டி வாசுதேவன் நாயர் அவாகள்.

திரு வாசுதேவன் நாயர் அவர்கள் நாற்பது வயதைக் கடக்கு முன்னரே சிறந்த சிறுகதைப் படைப்பாளர் புதின ஆசிரியர் இதழாசிரியர் திரைப்படக் கதாசிரியர் திறமை மிகு திறனாய்வாளர் எனற சிறப்புக்களை பெற்றதோடு இத்துறைகளில் தனக்கென தனி வழி வகுத்து தனி முத திரை பெற்றவராகவும் திகழ்கிறார். 1979ஆம் ஆண்டில இவரது புதினப் படைப்பான "காலம்" எனற நூலுககுப் பரிசளித்து சாகித்திய அக்காதெமிப் பெருமை பெற்றது.

அக்காதெமிப் பரிசு பெற்றவர்களிலேயே வயதில் குறைந்த வர் இவர் என்பது இங்குக் குறிப்பிடததக்கது கேரள சாகித்திய அக்காதெமியும் இவருக்குப் பரிசளித்துப் பாராட்டியுள்ளது.

தெற்கு மலபாரில் உள்ள கூடலூரில் பிறந்த இவர் 1953ஆம் ஆண்டில் பாலககாட்டிலுள்ள விக்டோரியா கல்லூரியில் தம் பட்டப் படிப்பை முடித்துக் கொண்டு இரண்டாண்டுகள் அங்குமிங்குமாகப் பணி புரிந்து விட்டு, 1966ஆம் ஆண்டுவாக்கில் புகழ்பெற்ற மலையாள வார இதழான "மாத்ருபூமி" துணை யாசிரியர் பொறுப்பில் அமர்ந்தார். இன்று அந்த வார ஏட்டின ஆசிரியராகத் திகழ்கிறார்.

இளமைதொட்டே இவருக்கு எழுத்தின்பால் ஒரு தனிக் கவர்ச்சி இருந்து வந்தது இவரது மூத்த சகோதரர் களும் எழுத்துத திறமை பெறறவாகளாக இருந்தது இவரது எழுதது வேட்கையை மேலும தூண்டி வந்ததென லாம. கிடைக்கும் இலக்கிய இதழ்களையும் நூல்களையும ஆர்வத்தோடு படிக்கும இவா, அவைகளில் வெளியாகும் எழுத்தாளாகளின புகைப் படங்களை வெட்டியெடுதது சட்டமிட்டு சுவரில் வைப்பது இவரது பழக்கமாகும. இஃது இவரது எழுததார்வததிறகும் எழுததாள வேட் கைககும ஏறற எடுததுக்காட்டாகும.

பள்ளியில் படிக்கும்போது முளைவிட்டு வளர ஆரம்பித்த எழுதது வேட்கை, கல்லூரி நாட்களில் மலர்ந்து மனம் வீசத தொடங்கி விட்டது. இவரது முதல் சிறுகதைத் தொகுப்பு 1953ஆம் ஆணடில நூல வடிவம பெற்று வெளி வந்தது. அதே ஆணடில அமெரிககாவின புகழ் பெற்ற ஆங்கில இதழான. 'நியூயார்க ஹெரால்ட் டிரிப்யூன" நடத்திய உலகச் சிறுகதையாக இவரது சிறு கதை தோநதெடுககப்பட்டு பரிசளிக்கப்பட்டது.

இவரது படை..ப்புக்கள் வாசகர்களிடையே மிகுந்த செலவாக்கோடு விளங்குவதற்குக காரணம் அவை வெறும் கற்பனைப் படைப்புக்களாக உருவெடுக்காது அவரது அனுபவச் சாயலில் கருக்கொண்டு உருவாலவதுதான். இவரது படைப்புக்களில் பலவும் ஏற்பட்ட சம்பவமொன் றின் பிரதிபலிப்பேயாகும்

'தன காலத்தைப் பிரதிபலிப்பவனே தலைசிறந்த எழுத்தாளன்' என்ற பொருள மொழிக்கொப்ப, தான வாழும் சமுதாயத்தில் காணும் மனிதவாழ்வை அப்படியே தோலுரிததுக் காட்டுவதில் இவருக்குள்ள ஆர்வமும் திறமையும் அலாதியானவை. கொழு கொழுவென சிவந்த, மினுமினுப்பான உடலும் ஒயிலான நடையும் எடுப்பான மார்பகமும கொண்ட கதாநாயகிகளைவிட சமுதாயத்தின அடிததட்டில புழுவென புரளுமஏழையரும திரிசங்கு சொர்கக நிலையிலே உழலும் மததிய தர வர்க் கப் பெண்களுமே இவரது படைப்புக்களில் கதாநாயகி களாக அமைகின்றனர். இதன் மூலம் சமுதாயக் குறை களை நாசூக்காக வெளிப்படுத்தவும் அதன மூலம் வாசகர் களை சிந்திக்கத் தூண்டவும இவரால் முடிகிறது.

இவர் சிறந்த புதினப் படைப்பாளர் என்பதைவிடத் தலை சிறந்த சிறுகதை யாசிரியர் என்ற மகுடத்தாலேயே பெரிதும் மதிக்கப்படுகினறார். இவர் இதுவரை பதினானகு சிறுகதைத தொகுதிகளை வெளியிட்டிருக கின்றார். அவற்றுள் 'குட்டியேட்யததி'. ஊளவும் தீரவும்', 'நஷ்டப்பெட்ட தினங்கள்', 'வெயிலும் நிலாவும்,' 'வேத னயூடெ பூக்கள்', 'நினறெ ஓர்மமைக்கு', போனற தொகுப்புக்கள் வடிவிலும் கருததாழத்திலும் தலை சிறந்து விளங்குபவைகளாகும்.

இவர் பத்து புதினப் படைப்புக்களை இதுவரை உரு வாக்கி வெளியிட்டிருக்கிறார். இவற்றுள் 'காலம்', 'நாலு

கெட்டு', மஞ்ஞு', பாதிராவும் பகல் வெளிச்சமும்' ஆகிய புதினங்கள் காலத்தை வென்று நிற்தும பெற்றி யுடையவைகளாகும். இவைகளுள் மஞ்ஞு'வும 'நாலு கெட்டு'வும முனனரே தமிழில பெயர்ககபபட்டு வெளி வந்துளளது. இவரது 'காலம' எனும படைப்பை சாகித் திய அசககதெமி, '1970ஆம ஆணடிறகான தலைசிறந்த மலையாள மொழிப் படைப்பு' எனத தேர்ந்தெடித்து பரிசளித்தது. இவரது புதினப் படைப்புகளுள அளவில பெரியதான இஃது இக்கால சமுதாய வாழ்வை அப்பட்ட மாக, எதாரதத நோக்கில் அழகுற தொகுத்து வழங்கு கிறது. பாததிரப் படைப்புக்களும் பாததிரங்கள் மூல மாகவும் ஆசிரியர் கூறறாகவும் சமூகத்தின் உண்மைநிலை அழகுறப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது இப்புதி னம என்னால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது இதன் மொழி பெயர்ககப்பட்டது இதன மொழிபெயர்ப்பு முறையை ஆய்ந்து இதுவரை இருவர் எம். லிட். பட்டம் பெற்றுள்ளனர் எனபது குறிப்பிடத்தக்கது இவரது பேருழைப்பால் உருவான புதினம 'மஞ்ஞு', எனபதாகும பெரு நாவலாக உருவான இஃது பினனர் ஆசிரியரால் குறுநாவலாக மசப்பம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டது

இவர் மலையாளத் திரைப்படத துறைக்கும் கணிச மான அளவுக்கு இலக்கியத் தொணடாறறியுள்ளார். இவரது எழுததாறறலால் உருவான 'இருட்டின்றெ ஆத்மாவு' என்ற படைப்பு திரைப் படமாக உருவாகி, 1967ஆம ஆண்டின் தலைசிறந்த மலையாள மொழிப் படமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு தேசிய விருது பெற்றது. மற்றும் 'நிழலாட்டம்', 'முறப்பெண்ணு போன்ற கதை களையும் திரைக்கென இவர் எழுதி யளித்துளளாா. அவை நூல் வடிவிலும் வெளி வந்துளளன. தொடர்ந்து இவர் திரைப் படங்களுக்கேற்ற கதைகளை உருவாக்கிக் கொணடு வருகிறார்.

இவரது இலக்கியப் பணிக்கு நிலைக்களனாக அமைந்திருப்பது இவரது பத்திரிகைத் துறை பணியாகும். 1956 ஆம் ஆண்டில் புகழ் பெற்ற மலையாள வார இதழான 'மாத்ருபூமி'யின் உதவியாசிரியராகப் புகுந்த இவர் தன் திறமையின் காரணமாக குறுகிய கால எல்லைக்குள்ளாகவே அதன் ஆசிரியராக பொறுப்பேற்றார் இன்று மாதரு பூமி' இதழ் வடிவிலும் உள்ளடக்கத்திலும் வலுவும் பொலிவும் கொண்டு கேரள நாட்டின் மிகச் சிறந்த வார இதழ் என்ற போற்றுதலைப் பெற்று விளங்குவதற்குக காரணம் இவரது முறபோக்கு உணர்வும் எழுத்துத் திறமையும் இலக்கிய ஆற்றலுமே யாகும். நாற்பத்தைந்து வயதை எட்டுவதற்கு முன்னரே தலைசிறந்த பத்திரிகையாளர் என்ற பெருமையையும் இவர் பத்திரிகை யுலகில் பெற்றுவிட்டார்.

இவர் படைப்பிலக்கியத் துறை போன்றே திறனாய்வுத் துறையிலும் ஆர்வமுள்ளவராக விளங்குகிறார். இவர் திறனாயவு சம்பந்தப்பட்ட நூலொன்றும் எழுதியுள்ளார். இவரது படைப்புத திறன்பற்றி இவரே ஒரு சிறு நூல் எழுதியுள்ளார். பயண நூல் ஒன்றும் எழுதியுள்ளார்.

இலக்கியத்தைப் பற்றி இவர் தனக்கென சில நல்ல கொள்கைகளை வகுத்துககொணடு எழுதி வருகிறார். இலக்கியத்தில் புறத் தோற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்காது இலக்கியத்தின் உள்ளுறைக்கே முக்கியத்துவம் தரவேணடும் என்பதில் அழுத்தமான நம்பிக்கையுள்ளவர் இவரது படைப்புக்கள் சமூக மறு மலர்ச்சிக்கு உறுதுணையாக, படிப்போரிடையே ஒருவித விழிப்புணர்ச்சியை ஊட்டுவனவாக அமைந்துள்ளன என்பதுமறுக்க முடியாத உண்மையாகும்.

# குட்டிக்கிருஷ்ண மாரார்

மலையாள இயக்கியத் திறனாய்வுத் துறையிலும் வள மான உரைநடை வளர்ச்சியிலும் தனக்கென தனிவழி கண்டு தனித்த முத்திரையைப் பதித்திருப்பவர் திரு. குட்டிக்கிருஷ்ண மாரார் அவர்கள் திறனாய்வுத் துறை பெரு வளர்ச்சிக்குக் காரணமாயமைந்தவர்களுள் குறிப் பிடத் தக்கவராகத் திகழும் மாரார், கடந்த முப்பதாண்டு களுக்கு மேலாக மலையாள இலக்கிய வளர்ச்சிக்கும் ஆராய்ச்சி மேம்பாட்டிற்கும் இடையறாது பணியாற்றி வருபவராவார்.

மலையாள எழுத்தாளர்களிலே மிக முதிர்ந்தவராக விளங்கும் மாரார் சமஸ்கிருதத்தில் தன்னிகரற்ற தனிப் பெரும் புலமை பெற்றவர். இளமையிலேயே சமஸ்கிருத மலையாள மொழிப் புலமை நன்கு வாய்க்கப் பெற்ற இவர் தம் இருபதாவது வயதிலேயே எழுதத் தொடங்கி விட்டார் தொடக்க காலத்தில் இவர் பழைய மரபை அடியொற்றியே கட்டுரைகளை எழுதி வந்தார்

இவரது இலக்கிய வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க பெரு மாற்றததுக்கு வழி வகுதத பெருமை மகாகவி வள்ளத் தோலையும், அககால எழுத்தாளர்கள் ஓா ஆதர் சன சக்தியாகத் திகழ்ந்த நாலாப்பாட் நாராயண மேனனையுமே சாரும். வள்ளத் தோலின் உறவு மாராரின சிந்தனையிலும் கருத்திலும மாற்றம விளைவித்தது போன்றே நாராயண மேனனின் நட்பு புதிய எழுத் துணர்ச்சிக்கு வழி வகுத்ததெனலாம்.

வெள்ளப் பெருக்கென இந்நாட்டினுள் புகுந்து மக்களின் உணர்ச்சிகளை சுண்டிவிட்டுக் கொண்டிருந்த

ஐரோப்பிய இலக்கியங்கள், எழுத்தாளர் பலரிடையே புதியதோர் உணர்ச்சியையும் எழுச்சியையும் ஏற்படுத்தி யது போன்றே மாராரின் உள்ளக் கிளர்ச்சிக்குத் தூண்டு கோலாயமைந்தன ஃபிரெஞ்சுப் புரட்சி எழுததாளர் ஹ்யூகோவின படைப்புக்கள் நாலாப்பாட் நாராயண மேனன் மொழி பெயர்தத ஹ்யூகோவின் அமரப் படைப் பான லே மிஸரபிள்' (ஏழை படும்பாடு) மாராரின உள்ளத்தில் அழுத்தமான உணர்வுகளை விதைத்தது சமஸ்கிருத இலக்கியப் பயிற்சி தந்த ஆழ்ந்த கலையுணர்ச் சியும் ஹ்யூகோவின் படைப்புக்களளித்த மனிதாபிமான பேருணர்ச்சியும் இணையவே இவரது சிந்தனையும் எழுததும் புதிய கோணத்தில் வளரத் தொடங்கின மனிதா பிமான உணர்ச்சியை மையமாகக் கொண்டு பழைய இலக்கியங்கள் பலவற்றை விளக்கும் அரிய முயற்சியில ஈடுபட்டு திறனாய்வுப் புததிலக்கியத் துறையை வளப் படுததினார்.

இம்முறையில் இவர் மேற்கொண்ட இலக்கிய ஆராய்ச்சிகள் மலையாள இலக்கியத் திறனாய்வுத்துறை வலுவோடும் பொலிவோடும் வளர பெரிதும் உதவின என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

இவரது திறனாயும் ஆற்றலுக்கும் ஆராய்ச்சிப் புலமைக்கும் கட்டியங்கூறும் அரிய படைப்பாக அமைந் துள்ளது "பாரத பரியாதனம்' (மகாபாரதத்தில்பயணம்) எனும் ஆராய்ச்சி நூல் மகாபாரதத்தை அடித்தளமாகக் கொண்டு எழுதப்பட்ட இந்நூல் பாரதத்தின் முக்கியப் பாத்திரங்களை ஆழமாக அலசி ஆராயும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவற்றைக் கொண்ட நூலாகும் இவரது ஆராய்ச்சிப் புலமையைப் போற்றும் வகையில் அன்றைய சென்னை மாநில அரசு இந்நூலுக்குப் பரிசளித்துப் பாராட்டியது.

மகாகவி காளிதாசரின் கவிதைத் திறனையும் கலையுணர்வையும் அவரது படைப்புகளுள் நீக்கமற நிறைந்திருககும மனிதாபிமான பேருணர்ச்சிகளையும் இனிது விளக்கவல்ல முறையில் இவர் உரை எழுதியுள்ள 'குமார சம்பவம்' 'மேக சந்தேசம்' முதலிய நூல்கள் இலக்கிய உலகால் இன்றும் பெரிதும் போற்றப்படுகின்றன.

'ராஜாங்கணம்' (அரசவை) என்ற நூலின்கண் காணப்படும் 'நளினி' 'சிந்தா விஸ்தாயபா சீதா' முதலிய கவிதைகளைப் பற்றிய திறனாய்வுகள் இவரது நுணமான நுழைபுலமிக்க ஆராய்ச்சித் திறனுக்கு அரிய சான்றுகளாக உள்ளன 'சாகித்திய சலஊாபம்' 'கைவிளக்கு' போன்ற படைப்புககளும தரமான திறனாய்வு நூல்களாக கற்றறறிந்தோரால் போற்றப்படுகின்றன.

ஆற்றொழுக்குப் போன்ற தங்கு தடையற்ற இவரது உரை நடை இனிமையும் எளிமையும் கொண்டது. எந்தக கருததையும் தெளிவாகப் புலப்படுததும் ஆற்றல்மிகக இவரது நடை படிப்போர் உள்ளத்தில் பசுமரததாணி போல பதிந்துவிடுகிறது. இவாது உரைநடை மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெறறிருப்பது போன்றே 'உரைநடை பற்றி இவர் எழுதியுள்ள 'மலையாள உரை நடை' என்ற நூலும் மலையாள உலகில புகழ்பெற்ற படைப்பாக உள்ளது மலையாள மொழியின உரைநடை வளர்ச்சிப் போக்குகளை எடுத்துக் காட்டும்.ஒரே நூல் இதுவே யாகும.

மொழி இயலில் பேரார்வம் மிக்கவர் மாரார் தென் வடமொழிகளில் பண்புக் கூறுகளை நன்கு ஆராய்ந்து 'வரித சில்பும்' எனும் பெயரில் ஒரு நூலை வெளியிட்டுள்ளார் மற்றும் இவரது கட்டுரைகள் பலவும் நூல் வடிவில் வெளிவந்துள்ளன 'பதினஞ்சு உபந்நியாசங்கள்' (பதி

இடைக்காலத்தில் இவர் வளர்த்துக் கொண்ட ஐம்ப தாண்டு பெரும் புலமையின் விளைவாக ஐம்பது நூல்கள் வெளிவந்து மலையாள இலக்கியப் பயிரைச் செழுமைப் படுத்தின இவரது நூல்கள் அனைத்தும் புத்திலக்கியப் படைப்புக்கள் அல்லவெனினும் அவை புத்திலக்கியச் சிந்தனைக்கு வலுவூட்டுவன என்பதில் ஐயமில்லை.

பல்வேறு துறைகளைப் பற்றிய நூல்களை இன்று எழுதிக் குவிததுள்ள இவர் தொடக்கத்தில் தலைசிறந்த 'வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்' என்ற முறையிலேயே அறிமுகமாகி புகழ்பெற்றார் இன்றுமகூட இவரளவுக்கு வாழ்க்கை வரலாறுகளைச் சுவைபடச் சித்தரிக்கும வேறு மலையாள எழுததாளாகளைக் காண்பதரிது 'மென் ஆஃப் லெட்டர்ஸ' என்ற ஆங்கில நூலின் ,பாணியில் மலையாளத்தில் "கேரள பாஷா ப்ரணயிகள்" (கேரள மொழி காதலர்கள்) என்ற தலைப்பில் வாழ்க்கை வர லாற்றுத் தொடர் நூல்கள் பலவற்றை எழுதி வெளியிட் டார் வாழ்க்கை வரலாற்றைச் சுவைபடக் கூறுவதோடு அவர் தம் படைப்புக்களையும் திறமபடத் திறனாய்வு செய்வது இவரது இயல்பு இதன்மூலம் இந்நூல்கள் வாழ்க் கை வரலாற்று நூல்களாகவும் அதே சமயத்தில் தலை சிறந்த திறனாய்வு நூல்களாகவும் அமைந்தன. அவற்றுள் மிகச் சிறநத திறனாய்வு நூலாக 'மகாகவி கே. சி" என்ற வாழ்க்கை வரலாற்று நூல் இன்றும் அறிஞர்களால் போறறப்படுகிறது.

தனித் திறனாய்வு நூல்கள் பலவற்றையும் இவர் எழுதியுள்ளார் காய்தல் உவத்தல் இன்றி நடுவு நிலைமை யில் நின்று திறனாய்வு செய்வதோடு புத்துலகத் திறனாய் வுப் போக்கிற்கேற்ப புது வழி வகுத்துத் திறனாய்வு செய் வதும் இவரிடமுள்ள குறிப்பிடத்தக்க சிறப்பம்சமாகும் "சாகித்திய சமீக்ஷ" ' மிஸ்ர காந்தி" 'ஸ்வர்ண ரஸ்மிகள்'

முதலியன அவற்றுள் சில சிறந்த திறனாய்வு நூலாகும் இவரது விமர்சனத் திறனுக்கும் ஆழ்ந்த புலமைக்கும் நடு நிலை பிறழாப் பண்புக்கும் பொது நோக்குக்கும் இவை என்றும் கட்டியங்கூறி நிற்பனவாகும்.

தியனாயவுத் துறையில் நக்கீர உணர்வுமிக்க இவர் உண்மைக்குப் புறம்பான கருத்துக்கள் எதையும் அவை எங்கிருந்து வந்தாலும் உரமாக எதிர்த்துப் போராட சிறி தும் தயங்கியதில்லை ஒரு சமயம ஆசான எழுதிய 'காரூர்' என்ற நூலைப் படித்தறிந்த திறனாய்வு மேதைகள் எனக் கருதப்பட்ட சிலர் பலமாக எதிர்த்ததோடு திறனாய்வு எனற பெயரால் அந்நூலைக் குறை கூறினர் உணமைக்கு புறம்பான அககூற்றுக்களை எதிர்த்து இவர் பலமாகப் போராடினார் ஆசானை நனகுணர்ந்த அறிஞர்கள் பல ரும் அந்நூலை நடுவு நிலைமையோடு ஆய்நது வெளி யிட்ட கடடுரைகளையெல்லாம் திரட்டி அவற்றை நூல் வடிவில் வெளியிட்டு அந்நூலின் சிறப்பை—ஆசானின ஆற்றலை உலகறிய உணர்த்தி வெற்றி பெற்றார் அவ் வாறு வெளிவந்த திறனாய்வுக் கட்டுரைத் தொகுப்பே ' பண்டித சதஸ்'' எனும் நூல்.

மலையாள இலக்கிய வரலாற்றைப் பொருத்தவரைக் கும் இவரளவுக்கு ஆழ்ந்த பரந்த ஆராய்ச்சிப் புலமை யுடையவர்கள் ஒரு சிலரையே இனறு நாம் காண முடியும் கருத்து வேறுபாடுகள் மலிந்த இத்துறையில் இவர் தனது முடிந்த முடிவுகளாக சில கருத்துக்களை அவ்வப்போது கட்டுரை வடிவில் வெளியிட்டு வருகிறார். இத்துறையில இவருக்குள்ள பெரும் புலமைக்கும் ஆராய்சசித திறனுக் கும் ஏற்ற சான்றாக இன்று விளங்கும் நூல தென் மொழி கள் புத்தக டிரஸ்டால் வெளியிடப்பட்டுள்ள ''மலை யாள சாகித்தியம்'' எனும் நூலாகும் மற்றும் எஸ்.பி.சி.எஸ். நிறுவனம் வெளியிட்டுள்ள முதல் மலை யாள அகர முதலியான ''குண்டர்ட் அகராதி'' எனும்

நூலுக்கு இவர் வழங்கியுள்ள அணிந்துரையும் கோவிந்தப் பிள்ளை எபைார் வெளியிட்ட 'பாஷா சரித்ரம்' எனும் நூலுக்கு எழுதியுள்ள அணிந்துரையும் இவரது மொழி வரலாற்றுப் புலமைக்குச் சிறந்த எடுததுக்காட்டுகளாகும்.

முப்பதுக்கு மேற்பட்ட உரைகளும் எழுதி வெளி யிட்டுள்ள இவர் மாணவர்களுக்கென பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். 'ஆட்ட கதகள்' (கதகளிக் கதைகள்) 'துளளலகள்' 'கிருஷ்ண கத' 'அத்யாத்ம ராமாயண' 'மகாபாரத' ஆகியவற்றின பகுதிகள் சில வற்றைத் தொகுத்து உரையுடன் வெளியிட்டுள்ளார். இவை கடின நடையிலான மலையாள இலக்கியங்களை யும் வடமொழி இலக்கியங்களையும் எளிதில் புரிநது கொள்ள உதவுவநோடு பழைய மலையாள கடின நடை இன்றைய எளிய நடை இலச்கியத்திறகும் வடமொழி மலையாள இலக்கியத்திற்குமிடையே இணைப்புப் பால மாகவும் விளங்குகினறன மாணவர்களுக்கான பல இலக் கண நூல்களை எழுதி வெளியிட்டுள்ள இவர் 'சாகிததிய விலாசம்' என்ற கவிதைத தொகுப்பையும் ருக்மணி ஸ்வயம்வரம்' என்ற நாடகத்தையும் மஞ்செருவிலே பூதம்' (மலைச்சாரல் பூதம்) என்ற புதினததையும் 'ரசிகன் கதகள்' என்ற சிறுகதைத் தொகுப்பையும் வெளி யிட்டுள்ளார்.

இவரது இலக்கியத் தொண்டின் சிகரமாக இனறு விளங்கிவரும் 'சாகித்திய பரிஷத்' வளர்ச்சிக்காக இவர் அரும்பாடுபட்டு வந்துள்ளார் ஒரு சமயம் பரிஷத்திற்கேற் பட்ட பொருளாதார நெருக்கடியைத் தீர்க்க தன் மனைவி யின் நகைகளை விற்றிருக்கிறார் என்றால் அதன்மாட்டு இவருக்குள்ள ஆர்வததை என்னென்பது!

இவரது தொண்டு இத்தோடு நிற்கவில்லை பரிஷத் தின் சார்பில் வெளிவந்த 'பரிஷத் த்ரைமாசிகம்' என்ற

இலக்கிய இதழுக்கு ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். மற்றும் 'சாரஸ்வத போதினி' 'கைரளி' முதலிய இதழ்களின் ஆசிரியராகவும் விளங்கியுள்ளார்

ஐம்பதாண்டுகளுக்கு மேல் மலையாள இலக்கியத் துறைக்குப் பெருந்தொண்டாற்றி தனது முதுமையிலும் ஓய்வின்றி உழைத்த அன்னாரது தொண்டைப் போற்றும் வகையில் இலக்கிய உலகம் அவருக்கு 'சாகித்திய குசலன்' எனப் பட்டமளித்துப் போற்றி வருகிறது. பல்கலைப் புலமையும் ஆழ்ந்த சிந்தனையும் குன்றாத முயற்சியும் தளரா ஆர்வமும் ஒருங்கே பெற்று மலையாள இலக்கிய உலகின் குருதேவராகப் போற்றப்படும் இவரது பெயர் மலையாள இலக்கிய வரலாற்றில் அழியா முத்திரையாக விளங்கும் என்பது திண்ணம்.

# பாலாமணியம்மா

புத்துலக மலையாள இலக்கிய வளர்ச்சியில் பெண்களுக்கும் கணிசமான பங்குண்டு என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. மறுமலர்ச்சி இலக்கியத்துறைகள் அனைத்திலும் அவர்தம் கைவண்ணம் கலந்துள்ளது. இருபதாம் நூற்றலாண்டின் தொடக்கத்தில் உரைநடையும்செய்யுளும் கலந்து உருவாக்கிய 'சுபத்ரா அர்ஜுனா' என்ற உயர்ந்த இலக்கியத்தை வடித்துக் கொடுத்த இக்காவு அம்மாவைப் பின்தொடர்ந்து பல பெண் எழுத்தாளர் வீறுடன வெளிப்பட்டனர். அவர்களுள் பெண் கவிகட்குப் பஞ்சமில்லை.

'தாய்மைக் கவி' என இலக்கிய உலகால் போற்றப்படும் நாலப்பாட் பாலாமணியம்மா இக்கால மலையாள பெண் கவிகளுள் தலையாயவராக மதிக்கப்படுகிறார். இவர் தொடக்க காலம் தொட்டே தனக்கென தனி வழி வகுத்துத் தம் இலக்கியப் படைப்புக்களைத் திறம்பட உருவாக்கி வருகிறார்.

'உணர்ச்சிப் பாடல்'களை (Lyric) உருவாக்குவதில் இணையற்றவரான பாலாமணியம்மா தனித்துவச் சிந்தனைப் போக்குடையவர் ஆவார். மற்றவர்களின்றும் நடை, அமைப்பு ஆகியவற்றில் சற்று மாறுபட்டவராகக் காட்சிதரும் இவரை உருவாக்கிய பெருமை புகழ்பெற்ற மலையாள இலக்கிய வித்தகரான நாலாப்பாட் நாராயண மேனனையே சாரும்.

பள்ளியில் அதிகம் பயிலாத பாலாமணியம்மாவுக்கு மாமன் நாலாப்பாட் நாராயணமேனனே தக்க ஆசிரியராக அமைந்தார். அவரது பெருந் துணைகொண்டு மலையாளம், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில்

நிறை புலமை பெற்றதோடு எழுத்தாற்றல் மிக்க படைப் பாசிரியையாகவும் உருவானார், அக்காலத்தில் நாராயண மேனனின் இல்லம் மகாகவி வள்ளத்தோல் போன்ற கவிஞர்களின், சமூக சீர்திருத்தவாதிகளின் சங்கமத் தல மாக விளங்கியது. அத்தகைய பேரறிஞர்களின் வருகையும் கலந்துரையாடலும் பாலாமணியின சிந்தனைக்கும் செழுமைக்கும் இலக்கிய உணர்வுக்கும் உரமூட்டுவனவாக அமைந்தன எனலாம்.

மகாகவி வள்ளத்தோலின் அரிய முனனுரையுடன் வெளிவந்த கவிதைத தொகுப்பான 'கூப்புகை'யே இவரது முதல் கன்னிப் படைப்பாகும. முதல் நூலே இவரது வளர்ந்துவரும் படைப்பாற்றல் திறனுக்கு தக்கதோர் சான்றாக அமைந்தது இவரது தததுவச் சிந்தனைக்கும் அழகுணர்சசியை பேராற்றலோடு வெளிப்படுத்தும திறனுக்கும தக்க உரைகல்லாக விளங்கும் இந்நூலைத் தொடர்நது இதுவரை பதினைந்திற்கு மேற்பட்ட கவிதைத் தொகுப்புகளை வடித்துத் தந்துள்ளார். அவற்றுள் மிகச் சிறந்த படைப்பாக விளங்குவது 'அம்ம' (தாய்) கதைப் படைப்பாகும். கலையழகோடு தத்துவச் சிந்தனை கைகோாததுக் குதிபோடும் இந்நூல் மலை யாளக் கவிதை இலக்கிய உலகில் என்றும இறவாப் பெரும் புகழோடு வாழும் பெற்றியுடையதாகும்.

தாய்மை உணர்வை இவரளவுக்கு எதிரொலித்த கவிஞர்களை இலக்கியஉலகில் காண்பதரிது.பெண்களாகப் பிறந்த எல்லோருக்குமே இயல்பாயமைந்துள்ள தாய்மைப் பண்பை எல்லோராலும் எதிரொலிக்க முடிகிறதா? அதற்குத் தனி ஆற்றலும் மனப்பக்குவம் அன்றோ தேவைப்படுகிறது! அததகைய அருந்திறனை 'கருவிலே திரு'வாகப் பெற்று எதிரொலிப்பவர் பாலாமணியம்மா. தாயுள்ளத்தின் விரிவையும் பொங்கி வழியும் மகிழ்வை யும் எழிலோவியமாகத் தீட்டி படிப்போரின் உள்ளத்தை

இதமாகப் பண்படுத்திவிடுகிறது. இழையூடுபாவாக உள்ள தாய் சேய் உறவுத் தத்துவத்தை விண்டுரைக்கும இவர் பேராற்றல் கண்டு திகைத்து விடுகிறோம, பல்வேறு பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு தாய்மையின் சிறப்பினை விளக்குவதன் மூலம் படிப்போரின் சிந்தனையைத் தூண்டி விடுகிறார்.

'தாய்மை நிலை வாழ்க்கையின் சிக்கல்களையும் குழப்பங்களையும் நன்கு புரிந்து கொள்ளச் செய்யும மிகச் சிறந்ததொரு பக்குவநிலை' என்பது அவரது அசைக்க முடியாத நமபிக்கை.அத்தகைய கருத்தின் அடிப்படையில் தாய் சேய் தொடர்பைக கொண்டு வாழ்வின் பல்வேறு சிக்கல்களையும எளிதாக விளக்கி விடுகின்றார். மனித இனத்தினபால் மட்டுல்லாது உயிருள்ள உயிரற்ற உலகங் களின்பாலும் தாயன்பு செலுத்தி, ஞானியர் கூறும் வாழ் வின் 'முழுமைக் காட்சி யைக் காணத் தூண்டுகிறார்

'தாய்மை உணர்வு' எனும் அச்சில 'நம்பிக்கை', 'முயற்சி' எனும் இரு சக்கரங்களைக் கொண்டு விரைந்து ஓடும் இவரது கவிதை வண்டி வாழ்க்கை இன்பத்தின் முடி விடத்தை அடையத் துணை செய்வதாயுள்ளது.

'குட்டிகளிடையில்' (குழந்தைகளிடையே) என்ற கவிதை பரிவுணர்வு கொண்ட தாயுள்ளத்தின் தகை மையை அழகுறப் படப்பிடித்துக் காட்டுகிறதுஉலக உயிா களனைத்தையும் ஒன்றாக நோக்கும் அனைத்துலக ஆத மாவைப் பெறுவதன் மூலம் அனைத்துலகத் தாய்மையை அடைய வழி வகுக்கிறார்.

'மாதரு ஹ்ருதயம் என்ற கவிதையில் குழந்தையைப் பெற்று வளர்த்து பேரன்பு காட்டுவதால் மட்டும ஒரு பெண் உண்மையான தாய்மையை அடைந்துவிட முடி யாது எனறும் அழகுள்ளவைகளுடன் அழகற்றவற்றையும் உயிருள்ளவைகளுடன் உயிரில்லாதவற்றையும் ஒன்றாகப்

பாவித்து அன்பு காட்டும் பண்பினை ஒருத்தி என்றைக்குப் பெறுகிறாளோ அன்றுதான் அவள் தாய்மையின் நிறைகுடமாக முடியும் என்றும் அவளே அனைத்துலகத் தாய்மையுடையவளாவாள் என்றும் அழகுபடக் கூறித் தெளிவுபடுத்துகிறார்.

இவரது மற்றொரு கவிதைத் தொகுப்பான 'சோபானம்' (படிகள்) குறிப்பிடத்தக்க ஒன்றாகும் இஃது ஆசிரியையின் வாழ்க்கைச் சாயலையும் அனுபவ முத்திரை களையும் பளிச்சென விளக்குவதாகும். இதில் அடங்கி யுள்ள 'நாலு கெட்டில்' (வீட்டில) 'வழி வாக்கில்' (நாற் சந்தியில்) 'வெளிச்சத்திலேக்கு' (வெளிச்சத்தை நோக்கி) என்ற முப்பகுதிகளிலும் பாலாமணியம்மாவின் உள்ளத் தின் வளர்ச்சியை படிப்படியாக விளக்குவனவாகும்

இவரது குருவும் மாமாவுமாகிய நாலாபாட் நாராயண மேனனின இறப்பைக் குறித்து இரங்கற்பா வாகப் பாடிய 'லோகாந்தரங்களில்' (பல்வேறு உலகங் களில்) எனும் நூல் உடலைவிட்டுப் பிரிந்த ஆத்மா கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் அறிந்தவாறே பல்வேறு நிலைகளைக் கடந்து வானத்தின் வழியே மோட்சத்தையடைவதைச் சித்தரிப்பதாகும் இதன் வாயி லாகப் பிறப்பு வாழ்க்கை வீடுபேறு ஆகிய அம்சங்களை கற்பனை வளத்தோடு படிப்போரின் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் தெளிவுபடக் கூறுகிறார்.

அவரது கவிதைப் படைப்புக்களில் குறிப்பிடத்தக்க வேறு சில படைப்புகள் 'ஸ்திரீ ஹ்ருதயம்' (பெண் இத யம்) 'பாவனையில்' (கற்பனையில்) 'களிகொட்ட' (விளையாட்டுக் கூடை) 'ப்ரணாமம்' முதலியவைகளாகும்

இவரது தலைசிறந்த கவிதைப் படைப்புகளுள் ஒன் றாகக் கருதப்படும் 'முத்தசி' (பாட்டி) சாகித்திய அக்கா தெமி (1966) பரிசு பெற்ற நூலாகும். இப்பரிசினைப்

பெற்ற முதல் மலையாளப் பெண்மணி என்ற வகையிலும் இவருக்குப் பெருஞ் சிறப்புண்டு. இத்தொகுப்பில் உள்ள கவிதைகளுள் ஒன்றான முத்தசி' எனும் கவிதையையே நூலின் தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது. தாய்மைப் பண்பையே கருவாகக் கொண்டு தொகுக்கப்பட்ட இஃது தாய்மைப் பண்புக்கு இலக்கணம வகுக்கும் அரிய படைப் பாகும்.

தத்துவ உள்ளடக்கமும் கருத்தாழமும் நடை நயமும் பொருட் சிறப்பும் கவிதைப் போக்கும் உணர்ச்சிச் செறிவும் கற்பனைக் கவர்ச்சியும் கொண்ட 'முத்தசி' இக்கால மலையாள இலக்கிய உலகிற்குக் கிடைத்த மதிப்புமிக்க மணியாரமாகும்,

தன் மாமா நாலாபாட் நாராயண மேனனின் உறவால் இலக்கியம், தத்துவம், சமுதாய சீர்திருத்தம் ஆகியவற்றில் ஆழ்ந்த ஈடுபாடும் நாராயண மேனனின் நல்ல நண்பரான வள்ளத்தோலின இலக்கியத் தொடர்பால் கவிதை உள்ளமும் உணர்ச்சிப் பெருக்கும் கொண்ட பாலாமணியம்மா கருத்தாழமிக்க உணர்ச்சி கொப்பளிக்கும் கவிதைகள் இயற்றி மலையாளக் கவிதை உலகை வளமூட்டியவர் என்பது வரலாற்று உண்மையாகும்.

# டாக்டர் எஸ். கே. நாயர்

'மலையாளத் தமிழர்' எனத் தமிழுலகாலும் 'தமிழ் மலையாளி' என மலையாள இலக்கிய உலகாலும் ஒருமுக மாக வர்ணிக்கப்படும் டாக்டர் எஸ். கே. நாயர் அவர்கள் மலையாளம்—தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் தேர்ந்த புலமையாளராக இன்று திகழ்நது வருகிறார். மலையாள-தமிழ் இலக்கிய உலகின் இணையற்ற இணைப்புச் சக்தி யாக விளங்கும் இவர் உரையாசிரியர், திறனாய்வாளர், கவிஞர், கதாசிரியர், கட்டுரையாளர், மொழி பெயர்ப்பாசி ரியர் எனப் பல்வேறு இலக்கியத் துறைகளிலும் தனக் கெனத் தனி வழி வகுத்து முத்திரை பதித்து வருபவரா வார். இலக்கியத் துறையால் இவர் பெற்ற பயனைக காட்டிலும் இவரது தொண்டால் இலக்கியத் துறை பெற்ற பயன் எண்ணிறந்தலையாகும்.

'கருவிலே திரு' எனபதற்கிணங்க பள்ளிப் பருவத் திலேயே மலையாள மொழி இலக்கியத்தினபால் இவருககு அளவற்ற ஆர்வம ஏறபட்டுவிட்டது இன்னும் சற்று உயர்வு நவிறசியாகக் கூற வேணடுமானால் இளமையி லேயே இவர் உளளததில இலககிய உணர்வு கொழுந்து விட்டெரிய தொடங்கிவிட்டதெனலாம். கையில் கிடைக் கும் மலையாள மொழி இலக்கிய ஏடு எதுவாயினும் அதை ஆழ்ந்து படிதது இனபுறுவதோடு, தான அனுபவிக் கும் இலக்கிய இன்பத்தைப் பிறரிடம் கூறிப் பேருவகை கொள்வது இவரது வழககமாகும்.

கேரளத்திலுள்ள ஆல்வாயில் 1917ஆம் ஆண்டில் சாதாரண ஏழைக் குடும்பமொனறில் பிறந்த திரு. நாயர் வறுமைக்கும் புலமைக்குமிடையே ஊசலாடும் பெண்டுல மாகவே தம் இளமைக் காலப் படிப்பை முடித்தார். பள்ளி யில் படிக்கும்போதே புலமை மிகுந்தவராகத் திகழ்ந்த இவர் தம சக மாணவர்களுக்கு 'ட்யூஷன்' சொல்லிக் கொடுத்து அதனமூலம் வரும் வருமானததைக் கொண்டே

தன் கல்விச் செலவைக் கவனித்துக் கொண்டார். கல்லூரியில் காலடி வைத்தபோதும் இதே நிலைமை நீடித்தது தான் படித்த இண்டர்மீடியட் வகுப்புப் பாடங்களுக்கு 'நோட்ஸ்' அச்சடித்து விற்று அதனைக் கொண்டு தன் கல்லூரிக் செலவைச் சரிக்கட்டினார். வறுமையின கொடிய தாக்குதல் அவரைக கல்லூரிக் கல்விக்கு முற்றுப் புள்ளி வைக்கச் செய்தது.

கல்லூரிப் படிப்புக்குப் புள்ளி வைத்தாலும் அவரது உள்ளத்தில் அலைபாய்ந்து கொண்டிருந்த படிபபார்வத்துக்கு—இலக்கியப் புலமை வேட்கைக்கு அவரால தடை போட முடியவிலலை. அடுதத ஆண்டே மலையாளமொழி விததுவான் தேர்வுககு 'பிரைவேட்' மாணவனாகத் தேர்வு எழுதி மாநிலத்திலே முதலாவதாகத தேர்வு பெற்றார்.

பள்ளிகளில் மொழிப்பண்டிதராகப் பணியாற்றிக் கொண்டே பி.ஓ.எல (ஹானர்ஸ்) எம் ஏ; பட்டங்களைப் பெற்றார் இவரது இலக்கியப் பெரும புலமையை மதித்த சென்னைப் பல்கலைக் கழகம் 1944ஆம் ஆண்டில் 'டாக்டர்' பட்டம் பெறுவதற்குரிய ஆராய்ச்சி மாணவனாக ஏற்றுக் கொண்டது. இச்சமயத்தில் இந்தக் கல்லூரி மாநிலக் கல்லூரியும் அடுத்தடுத்து இவரை மலையாள விரிவுரையாளராக ஏற்றுக் கொண்டன. 1947ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகம் இவருககுத் துணைப் பேராசிரியர் பதவி தந்து ஏற்றுக்கொண்டது. பின்னர் 1951இல ஆராய்ச்சிப் புலமைக்காக 'டாக்டர்' பட்டமளிததுப் கௌரவித்த தோடு பல்கலைக் கழக மலையாள மொழித் துறைத் தலைவராகவும டாக்டர் நாயார் அவர்களை ஏற்றுப் பெருமைப்படுத்தியது. உண்மையான இலக்கிய ஆர்வமும் கடுமையான உழைப்பும் இருந்தால் கல்வித் துறையில் எததகைய ஏற்றமும் பெற முடியும் என்பதற்கு டாக்டர் நாயரின் வாழ்க்கை நல்லதோர் எடுததுக்காட்டாக உள்ளது.

இவர் இலக்கியத் துறையை மணந்து கொண்டாலும் இவரது உள்ளங் கவர்ந்த காதலியாக அமைந்தது நடன, நாடகக் கலைததுறையே யாகும். பள்ளிப் பருவம் தொட்டே இலக்கியம் போனறு நடன நாடகத துறைகளிலும் அளவுகடந்த ஆர்வமும் ஈடுபாடும உள்ளவராக இருநதார். இளமையிலேயே கதகளி நடனத் துறையில் நிபுணர்களாக விளங்கிய நடனககாரர்களும மூக்கினமேல் விரலை வைதது வியந்து போற்றும வண்ணம் கதகளி நடனமாடுவதில சிறந்து விளங்கினார். தனக்கென ஆசான் வைத்து நடனம கறறுக்கொள்ள தனது வறுமை இடந் தரவிலலையாயினும் நடனம் ஆடும் கலைஞர்களின் அங்க அசைவுகளை, மெய்ப்பாடுகளை, உணர்ச்சிகளை முத்திரைகளாக வெளிப்படுததும முறை களை, பிற நடன நுணுககங்களையெல்லாம் கூர்ந்து கவனித்து ஏகலைவன் நிலையில அவைகளை மானசீக மாகக் கற்றுத் தேர்ந்தார். இளமையிலே அத்துறையிலும் திறைபுலமை பெற்று கதகளி நிபுணர்களை வியப்பிலாழ்த் தினார். நடனத்துறை போனறே நாடகத்துறையும இவரைத் தன வயப்படுத்திக கொணடது. இவரது நடிப் பாற்றலைக் கணட திரைப்படத தயாரிப்பாளர்கள் இரு முறை இவரைக் கதாநாயகனாக வைத்துப் படமெடுக்க முயனறனர். எதிர்பாராத சில காரணங்களால் அவர்தம் எண்ணம் ஈடேறாமலே போய்விட்டது.

சுமார் ஐம்பதுக்கு மேற்பட்ட நூலகளை எழுதி யுள்ள டாக்டர் நாயர் அவர்கள் தம் முதல் நூலை 1947ஆம் ஆண்டில் வெளியிட்டார். 'ஞான் கணட ஸாஹித்தியக்காரணமார்' எனும இந்நூல் அக்காலத்தில் உயிரோடு வாழ்நது வநத புகழ் பெறற கவிஞர் பெரு மக்களாகிய உள்ளூர், வளளத்தோல், ஜி. சங்கர குறுபபு, எம.பி. பால், ஏ. பாலகிருஷ்ண பிள்ளை, பேராசிரியா ஜோசஃப் முணடசேரி, சங்ஙமபுழா போன்ற மலையாள எழுத்துலக மேதைகளின் இலக்கியத் திறனை அவர்தம் படைப்பு வழி ஆராயும் கட்டுரைகளின தொகுப்பாகும். அப்போது சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த

'ஜெய கேரளம்' எனும் வார இதழில் வெளிவந்த கட்டுரை களின் தொகுப்பே இந்நூல். காய்தல் உவத்தலின்றி ஒரு நிலைமையில் மேற்கண்ட கவிஞர்கள் எழுத்தாளர்களின் குறை நிறைகளை ஆராயும் இந்நூல் மலையாள மக்களி டையே பெரும் வரவேற்பைப் பெற்றது. தாங்கள் வாழும் நாட்களிலேயே தங்கள் எழுத்தின் குறை நிறைகளைச் சுட்டும் இந்நூலை அவர்களும் வரவேற்றுப் போற்றியது இங்கு குறிப்பிடத் தக்கதாகும.

இவர் கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே ஆங்கிலக் கவிஞர்களின் கவிதைகளையும இலக்கியப் படைப்புக் களையும் கருத்தூன றிக் கற்றார். அவைகளைப் படிக்கும் போது ஏற்பட்ட உணர்வுகளையும் அனுபவங்களையும் அடிப்படையாகக் கொணடு கட்டுரைகள் பலவற்றை எழுதினார். பிற்காலத்தில் அவைகளையெல்லாம் தொகுத்து 'கலா சிந்தகள்' (கலைச் சிந்தனைகள்) எனும் தலைப்பில் நூல் வடிவில் வெளியிட்டுள்ளார் இந்நூல் பின்னர் பி.ஏ. வகுப்புகளுக்குப் பாட நூலாகவும் அமைந் தது. இதே போக்கில வேறு சில நூல்களையும் வெளி யிட்டுளளாா. அவைகளும் 'நர்ம்ம சல்லாபம்', 'சம்ஸ்கார கேதாரம்,' 'விசார மஞ்சரி,' 'சரியும் தெற்றும்' முதலியன முக்கியமானவைகளாகும்,

இவரது மலையாள மொழிப் புலமைக்கும் ஆற்றலுக் கும் சுட்டியங்கூறும் மற்றொரு சாதனை டாக்டர் ரா.பி சேதுப்பிள்ளை அவர்களோடு இணைந்து திராவிட மொழி மரபுகளைப் பற்றிக் கூறும் அகராதியை தொகுத்த தாகும்.

இத் தொகுப்பிற்காக ஆயிரக்கணக்கான மலையாளச் சொறகளைத் தொகுததுக் கொடுத்து உதவியுள்ளார்.

இச்சொல் தொகுப்பின்போதுதான் இவரது பார்வை தமிழ் இலக்கியத்தின்பால் திரும்பியது. இத்திருப்பு முனைக்குக் காரணம் டாக்டர் ரா.பி.சே. அவர்களின

உறவு ஆகும் ஆழ்ந்த தமிழறிவு பெற தமிழ் இலக்கியங்களையெல்லாம் தானாகவே படிக்க முனைந்து அதில் ஓரளவு வெற்றியும் பெற்றார்

புற நானூற்றைப் படித்த இவர் அதன் உயர்வை கேரள மக்களும் உணர்ந்து அனுபவித்து மகிழ வேண்டும் என எண்ணி அதன் பல பாடல்களை பாடல் வடிவிலேயே மலையாளத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். பின்னர், திருக்குறளை மலையாளத்தில மொழி பெயர்த்தார்.

பின்னர், இவரது பார்வை 'கம்ப ராமாயணத்தின்' பால் திரும்பியது. அதன் இலக்கியச் சுவையில் திளைத்து இன்புறற டாக்டர் நாயர் மூலச் சுவை சிறிதும் குன்றா வண்ணம் கவின் மலையாளத்தில் மொழி பெயர்த்து சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக வெளியிட்டுள்ளார். சங்க இலக்கியச் செல்வங்களையெல்லாம் மலையாளத்தில் பெயர்க்கத் துடித்த டாக்டர் நாயர் அவர்கள் சிலப்பதிகாரத்தை சேர நாடாகிய கேரளத்தின் இலக்கியச் செல்வமாகவே எண்ணி இறும்பூதெய்தினார்.

இவர் இதுவரை மூன்று நாவல்களையும் எழுதியுள்ளார். அவற்றுள் சிறந்ததாகக் கருதப்படும் 'அய்யப்பன்' நாவல் தமிழிலும் ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது. இவர் கதகளி நாடக நூல் ஒனறையும் சிறுகதைத் தொகுப்பு நூல் ஒனறையும் கட்டுரைத் தொகுப்புகள் பலவற்றையும வெளியிட்டுள்ளார். கிரேக்க, வடமொழி, ஆங்கில நாடகங்கள் பலவற்றை பெயர்த்துள்ள இவர் 'என் சரிதம்' தமிழ் நூலையும் மலையாளத்தில் பெயர்த்துள்ளார்.

மலையாளத்தை தமிழ்த்தாய் பெற்றெடுத்த சேய் மொழியாகக் கருதிய டாக்டர் நாயர் இரு மொழி உறவுக்கு இடையறாது உழைப்பதைத் தன் வாழ்க்கையின் உயரிய குறிக்கோளாகக் கொண்டு உழைத்தவராவார். மலையாளம், தமிழ் ஆகிய இரு மொழி இலக்கிய வரலாற்றிலும் எதிர்காலத்தில் இவர் பெயர் சிறப்பாக இடம் பெற்றிருப்பதில் வியப்பில்லை.

# INDRAYA THENNAKA ILAKKIA POKKU

(Modern Trends in Southern Literatures)

*Author :*
**MANAVAI MUSTAFA**

தென்னக மொழியான கன்னடம், தெலுங்கு, மலையாள மொழிகளை இன்றையப் போக்கை வாழும் எழுத்தாளர்களின் இலக்கியப் படைப்பு வழியே நுணுகி ஆராயும் முதலாவது நூல்.

*Published by :*
**MEERAA PUBLICATION**
AE 103, ANNA NAGAR
CHENNAI-600 040.



